கரன் என்று பெயர். கீர்த்திவாய்ந்தவரே! அவ்விருவருக்குள் சாந்திகரன் என்பவன் கல்வியில் விருப்பங்கொண்டு சிறு வயதிலேயே புறப்பட்டு எங்கேயோசென்றான். அவனுடையசகோதரனாகிய சங்கரதத்தனே என்னை மணந்துகொண்டவன். யாகத்திற்காகப் பொருளை மிகுதியும் வழங்கும் யக்ஞதத்தனுடைய குமாரி நான். புருஷன் வீடு வந்த சில காலத்திற்கெல்லாம் என் மாதுலராகிய அக்னிதத்தர் மரணமாயினர். அவருடன் என் மாமியாகிய அவர் மனைவியும் மாண்டனர். நான் கர்ப்பிணியாயிருக்குந் தருணத்தில் என் பதி என்னை விட்டுப்பிரிந்து தீர்த்தயாத்திரை சென்று ஏதோ துக்கத்தினால் ஸரஸ்வதி நதியின் பிரவாகத்தில் தன் சரீரத்தை யொழித்தார். இந்தச் செய்தி அவருடன் சென்றிருந்தவர்களால் நான் தெரிந்துகொண்டேன். கர்ப்பிணியானவள் அநுமரணஞ் செய்தல்கூடாதென்று பந்து ஜனங்கள் என்னைத் தடைசெய்தனர். இச்சமயத்தில் நாங்கள் வசித்துவந்த அக்ரகாரத்தில் திருடர்கள் புகுந்து கொள்ளையிட்டனர். அப்பொழுது நமது கற்பிற்கு ஏதேனும் பங்கம் நேரிடுமோ என்னும் பயத்தால் கிழிந்த வஸ்திரமுடுத்துக்கொண்டு மூன்று பிராமண ஸ்திரீகளுடன் ஓடினேன். அப்படிப் புறப்பட்ட நாங்கள் வெகுதூரம் போய்விட்டோம். அங்கே கஷ்டமான தொழிலைச்செய்து ஒருமாதம் வரையில் காலத்தைக் கழித்தேன். அவ்விடத்து ஜனங்களின் மூலமாக திக்கற்றவர்களுக்கு உதயன மகாராஜா அவர்களே துணைபுரிபவர் என்று தெரிந்துகொண்டேன். அதனால் இங்குவந்தேன் அம்மணி. இந்த இரண்டு புத்திரர்களும் என் தோழிமார்களாக என்னுடன் வந்தபிராமணஸ்திரீகள் இருவரும் என்னுடனிருக்கும்அச்சமயம் பிறந்தனர். இவர்கள் இரட்டையாகப் பிறந்தவர்கள். சோகம், தேசாந்திரம், வறுமை, இரட்டைப்பிரசவம் இவைகள் ஏககாலத்திலுண்டாயின. ஆச்சரியம்! பிர்மதேவர் ஆபத்துக்களுக்குள்ள வழியை என்னிடம் விரிவாக ஏற்படுத்தினர் போலும்! அம்மணி! இக்குழந்தைகளை வளர்க்க வழியில்லாது ஸ்திரீகளுக்குப் பூஷணமாகிய வெட்கத்தை மறந்து இராஜ சபையில் வந்து மகாராஜாவைக் கேட்டுக்கொண்டேன். ஆபத்தையடைந்த சிறு குழந்தைகளின் வருத்தத்தைப்பார்க்க யார் தான் சகிப்பார்? மகாராஜனுடைய ஆக்ஞையால் நான் இவ்விருகுழந்தைகளோடு தங்களிடம் வந்தேன். என்னுடைய விபத்துக்கள் வாயிற்படியில் தடைப்பட்டதுபோல் நிவிர்த்தியடைந்தன. இதுதான் எனது வரலாறு,



அம்மணி! என் பெயர் பிங்களிகை. சிறுவயது முதலாக அக்னிஹோத்ரம் முதலியன செய்துவந்தமையால் அந்த அக்னிப்புகைப்பட்டு என் கண்கள் பிங்களவர்ணமாயின. தேசாந்திரஞ்சென்ற எனது மைத்துனராகிய சாந்திகரன் இன்னும் திரும்பி வரவில்லை. எங்கிருக்கிறார் என்றுந் தெரியவில்லை என்றுரைத்தாள்.

இவ்வாறாய அவளுடைய வரலாறு தெரிந்ததும் வாசவதத்தை இந்தமாது நல்ல குலத்திற் பிறந்தவளென்பதிலும், பதிவிரதை யென்பதிலும் ஐயமில்லை என்று எண்ணி, "மாதே! இங்கு நமதரண்மனைக்குளந்தத்தேசத்திலிருந்தோ ஒருவர்வந்திருக்கிறார். அவர் புரோகிதராகவிருந்து வருகின்றார். அவர்பெயர் சாந்திகரன்" என்று கூறினாள். இதைக்கேட்டதும் பிங்களிகை மகிழ்வுற்றனள். அன்றிரவு கழிந்தது. மறுநாள் காலையில் புரோகிதரை வரவழைத்து அவர் வரலாறு கேட்டாள் வாசவதத்தை அவரைப் பிங்களிகையின் மைத்துனரென்று தெரிந்துகொண்டதும் ஆச்சரியமடைந்து, அவரைப்பார்த்து 'புரோகிதரே! இதோ உமது சகோதரரின் மனைவியிருக்கின்றார்பாருங்கள்' என்றுபிங்களிகையைக்காட்டினாள். உடனே சாந்திகரனுக்கு நினைவு வந்தது. பந்து ஜனங்கள் மரணமடைந்ததைத் தெரிந்துகொண்டான். பிறகு அந்தப் பிங்களிகையைத் தன் கிருகத்திற்கு அழைத்துச்சென்றான். தன் தாய்தந்தையரையும் சகோதரனையும் பற்றித் துக்கித்தான். பிங்களிகைக்குச் சமாதானஞ் சொல்லித் தேறுதலடைந்தான். வாஸவதத்தை அவ்விரு குழந்தைகளையும் தனக்குண்டாகப்போகும் புத்திரனுக்குப் புரோகிதனாகப் பாவித்தாள். பிங்களிகைக்கும் புரோகிதருக்கும் பூமிகளையும் பொருள்களையும் கொடுத்து அவ்விருபுதல்வருக்கும் நாமகரணஞ்செய்வித்து உற்சவங்கொண்டாடினாள். மூத்தவனுக்குச் சாந்திசோமன்என்றும், இளயவனுக்கு வைஸ்வானரன் என்றும் பெயரிட்டார்கள். குருடர் போன்ற ஜனங்களுக்கு, முன் செல்லும் அவர்களின் கர்மங்களே பலனடையும் புவியை அழிக்கின்றன. அப்பொழுது பௌருஷம், காரணமாக மாத்திர மாகின்றது. ஏனெனில், பிங்களிகையும் அவள் குமாரரும் சாந்திகரனும் ஒரே இடத்தில் ஐசுவரியத்தை அடைந்தார்களல்லாவா?

பின்னர் சின்னாட்கழிந்தன. அப்பால் ஒரு சமயம், அகல், மடக்கு இவற்றிற் சிலவற்றை யெடுத்துக்கொண்டு தன்னுடைய குழந்தைகள் ஐவருடன் ஒரு குசத்தி வாசவதத்தையிடம்

வந்தாள். அவளைக்கண்ட வாசவதத்தை பிங்களிகையை நோக்கி, "ஸகி! இந்த மாதுக்குக் குமாரர்கள் ஐவரிருக்கின்றார்கள். எனக்கு ஒரு குமாரனையுங் காணேன். இப்படிப்பட்டவர்களல்லவா புண்யத்திற்குப் பாத்திரமானவர்கள்! என்னைப்போன்றவர்கள் இவ்வாறேனும் இருக்கவேண்டாமா?" என்றாள். பிங்களிகை, "தேவி! தரித்திரர்களுக்கு இவ்வாறு பிரஜைகளுண்டாகின்றன. துக்கத்திற்கு ஏதுவாகவே இவ்வாறு அவர்கட்குக் குழந்தைகள் உண்டாகின்றன. தேவி! தங்களைப்போன்றவர்களிடம் உண்டாகும் குழந்தையே உத்தமமானதாகும். ஆகையால் அவசரப்படவேண்டாம். தாங்கள் சீக்கிரத்தில் தங்களுக்கேற்றவொரு தனயனை யடைவீர்கள்" என்று கூறினாள்.

இவ்வாறு பிங்களிகை சொல்லியும் சமாதானமடையாமல் நமக்குப் புத்திரபாக்கியமில்லாமற் போய்விட்டதே யென்னும் கவலையில் மனம் நொந்து வருந்துவாளாயினாள் வாசவதத்தை. அப்போது உதயனன், "பிரியே! பரமசிவ ஆராதனையால் உனக்குப் புத்திரனுண்டாகுமென்று நாரதர் கூறினாரல்லவா? ஆகையால் வரனையளிக்கும் பரமசிவனை ஆராதிக்க வேண்டும்" என்றுகூறினான். வாஸவதத்தை அதனை உசிதமெனக்கொண்டு சிவனைக்குறித்து விரதமிருக்க நிச்சியித்துப் புரோகிதர்கள் முன்னிலையில் விரதமெடுத்து அனுஷ்டிக்கலாயினள். அவளைப்பின்பற்றி உதயனன், மந்திரிகள் இராஜ்யத்திலுள்ளவர்கள்யாவரும் விரதமநுஷ்டிக்கலாயினர். அரசனும் அரசியும் மூன்றுநாள் உபவாச மிருந்தனர். அப்போது பரமசிவன், சந்திரசேகர ஜடாதரராய் அவர்கள் கனவிற்றோன்றி, "உங்களுக்கு மன்மதஅம்சமுடைய ஒரு புதல்வன் பிறக்கப்போகின்றான். அவன் எனதனுக்கிரகத்தால் வித்யாதரர்கள் யாவருக்கும் நாதனாகப்போகின்றான்" என்றருளிச்செய்து மறைந்தார். உடனே இருவரும் விழித்துக்கொண்டு பரமசிவன் கருணையை யெண்ணி யெண்ணி மகிழ்ந்தனர். விடிந்ததும் எல்லோருக்கும் இந்தக் கனவைப்பற்றித் தெரிவித்தார்கள். யாவரும் கேட்டுப் பரமானந்தமடைந்தனர். உதயனன், வாஸவதத்தை என்னும் ராஜதம்பதியாகிய இவ்விருவரும் தங்கள் உற்றாருடனும் ஊராருடனுங் கூடி உற்சவங்கொண்டாடி விரத பூர்த்தி செய்து பாரணை செய்தனர்.



அப்பால் ஒருநாள் ஜடாமகுடதாரியாய் ஒரு புருஷன் வாஸவதத்தையின் கனவிற்றோன்றி ஒரு கனியை யளித்தேகினன். இதனை வாஸவதத்தை அரசனுக்கறிவிக்க, அவன்கேட்டுத் தன் அமைச்சர்களுடனிருந்து மகிழ்ச்சியடைந்தான். கனியாகிய வியாஜத்தால் புத்ரபாக்கியத்தைக் கொடுத்தனர் சிவபெருமானென்று சிந்தித்து இனி நாம் கிருதார்த்தனானோமென்று மகிழ்வெய்தியிருந்தான்.



## இரண்டாவது தரங்கம்.



சரியான காலத்தில் வாஸவதத்தை கர்ப்பமடைந்தாள். அவள் தேகம் வெண்மையான காந்தியுடன்பிரகாசித்தது. அவள் முகமானது, அவள்கர்ப்பத்திலிருக்கும் காமனிடங்கொண்ட அன்பால் அருகில்வந்த சந்திரன்போல் விளங்கிற்று. தேவியின் மணிமயமான ஆசனத்தின் இருபக்கங்களிலும் இருந்த இரண்டு பிரதிமைகள், கணவனாகிய காமனிடங்கொண்ட அன்பால் ரதிதேவி, பிரீதிதேவி என்னும் இருவரும் வந்து நிற்பது போலிருந்தன. அச்சமயம் வாஸவதத்தையின் தோழிகள்தேவியை உபசரித்தார்கள். அப்படி உபசரிக்கும் அந்தப்பெண்கள், வாஸவதத்தையின் கர்ப்பத்திலிருக்கும் குழந்தை வித்தியாதரர்களுக்குப் பிரபுவாகப் போகின்றதால், அவரைச்சேவிப்பதற்கு இஷ்டங்களைக்கொடுக்கும் வித்தைகள்போல் விளங்கினார்கள். வாஸவதத்தையின் ஸ்தனங்களிரண்டும் தன் குமாரனுடைய பட்டாபிஷேக மகோற்சவத்திற்காக சியாமள வர்ணமமைந்த நுனியுடன்கூடிய இரண்டுசொர்ணக் கலசங்களை அமைத்து வைத்துக்கொண்டிருக்கின்றனள் இந்தப் பெண்மணி யென்று சொல்லுமாறிருந்தன. ஒரு சமயம் தேவி ரத்தினச்சுவர்களமைந்த கிருகத்தின் நடுவில் சுகமான ஸயனத்தில் படுத்திருந்தாள். நான்கு பக்கங்களிலும் இரத்தினக் குவியல்கள் குவிக்கப்பட்டிருந்தன. அவைகள், உண்டாகப்போகிற தேவியின் புதல்வன் எங்கே நம்மை ஆக்ரமிப்பானோவென்னும் அச்சத்தால் சலிக்கும் நீருடையனவாகி அருகே உற்றுத் தேவியைச் சேவிப்பனபோற் காணப்பட்டன. தேவி வசிக்கும் விமானத்தின் நடுவே யுள்ள பிரதிமையானது ஆகாயமார்க்கமாக நமஸ்கரிக்க வந்த

வித்யாதர ஸ்திரீபோல் விளங்கிற்று. அச்சமயம் தேவி அநேக கதைகளைக் கேட்பதில் ஆசை கொண்டாள். தேவி, தான் ஆகாய மார்க்கத்திலிருப்பதாகவும் வித்தியாதர ஸ்திரீகள் நவரஸங்களுடன் கானஞ்செய்து தன்னைச் சேவிப்பதாகவும் சொப்பனங்கண்டாள்; உடனே விழித்துக்கொண்டாள். அப்போது தான் ஆகாய மார்க்கத்திலிருந்தவாறே புவியிலுள்ள விநோதங்களைக் காணவும் விரும்பினாள். இது யௌகந்த ராயணனுக்குத்தெரிந்தது; இவன் அமைச்சர்தலைவனும் மகா புத்திசாலியுமானதால், மறுநாளே யந்திரம், மந்திரம், இந்திர ஜாலம் முதலிய பிரயோகங்களால் வாஸவதத்தை விருப்பத்தை நிறைவேற்றினான்.

பின்னொரு சமயம் வாஸவதத்தை வாஸகிருகத்திலிருந்தாள்; அப்போது வித்தியாதரர்களின் கம்பீரமான சரித்திரத்தைக்கேட்க வேண்டுமென்று விரும்பி அவ்விருப்பத்தை யௌகந்தராயணனுக்குத் தெரிவித்தாள். யௌகந்தராயணன் உடனே எல்லோரும் கேட்க அந்த வித்தியாதரர்களின் சரித்திரத்தைக் கூறுவானாயினான்.

தேவி! அம்பிகைக்குத் தந்தை ஹிமவான். அவன் பர்வதங்கட்கு மாத்திரம் ஆசிரியனல்லன். கௌரீபதியாகிய காளகண்டனுக்குங் குரு. அந்த ஹிமயமலையின் கண் வித்தியாதரர்களுக்குப் பிரபுவாகிய ஜீமூதகேது என்னும் ஒரு வித்தியாதரனிருந்தான். அவன் வீட்டில் ஒரு கற்பக விருக்ஷமிருந்தது. அது பரம்பரையாக அவனுக்கு அவன் விரும்பியவற்றை விரும்பியவாறளித்து வந்தது. ஒரு சமயம் அந்த வித்தியாதரன், அவ்விருக்ஷமிருக்கும் உத்தியானவனம் போய்த் தேவதையின் சொரூபமாகிய அந்தக் கற்பக விருக்ஷத்தை நோக்கி "விருக்ஷசிரேஷ்டமே! எப்போதும் உன்னிடம் எமது கோரிக்கையை நாங்களடைந்து வருகின்றோம். ஆயினும் எனக்கு மக்கட்பேறில்லாதிருப்பது பற்றி நீ கவனித்தாயில்லையே" என்றான். கற்பகவிருக்ஷம், "ஜீமூதகேதுவே! உமக்குப் புத்திரனுண்டாகப்போகிறான். அவனுக்கு ஜன்மாந்தர நினைவிருக்கும்; தானஞ் செய்வதில் விருப்பமுள்ளவனாயிருப்பன். சகல பிராணிகளுக்கும் நன்மை செய்வதில் நாட்டமுடையவனாக விருப்பன்" என்று கூறிற்று. இதைக்கேட்ட ஜீமூதகேது அந்த விருக்ஷத்தை வணங்கி, விடைபெற்றுக்கொண்டு அரண்மனை சென்று பட்டமகிஷியிடம் இந்தச்சுபச்செய்தியைத் தெரிவிக்க அவள் மட்டில்லா மகிழ்ச்சியை யடைந்தாள். பிறகு கற்பகத்தரு கூறியவாறே அந்த வித்தியாதரனுக்கு ஒரு புதல்வன் பிறந்தான்; அவனுக்கு ஜீமூதவாஹனன் என்னும் பெயரிட்டான். ஜீமூதவாஹனன் வளர வளர அவனுடன் பிறந்த கருணையும் வளர்ந்து வந்தது. பிறகு தக்க வயது வந்ததும் யுவராஜ்யபட்டாபிஷேகம் பெற்றான்.



அப்பால் ஒரு சமயம் அவன் தன்னுடைய தந்தை சந்தோஷமாயிருக்கும்போது அவரைப்பார்த்து, "பிதாவே! இந்த ஸம்ஸாரத்தில் சகல வஸ்துக்களும் கணப்பொழுதில் நசிக்கக்கூடியன என்பதை நான் நன்றாயறிவேன். பெரியோர்களின் கீர்த்தியொன்றே பிரளயம் வரையில் அழிவற்றிருப்பதாகும். அந்தக் கீர்த்தியும் பிறருக்கு உபகாரஞ் செய்வதால் ஏற்படுவதாகும். ஆச்சரியம்! உதாரர்களுக்குப் பிராணனிலும்பிரியமுள்ளபொருள், இந்தக் கீர்த்தியைத் தவிர வேறில்லை. ஸம்பத்தானது மின்னலைப் போன்றது. ஜனங்களின் நேத்திரங்கட்கு சிரமத்தை யுண்டாக்கக் கூடியது. சஞ்சலமானது. பிறருக்கு உதவாத ஸம்பத்தானது எங்கேயாவது அழிவையடைகிறது. ஆகையால் நம்மிடமிருக்கும் கற்பகத்தரு பிறருடைய உபாகர நிமித்தமாக ஏற்படுமாயின் அதுவே சிறந்ததாம்; பலனை யளிக்கக்கூடியது மதுவேயாம். ஆகையால் இந்தத் தருவின் உதவியால் யாசிக்கும் தரித்திரர்களனைவருக்கும் ஸந்தோஷமுண்டாக்குகின்றேன்' என்று தெரிவித்து உடனே கற்பகத்தருவினருகே சென்று "ஓ தேவ! நீ எங்களுக்குச் சதாகாலமும் விரும்பிய எவற்றையும் வெறுப்புறவளிக்கின்றாய்; இப்போது நான் ஒன்றை யுத்தேசித்து வந்திருக்கின்றேன். அதனை நிறைவேற்றவேண்டும். அஃதியாதெனில், "தேவ! இந்தப் புவியில் தரித்திரர்களே யில்லாமற் செய்தல் வேண்டும். பொருளை யிச்சித்தவர்களின் பொருட்டே நீ வந்திருக்கின்றாயன்றோ?" என்றான். இவ்வாறு கூறியவுடன் அந்தக் கற்பகத்தரு ஸ்வர்ணத்தை மழைபோல் பொழிந்தது. பிரஜைகள் யாவரும் அவரவர் விரும்பியவாறு எடுத்துக்கொண்டு சந்தோஷித்தார்கள். எல்லோரும், ஜீமூதவாஹனன், தயையுடையவன்; சத்வகுண சிரேஷ்டன், இவனைத் தவிர வேறு எவன் கற்பகத்தருவை யாசகர்களின் பொருட்டு உபயோகிப்பன்" என்று புகழ்ந்தனர். பிறகு அவனுடைய கீர்த்தியானது திசைகளெங்கும்

பாவியது. ஜீமூதவாஹனனுடைய மகிமையால் அந்த ராஜ்யமா
னது ஒரு கட்டுப்பாட்டில் நின்றது. அதுபற்றி ஜீமூதகேதுவின்
வம்சத்தவரெல்லோரும் பொறாமையடைந்து அவன்மேல் படை
யெடுத்துவந்து அமர்புரியத் தீர்மானித்தார்கள். அதனையறிந்த
ஜீமூதவாஹனன் தந்தையைப் பார்த்து "பிதாவே! இந்தச் சரீர
மானது நீர்க்குமிழிக்கு நிகரானது. பெருங்காற்றி னிடைப்பட்ட
தீபம்போல் சலனமுறும் பொருள் யாருக்கு என்ன பலனைத்
தரப்போகின்றது? அப்படிப்பட்ட பொருளை பிறரை ஹிம்சித்
தேனும் பெற விரும்புகிறார்கள் சிலர். ஆகையால் நான் நமது
வம்சத்தாருடன் அமர்புரிய விருப்பவில்லை. நான் இந்த இராஜ்
யத்தையே யொழித்துவிட்டு வனஞ்செல்லுகின்றேன். கிருபணர்
களாகிய நமது வம்சத்தவர்களே இந்த இராஜ்யத்தி லிருக்கட்டும்.
நமது வம்சம் நாசமடையவேண்டாம்" என்றான்.

இவ்வணங் கூறிய புதல்வனை ஜீமூதகேது பார்த்து, "புத்
திர! பாலகனாகிய நீ இராஜ்யத்தைத் திருணமாக மதித்து ஒழி
த்துவிட்டு வனம்போகத் தீர்மானித்தபோது, மூப்படைந்த நான்
இந்த இராஜ்யத்தில் எவ்வாறு ஆசைகொள்வேன்; நானும் உன்
னுடன் வனத்திற்கே வருகின்றேன்" என்று கூற, ஜீமூதவாஹ
னன் சந்தோஷித்து தன் பெற்றோரை யழைத்துக்கொண்டு இரா
ஜ்யத்தைவிட்டு வனம்போய் மலயபர்வதத்தை யடைந்தான். அங்
கிருந்த ஓர் அழகான ஆஸ்ரமத்தில் தாய்தந்தையரிருக்க, அவர்
களுக்கு ஜீமூதவாஹனன் அன்போடு பணிவிடைபுரிந்துவந்தான்.
அப்பொழுது அவனுக்கு, ஸித்தராஜனாகிய விஸ்வாவசுவின் குமா
ரன், மித்ராவசு என்பவன் சினேகமானான். முன்ஜன்மத்தின் விருத்
தாந்தத்தை அறியவல்ல ஜீமூதவாஹனன் தனக்கு முன் ஜன்
மத்தில் மனைவியாகவிருந்த மித்ராவஸுவின் சகோதரியைச் சந்
தித்தான். அப்பொழுது வாலிபர்களான அவ்விருவருடைய பார்
வையும் ஏககாலத்தில் ஏற்பட்டது. மனமானது மான்களைப்பிடிக்
கும் வலைக்கு நிகராக மாறிற்று. இப்படியிருக்கையில் ஒரு சமயம்
மித்ராவஸு ஜீமூதவாஹனனிடம் வந்து. "நண்ப! எனக்
கொரு இளயசகோதரியிருக்கின்றாள். அவள் பெயர் மலையவதி:
அவளை நான் உமக்குக் கொடுக்க விரும்பியுள்ளேன். என் விரு
ப்பத்தைக் கெடுக்கவேண்டாம்" என்று கூறினான். அதைக் கேட்ட
ஜீமூதவாஹனன். "மித்ராவஸு! இந்த மலையவதி முன்ஜன்மத்தி



லும் எனக்கு மனைவியாகவிருந்தாள். அப்போது நீயும் எனக்கு
இரண்டாவது ஹிருதயம்போலிருந்தாய். ஜன்மாந்தர வரலாற்றை
யறியும் சக்தி யெனக்குண்டு. அதனால் கூறுகின்றேன் என்றான்.

இதைக்கேட்ட மித்ராவஸு, ஆச்சரியமடைந்து "மித்ர! முன்
ஜன்மவரலாற்றை எனக்குச் சொல்லவேண்டும். அதனைக்கேட்க வி
ரும்புகின்றேன்" என்றுகூற, ஜீமூதவாஹனன் கூறுவானாயினன்:—

"நண்ப! முன்ஜன்மத்தில் நான் ஆகாய மார்க்கத்தில் சஞ்
சரிக்கும் வித்யாதரனாக இருந்தேன். அப்பொழுது ஒருநாள்
இமயமலையின் சிகரத்தைக் கடந்து போய்க்கொண் டிருந்தேன்.
அந்த இமயமலையின் சிகரத்தின் கீழ்ப் பிரதேசத்தில் பரமசிவன்
பார்வதியுடன் கிரீடித்துக்கொண் டிருந்தார். உயரச் சென்றுகொ
ண்டிருந்த என்னை அவர் பார்த்துவிட்டமையால், அவர் "நீ மானிட
ஜன்மத்தை யடையக்கடவாய்" என்று எனக்குச் சாபங்கொடுத்
தார். அப்பால் அக்கணமே, "நீ வித்யாதர ஸ்திரீயை மனைவியாக
அடைந்து அவளிடம் ஒரு புத்திரனைப்பெற்று அவனை உன்ஸ்தா
னத்தில் வைத்துவிட்டு முன்போல் வித்யாதர ஜன்மத்தை யடை
வாய்" என்று சாபத்தின் முடிவையும் தெரிவித்து மறைந்தார்.
பின் சில காலத்திற்கெல்லாம் நான் பூமியில் வர்த்தகர்களின் வம்
சத்தில் வலபி என்னும் பட்டணத்தில் ஒரு பெரிய வர்த்தகனுக்
குக் குமாரனாகப் பிறந்தேன். எனக்கு வஸுதத்தன் என்னும்
பெயரிடப்பட்டது. நான் தக்க வபதினையடைந்ததும் என் தந்தை
யென்னிடம் சரக்குகளையொப்புவித்து வியாபாரத்திற்காக தீவாந்
தரமனுப்பினார். அவருடைய ஆக்ஞையைச் சிரமேற்கொண்டு
தீவாந்தரஞ்சென்று ஏராளமான பொருளோடு திரும்பிவந்தேன்.
வழியில் திருடர்கள் என்னை மடக்கிக்கொண்டு என்னிடமிருந்த
பொருளை யபகரித்துக்கொண்டதுமன்றி என்னையும் அவர்களிருப்
பிடம் கொண்டுபோயினர். அங்கே அவர்கட்குத் தலைவனாகிய
புளிந்தகன் என்னை அவன் ஆராதித்துவரும் சண்டிகைக்குப் பலி
கொடுக்க உத்தேசித்து யமனுடைய நாவினையொத்ததும் நீண்ட
தும் அவளுவதுமாகிய கத்தியையுருவி வெட்டவந்தான். அச்சம
யம் அவனுக்கு எக்காரணத்தாலோ என்மீது கருணையுண்டாய்,
என்னை விடுவித்துத்தானே அந்தபலிக்குப் பாத்திரனாக நின்றான்.
உடனே சண்டிகாதேவி "புளிந்தக! நீ செய்யத்துணிந்ததை நிறு
த்து, நான் இதோ பிரஸன்னமாயிருக்கின்றேன்; வேண்டிய வர

ணைக் கேட்டுக்கொள்” என்றுகூற, நானது கண்டு பரவச
மடைந்து அடியற்ற பனைமரம்போல் தரையில் விழுந்து பணிந்
தெழுந்து “அம்மணீ! நான் என்னவரங் கேட்கப்போகின்றேன்;
மற்றொரு பிறவியினும் இந்த வர்த்தகனுடைய நட்பு எனக்குண்
டாகுமாறு கிருபைபாலித்தல்வேண்டும். இதுவே எனக்கு வேண்
டும்வரம்” என்று கூறினான். சண்டிகை “அவ்வாறேயாகுக” என்று
கூறி மறைந்தாள். பின்னர் நான் புளிந்தகனோடு வெகுநேரம்
வரையில் மனமகிழ்ச்சியுடன் சம்பாஷித்துக் கொண்டிருந்து
விடைபெற்றுத் திரும்பி வீடுவந்து சேர்ந்தேன். இச்செய்திகே
ட்ட என் தந்தை பரமானந்தமடைந்து உற்சவங் கொண்டாடினர்.

அப்பால் சிலகாலத்திற் கெல்லாம், அந்தப்புளிந்தகன் இராஜ
சேவகர்களால் பிடிக்கப்பட்டு அரசனிடம் கொண்டுவரப்பட்டான்.
அரசன் அவனை விசாரித்துச் சிறையிலடைத்துவைத் திருந்தான்.
அதனையறிந்த நான் என்தந்தையிடந் தெரிவித்து, அரசனுக்கு
லக்ஷம் பொன் செலுத்தும்படி செய்து அவனை விடுவித்தேன்.
அப்பொழுது என்பிராணனைக் காப்பாற்றிய புளிந்தகனுக்கு
நன்றி யறிதலுடன் பிரதி யுபகாரஞ் செய்தேன். பின் அவனை
என் வீட்டிற் கழைத்துவந்து சிலகாலம் என்னுடன் வைத்திரு
ந்து உபசரித்து அனுப்பினேன். அவ்வாறு என்னாலனுப்பப்பட்ட
அவன், தன் னிருப்பிடஞ் சென்று அங்கே இந்நாள் வரையிற்
சேமித்து வைத்திருந்த முத்துக்களையும் கஸ்தூரிகளையும் எனக்
குக் கொண்டுவந்து கொடுத்தான். பின்னரும் எனக்கு முத்துக்
கொண்டுவர விரும்பி காட்டிற்கு வில்லுடன்சென்று அனேக யா
னைகளைக்கொன்று வேட்டையாடிக்கொண் டிருந்தான். அப்பொ
ழுது காட்டின் ஒருபுறத்தில் ஒரு திவ்ய ஸரஸைக்கண்டான்.
அதன் கரைமீது சிறந்ததொரு தேவாலய மிருக்கப் பார்த்தான்.
ஸரஸில் மனோகரமான தாமரைகளிருந்தன. இவற்றைக்கண்ட புளி
ந்தகன், இந்த ஸரஸிற்குக் காட்டுயானைகள் நீரருந்த வருமென்
றெண்ணி வில்லுடன் ஒரு மரத்தடியில் மறைந்திருந்தான்.

சற்று நேரத்திற்கெல்லாம் ஒரு பெண் அங்கிருந்த தேவாலயத்
தை நோக்கி வரக்கண்டான். அவளுடைய ஆகிருதி அதியற்புதமா
யிருந்தது. அவள் ஸிம்மவாஹன முடையவளா யிருந்தாள்.
மேலும், அந்தப்பெண் ஹிமவானுடைய மற்றொரு புத்திரியோவெ
ன்றெண்ணும்படியா யிருந்தாள். பரமசிவனுக்குப் பணிவிடைபுரிவ



தில் ஆவலுடையவள் என்று சொல்லும்படியான முகப்பொலி
வுடன் விளங்கினள். இவ்வணங்கைப் பார்த்தவுடன் புளிந்தகன்
வியப்புற்று “இவள் யாராயிருக்கலாம், மானிடஸ்திரீயாயின், இவ
ளுக்கு ஸிம்மவாஹனம் எவ்வாறேற்படும்? இவள் தேவஸ்திரீயா
யின் என்போன்றவர்கள் கண்ணுக்குப் புலப்படுவளோ? இந்த
வனிதையைக்காணநான்செய்த புண்ணியம் யாதோதெரியவில்லை;
புண்ணிய விசேஷமின்றி இவ்வாறு எனக்கு ஏற்படாதென்பது
நிச்சயம். இந்தப் பெண்மணியை எனது நண்பன் அடையும்
மார்க்கத்தைத் தேடுவேனாயின், நான் அவனுக்கு ஒரு பிரதியுப
காரம் செய்தவனாவேன். ஆகையால் இவளருகிற்சென்று இவள்
வரலாற்றைவிசாரிப்பேன்” என்றெண்ணி அந்தமாதினருகேசென்
றான் புளிந்தகன். அப்போது அம்மாது சிங்கத்தினின்று மிறங்கி,
தடாகம்வந்து தாமரை மலர்கொய்ய யத்தனித்தாள். தன் எதிரில்
கைகுவித்தவண்ணம் நிற்கும் புளிந்தகனைக் கண்டதும் இவன்
யாரோ அதிதிபோ லிருக்கின்றான் என்றுகருதி விசுவாசத்துடன்
“உன்வரவு நல்வரவாகுக” என்று கூறி “அப்பனே! நீயார்?
யாரும்வரமுடியாத இவ்விடத்திற்கு நீ எவ்வாறு வந்தாய்?” என்று
கேட்டாள். புளிந்தகன், “நான் வேடர்களுக்கு எஜமான்; பரதே
வதையின் பாதமலரையே சரணமென்றடைந்தவன். யானைகளின்
முத்துக்களை யுத்தேசித்து இவ்விடம் வந்தேன். உன்னைப் பார்
த்தவுடன், என் நண்பனுடைய நினைவு எனக்குண்டானது. என்
நண்பன் எனக்குப் பிராணனைக் கொடுத்தவன், பெரியதனவந்
தன், பெரியவியாபாரி. அவன் உருவத்திலும் பருவத்திலும்
உனக்கொத்தவன். நேத்திரங்களுக்கு அமுதப்பிரவாகம் போன்ற
வன். ஒப்புயர்வற்ற அழகுவாய்ந்தவன். நட்பு, தானம், தயை,
தைரியம் இவைகட்கு இருப்பிடமானவன். வஸுதத்தனென்னும்
பெயர்புனைந்த அந்த வாலிபன் எந்த மாதின் கரத்தைப் பிடிக்கின்
றானோ அந்தமாதே புண்ணியவதியாவள். பெண்மணி! உன்
னுடைய இந்த ஆகிருதியை அந்த வஸுதத்தனுடன் சேர்க்கா
விட்டால், மன்மதன் வில்லைத்தூக்குவது வீணாமென்று நான்விசா
ரப்படுகின்றேன்” என்றான்.

இவ்வாறு புளிந்தகன் கூறவே, அந்தமாது மனம்பறிகொடுக்
கப் பட்டவள் போலாகி, காமனுடைய மோஹமந்திர வர்ணங்க
ளால் மோஹமடைந்து அவ்வேடனை நோக்கி, “எங்கே உன் நண்

பன்? அந்தச் சுந்தரனையழைத்துவந்து காட்டவேண்டும்" என்று மன்மதன் பிரேரணையினாற் பகர்வதுபோல் கூறினாள். புளிந்தகன் "அவ்வாறே யழைத்துவருகின்றேன். விடைதரவேண்டும்" என்று கூறி விடைபெற்றுக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டான். தான் கிருதார்த்தனானதாக நினைத்து மகிழ்ந்தான். தன்னிருப்பிடம் வந்ததும் இந்நாள் வரையிற் சேகரித்து வைத்திருந்த முத்துக்களையும் கஸ்தூரிகளையும் எடுத்துக்கொண்டு எங்களுடைய கிருகம் வந்தான். அவன் வந்த அன்று எங்களெல்லோருக்கும் மஹோற்சவநாளாக இருந்தது. அன்றிரவு என்னிடம் தனியேயிருந்து தான் கன்னிகை யொருத்தியைக் கண்டதுமுதல் நடந்ததைத் தெரிவித்தான். அவ்வரலாற்றைக் கேட்டதும் என்மனம் மட்டில்லா மகிழ்ச்சியடைந்தது. உடனே என் நண்பனைப்பார்த்து "நாம் இன்றிரவே சிறிதும் தாமதியாது அங்குச் செல்லவேண்டும்" என்று வற்புறுத்தினேன். அதற்கிணங்கி, அன்றிரவே என்னையழைத்துச் சென்றான் என் நண்பன். என் தந்தைக்கு நான் எங்குச்சென்றேனென்பது தெரியாது; ஆயினும் அவர் தாம் புளிந்தகனிடம் கொண்ட விசுவாசத்தினால் விசனமுறாது தைரியமா யிருந்தார்.

கிரமமாக நான் அந்த வேட ராஜனோடு இமயமலைக்கேகினேன். அப்பொழுது சூரியன் அஸ்தமிக்கும் தருணமாயிருந்தது. அந்த வேளைக்கு அந்தப் பருவதச் சாரலின் காட்சி மனோகரமாகவிருந்தது. பின் சற்று நேரத்திற்கெல்லாம் அந்தத் திவ்ய ஸரஸிற்குச் சென்று அதில் நீராடி அங்குக் கரை மீதிருந்த மரங்களிற் கிடைத்த கனிகளைப் பறித்துப் புசித்துப் சிதணித்துக்கொண்டு அன்றிரவு அங்குத்தங்கி யிருந்தோம்.

அந்த மலைப்பக்கத்துள்ள வனமானது மலர்தருஞ் செடிகளும் கொடிகளும் நிறைந்ததொரு திவ்யவனமா யிருந்தது. வண்டுகளின் தொனி, சுபமான வாசனை, ஜ்வலிக்கும் ஓஷதி இவைகளுடனும் கூடியது அவ்வனம். இரதிதேவி வாசஞ் செய்யும் கிருகம் போன்றது அந்த வனம்.

மறுநாட் பொழுது புலர்ந்தது. நாங்களிருவரும் அந்த வனிதை யெப்பொழுது வருவாளென் றெதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றோம். இப்படி யிருக்கையில் அந்தப் பெண்மணி, அங்கே வந்தாள். அவள் சாத்கால மேகத்திற் காணப்படும் சந்திரகலை



போற்காணப்பட்டாள். ஆச்சரியத்தோடும் ஆனந்தத்தோடும் நாங்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போது அவள் திரும்பினாள். அச்சமயம்அவள் மனம் எவ்வாறிருந்ததோ நானறியேன். பிறகு அந்தமாது தன் வாகனத்தினின்று மிறங்கித் தடாகத்தில் ஸ்நானஞ்செய்து மலர் பறித்துக் கரையின்மீது திருக்கோயில் கொண்டிருக்கும் பரமசிவனைப் பூஜித்தாள். பூஜை முடிந்ததும் என் நண்பனாகிய புளிந்தகன் அவளருகே சென்று வந்தனஞ் செய்து தன்னைத் தெரியப்படுத்திக் கொண்டு "தேவி! உமக்கேற்ற நாயகனும் என் நண்பனுமாகிய புருஷனை இதோ அழைத்து வந்திருக்கின்றேன். சம்மதமாயின் அவனை இப்பொழுதே தங்களெதிரில் அழைத்து வருகின்றேன் என்று கூறினான். அந்தப் பெண், "அவ்வாறே அழைத்து வரலாம்" என்று தன் சம்மதத்தைத் தெரிவித்தாள். புளிந்தகன், உடனே என்னிடம் வந்து என்னை அவளருகே யழைத்துச் சென்று காட்டினான். அந்த மாது என்னை ஒரு பார்வையாகப் பார்த்தாள். உடனே மதனனுடைய ஆவேசத்திற்குச் சுவாதீனமாகி என் நண்பன் புளிந்தகனை நோக்கி, "வேடராஜனே! உன்னுடைய ஆப்த மித்திரராகிய இவர்மானிடரல்ல. ஒரு தேவரென்றே எண்ணுகின்றேன். என்னை வஞ்சிப்பதன் பொருட்டு வந்தவர். மானிடருக்கு இந்த ஆகிருதியேது?" என்றாள். நான் அவள் என் மீது நம்பிக்கை கொள்வதற்காக "சுந்தரி! நான் மானிடன் தான். கபட மற்றவரிடத்தில் ஏனோ கபடமாக நடக்கவேண்டும். நான் வலபி நகரத்தில் வசிக்கும் மஹாதானன் என்னும் ஒரு வர்த்தகன் மகன். வஸுதத்தன் என்பது என்னுடைய பெயர்; இந்த வேடராஜன் என்னுடைய நண்பன்; என் கஷ்டங்களைத் தீர்த்தவன்; முன்னொருசமயம் நான் தேசாந்தரம் சென்றிருந்தேன். அப்போது இவன் எனக்குச் சிநேகிதனானான். இது உண்மையான விஷயம்" என்று கூறி மௌனமா யிருந்தேன். பிறகு அந்த மாது, தலைகுனிந்தவாறிருந்து, "நான் கேள்விப்பட்டதும் அது தான்; நான் பரமசிவனைப் பூஜித்து வருவதால் அவர் எனது கனவில் நேற்றிரவு பிரஸன்னராகி, "மாதே! நான் சந்தோஷமடைந்தேன். நீ காலையில் கணவனை யடைவாய்" என்று அருளிச் செய்தனர். ஆகையால் நீர் தான் எனக்கு நாயகனாகின்றீர். உமது சிநேகிதராகிய இந்தப் புளிந்தகன் எனக்குச் சகோதரராகின்றார்" என்று வார்த்தையாகிய அமுதத்தால் என்னை மகிழ்வித்து, மௌனமாயிருந்தாள்.

அப்பால் அவளோடு ஆலோசனை செய்து விதிபூர்வமாக விவாகஞ்செய்து கொள்வதன்பொருட்டு நிச்சயித்து என்னிருப்பிடத்திற்குப் புறப்பட்டோம். அப்பொழுது அந்தமாது ஒரு சைகைசெய்து தன்சிங்கத்தையழைத்தாள். சிங்கம் சைகையறிந்து அவ்வாறே அவளருகில்வந்தது. "ஆரியபுத்திரர்காள்! இந்தச் சிங்கத்தின்மீது நீவிரிருவரும் ஏறலாம்" என்றாள். உடனே நாங்களிருவரும் அந்தச்சிங்கத்தின்மீது ஏறி அந்தமாது சிரோமணியை என்மடிமீது வைத்துக்கொண்டு பிரயாணமானேன். வழியில் வேடராஜன் எங்களுக்கு மிருகங்களையடித்துக் கொடுத்தனன். அவற்றை யெல்லாரும் புசித்துக்கொண்டு சிலநாளைக் கெல்லாம் வலபி நகரம் வந்தோம். நான் என் இஷ்டநாயகியுடன் சிங்கத்தின்மீது வருவதுகண்ட அந்நகரத்து ஜனங்கள் ஆச்சரியமடைந்து என் பிதாவிடம் தெரிவித்தார்கள். என் தந்தை மகிழ்வுற்று எதிர்கொண்டு வந்தனர். என்னை என் தந்தை நெருங்கியதும் நான் சிங்கத்தினின்று மிறங்கி அவர் பாதங்களிற்பணிந்து நின்றேன். என்னைக்கண்ட என் தந்தை வியப்பும் மகிழ்ச்சியுமடைந்தனர். நிகரற்ற என் மனைவியும் என் தந்தையைப் பணிந்து நின்றாள். என்னையும் எனக்கேற்ற தாரத்தையும் பார்த்து என்தந்தை என்றுமடையாத மகிழ்ச்சி யடைந்தார். பிறகு எங்களெல்லோரையும் வீட்டிற்கழைத்துச் சென்றனர். புளிந்தகனுடைய நேசத்தைக் கொண்டாடினர். உடனே என் விவாகத்தை மகோற்சவமாக நடத்தத் தீர்மானித்துச் சோதிடர்களை வரவழைத்து முகூர்த்த தினத்தை நிச்சயித்தனர். பிறகு எமது உறவினர்களும் நண்பர்களும் முகூர்த்தத்திற்குவந்து சேர்ந்தனர். விவாகம் வெகு விமரிசையாக நடந்தது. எங்கள் உறவினரும் ஊராரும் மணப்பந்தலி லிருக்கும்போதே என் மனைவியின் வாஹனமானது புருஷ வடிவத்துடன் மேலே கிளம்பியது. எல்லோரும் பார்த்து வியப்புற்றார்கள். அந்தப் புருஷன் தேவர்கட்குரிய ஆடை யுடுத்து ஆபரணங்கள் பல பூண்டிருந்தனன். அவன் ஆகாயத்தின் கண் இருந்தபடியே "பாக்யசாலியே! நான் சித்திராங்கதன் என்னும் பெயருடையவன். இவள் என்னுடைய புத்திரி; இவள்பெயர் மனோவதி. இவள் மீது என்பிராணனைவிட மேலானபிரியங்கொண்டிருந்தேன். இந்த மனோவதியை மடிமீது வைத்துக்கொண்டு அரண்யத்தில் எப்போதும் சஞ்சரித்துக்கொ



ண்டிருந்தேன் அப்பொழுது ஒருநாள் தபோவனங்களுடன்கூடிய கங்காநதிக்குச்சென்றேன். அந்நதியின் கரையில் தவம்புரிந்து வந்த முனிவர்களை அதிக்கிரமிக்க வேண்டுமே யென்கிற அச்சத்தால் கங்காநதியில் இறங்கினேன். அப்பொழுது நான் அணிந்துகொண்டிருந்த பூமாலை நழுவி அந்நதியில் விழுந்தது. ஜலத்திற்குள்ளிருந்தநாரதமுனிவர் வெளிக் கிளம்பி "நீ அணிந்துகொண்டிருந்த பூமாலையை என் முதுகில் போட்டாயல்லவா? உனக்கு அவ்வளவு கர்வமா?" என்று கூறிச்சினந்து, "நீ சிங்கமாகக் கடவது; நீ உன் குமாரியை இப்போது சுமந்து திரிவதுபோல் அப்பொழுதும் சுமந்துகொண்டு இமயமலைச்சாரலில் திரியக்கட்வாய்" என்று சாபந்தந்தனர். உடனே, "எப்போது ஒரு மானிடன் இப்பெண்ணை மணம்புரிந்து கொள்ளுகின்றானோ அப்பொழுது இந்தச் சாபம் விமோசனமாம்" என்று அநுக்கிரகமுஞ் செய்தனர்.

அவ்வாறே நான் சிங்கரூபமடைந்து இமயமலைச் சாரலில் இந்தப் பெண்ணைச் சுமந்து கொண்டு திரிந்தேன். இந்த வேடனுடைய முயற்சியால் இப்படிப்பட்ட நன்மை நடந்ததென்பதையும் நானறிவேன். ஆகையால் நான் எப்போதும் உங்களுடைய நன்மையையே நாடுவேன்" என்று கூறி மேலே சென்றான். பின்னர் என்னைச் சார்ந்த பந்துக்களும் என் தந்தையும் நல்ல சம்பந்தம் கிடைத்தது பற்றி மகிழ்வெய்தினர்

உலகத்தில், மிகுதியும் உபகாரம் செய்து உயிரினும் மேன்மையாகப் பாவித்துவரும் பந்துக்களிடமே விசுவாசம் வைக்கிறார்களில்லை. அங்ஙனமிருக்கச் சிறிதும் கபடமென்பதில்லாத நண்பர்களுடைய நடத்தையைப் பற்றி யார் எண்ணுவார்கள் என்று நினைத்து எவனும் எதுவும் பேசவில்லை. அவணிருந்த அரசன் எங்களிடம் புளிந்தகன் நட்புக் கொண்டிருப்பது பற்றிச் சந்தோஷித்தான். என் தந்தை புளிந்தகனுக்குச் சிறந்த வஸ்துக்களை காணிக்கையாகவளித்து, அவனைப்பற்றி அரசனுக்குத்தம்மாலியன்றவரையிற் சொல்லி, அரண்யமுழுவதையும் வேடராஜனாகிய நண்பனுக்குக் கொடுக்கும்படி செய்தனர். பின்னர் என் மனைவியாகிய மனோவதியுடனும் நண்பனாகிய புளிந்தகனுடனும் நான் சுகமாக அங்கு வசித்து வந்தேன். நாளடைவில் வேடராஜனாகிய புளிந்தகனுக்குத்தன் இராஜ்யமாகிய அரண்யத்தில் வசிப்பதில்விருப்பங்குறைந்து வந்தது. அவன் அப்பால் பெரும்பான்மையும் எங்

கள் கிருகத்திலேயே யிருந்து வந்தான். நாங்களிருவரும் ஒருவர்க்கொருவர் உபகாரஞ் செய்துகொள்வதில் திருப்தியடையாமலே யிருந்தோம்.

இவ்வாறிருந்து வருகையில் மனோவதி கர்ப்பந் தரித்து காலக்கிரமத்தில் என் வம்சத்தவரது மனோற்சகம்போன்றவொரு புதல்வனை ஈன்றாள். அவனுக்கு ஹிரண்யதத்தன் என்னும் பெயரிடப்பட்டது. வயது வந்ததும் முறைப்படி வித்யாரம்பம் செய்வித்தேன். அவன் சகல கலைகளிலும் வல்லவனானதும் என் தந்தை அவனுக்கு விவாகஞ் செய்வித்து மகிழ்ந்தனர். அப்பால், என் தந்தை தாம் ஜன்மமெடுத்ததின் பலன் பூர்த்தி பெற்றது என்று கருதி மனைவியுடன் தன் சரீரத்தை யொழிப்பதற்குக் கங்கா நதி சென்றார். அவ்வாறு சென்ற என்தந்தையை யெண்ணி நான் மிகுதியும் சோகமுற்றேன். உறவினர்கள் என்னைத் தேற்றி நான் வீட்டுக்காரியங்களைச் சரிவரக் கவனிக்கும்படி செய்தனர். அப்பொழுதும் என் மனதில் எனக்கு அடிக்கடி வியசனமுண்டாய் மிகுதியும் வருந்தினேனாயினும் மனோவதியின் முகாரவிந்த தரிசன விசேஷத்தாலும் என்னுடைய நண்பனது சகவாச விசேஷத்தாலும் அந்த வியசன மேலெழாது நின்றது. என்னுடைய வாழ்நாட்களில், சற்புத்திரனாலேற்பட்ட ஆனந்தம், ஸத்களத்திரத்தாலுண்டாய மனோற்சாகம், சுகிர்த்தினுடைய சேர்க்கையாலுண்டான சுகம் என்னும் இவைகளை அநுபவித்து வந்தனன். அப்பால் மூப்பானது என் மோவாய்க்கட்டையைக் கிட்டிற்று. அவ்வாறேற்பட்டது "ஏ குமார! இன்னும் கிருகங்களில் நீ யேனிருக்கவேண்டும்" என்று கேட்பதுபோற் காணப்பட்டது. அதனால் என் மனம் வைராக்யமடைந்தது. உடனே என் குமாரனிடம் என் குடும்ப பாரத்தை யொப்புவித்து, வனஞ் சென்றேன். என்னிடங்கொண்ட அன்பு காரணமாக என் நண்பனாகிய புளிந்தகனும் என்னோடு வனத்திற்குப் புறப்பட்டான். மனோவதியும் கிருகத்திலிருக்க மனங்கொள்ளாது புறப்பட்டாள். நாங்கள் மூவரும் வனத்தை நோக்கி நடந்து, காலஞ்சரம் என்னும் மலை சென்றோம். அங்குச் சென்றதும் நான் வித்யாதரனென்பது என் நினைவிற்கு வந்தது. அப்போது பரமசிவனளித்த சாபவிமோசன காலம் சமீபித்தது.



என்னும் நினைவு எனக்கு வந்தது. அதனை என் மனைவியாகிய மனோவதிக்கும் நண்பனாகிய புளிந்தகனுக்கும் அப்போதே தெரிவித்தேன். உடனே இம்மானிட தேகத்தைவிட நினைத்தேன். மறு ஜன்மத்திலும் இந்த மனோவதி எனக்கு மனைவியாகவும், புளிந்தகன் எனக்கு நண்பனாகவும் ஏற்பட வேண்டுமென்னும் என் விருப்பத்தை அவர்கட்குத்தெரிவித்துப் பரமபதியாகிய சிவபெருமானை மனத்தில் தியானித்தவாறே மலைமீதிருந்து கீழே விழுந்து சரீரத்தை விட்டனன். மனோவதியும் வேடராஜனும் அவ்வாறே சரீரத்தை விட்டனர். நான் இந்த வித்யாதர வம்சத்தில் ஜீமூதவாகனன் என்னும் பெயருடன் பிறந்தேன். நீ சிவபெருமானுடைய அநுக்கிரகத்தால் ஸித்தராஜனாகிய விஸ்வாவஸுவுக்குப் புத்திரனாக மித்ராவஸு வென்னும் பெயருடன் பிறந்திருக்கின்றாய்.

நண்ப! முன் என்மனைவியாக விருந்த மனோவதியும் மலயவதி யென்னும் பெயருடன் இப்போது உனக்குச் சகோதரியாகப் பிறந்திருக்கின்றாள். ஆகையால் முன் ஜன்ம உறவின்படியே இப்பொழுதும் நான் இந்த மனோவதியை விவாகஞ் செய்துகொள்ளலாம். ஆயினும், என் பெற்றோரிடம் முதலில் தெரிவித்து அவர்கள் ஒப்புக்கொண்ட பிறகு உன் மனோரதம் நிறைவேறும் என்றான்.

இவ்வாறு ஜீமூதவாகனன் கூறலும், மித்ராவஸு அவனுடைய பெற்றோரிடஞ் சென்று எல்லாவற்றையும் தெரிவித்து அவர்களுடைய சம்மதத்தைப் பெற்றுத் திரும்பினன். ஜீமூதவாஹனன் மித்ராவஸுவைப் புகழ்ந்து எல்லோருடனும் நகரம் வந்து தன் தாய் தந்தையரைக்கண்டு விவரமறிந்து மகிழ்வெய்தினான்.

அப்பால் மித்ராவஸு தன் சகோதரியின் விவாக தினத்தை நிச்சயித்து அதற்கு வேண்டிய சாமான்களைச் சேகரித்து யாவருக்கும் திருமுகமனுப்பினான்; எல்லோரும் வந்து சேர்ந்தனர். நல்ல வேளையில் ஜீமூதவாகனன் மலயவதியின் கரத்தை விதிப்படிப் பற்றினான். சித்தராஜனாகிய விஸ்வாவஸு அவனைப் பூஜித்தான். விவாகம் மஹோற்சவமாக நடைபெற்றது. தேவர்களும் சாரணர்களும் சந்தோஷித்தனர். ஸித்தர்களும் வித்தி

யாதார்களும் விவாகத்திற்கு விஜயஞ் செய்திருந்தனர். அப்பால்
ஜீமூதவாகனன் அந்த மலைய பர்வதத்தின் கண் மலயவதியுடன்
வெகு சுகமாக வாழ்ந்து வந்தான்.

அப்பொழுது ஒரு சமயம் ஜீமூதவாகனன் தன் மைத்துனன்
மித்ராவஸுவுடன், கடற்கரையிலுள்ள வனங்களைக் காண்ப
தன் பொருட்டுச் சென்றான். அங்கே வாலிபனொருவன் தன்
தாய் ஆ! புத்திரா! புத்திரா!! என்று அலறிக்கொண்டு பின்னே
தொடர்ந்துவர விரைவாய் நடந்து வரக்கண்டான். ஜீமூதவாக
னன், எமபடனைப்போன்ற ஒருவன் அந்த வாலிபனோடு கூடவே
வந்து அவனையொரு கற்பிரதேசத்தில் விட்டுப் போகவும் கண்
டான். இவர்கள் இவ்வனத்தின் கண் இவ்வாறு பிரவேசிப்ப
தன் காரணமென்ன வென்றெண்ணி வியப்புற்று, அவர்கள்
அருகே சென்று "அப்பா! நீயார்? என்னசெய்ய விரும்புகிறாய்?
உன் அன்னை உன்னையேன் இவ்வாறு அழுதுகொண்டே தொட
ர்ந்து வருகின்றனள்" என்று கேட்டான்.

வாலிபன், "ஐயனே! முன் கச்யபப் பிரஜாபதிக்கு, கத்ரு
வினதை யென்னும் இரண்டு மனைவியரிருந்தனர். அவர்களிரு
வரும் ஒரு சமயம் பற்பல கதைகள் சொல்லிக்கொண்டிருந்தனர்.
அப்பொழுது அது சம்பந்தமாய் அவர்களுக்குள் விவாதம் ஏற்
பட்டது. கத்ரு, 'சூரியனுடைய குதிரைகள் கறுத்த நிறமுடை
யன' என்றாள். இருவரும் யாருடைய வார்த்தை பொய்யாகிற
தோ அவள் மற்றவளுக்கு அடிமையாக வேண்டும் என்னும் பந்த
யத்தை யேற்படுத்திக் கொண்டனர். அப்பால் கத்ரு தான் ஜய
மடையக் கருதித் தன் மக்களாகிய நாகங்களைக் கொண்டு அவற்
றின் விஷத்தின் பூத் என்னும் சத்தத்தால் சூரியனுடைய குதிரை
களைக் கறுத்த நிறமடையச் செய்து வினதைக்குக் காட்டினள்.
வினதை, கத்ருசெய்த வஞ்சகத்தை யறியாளாதலால் தான்
தோல்வி யடைந்ததாக எண்ணி வருந்தினாள். அன்று முதல்
கத்ரு தனக்கு வினதையை யடிமையாக்கிக் கொண்டனள். அப்
பால் வினதையின் மைந்தனாகிய கருடன் இந்தச் சூதை யறிந்து
தன் மாற்றாந்தாயிடம் வந்து "அம்மா! என் தாயை அடிமைத்
தனத்திலிருந்து நீக்கிவிடவேண்டும். நான் வந்தனம் புரிந்து
கேட்டுக் கொள்கின்றேன்" என்றான். அது கேட்ட கத்ருவின்
மக்களாகிய நாகங்கள், ஆலோசித்துப் பார்த்து, "கருட! தேவர்



கள் பாற்கடலைக் கடைவதற்கு யத்தனித்திருக்கின்றனர். அங்
குண்டாகும் அமிர்தத்தை எங்களுக்குக் கொடுப்பாயாயின் உன்
தாய் அடிமைத் தொழிலி லிருந்து விடுவிக்கப்படுவாள். நீ பல
சாலிகளுக்குள் சிறந்தவனல்லவா?" என்று கூறின. கருடன்
உடனே பாற்கடல் சென்று அமிர்தமடைவதன் பொருட்டுத் தன்
னுடைய பௌருஷ முழுவதையும் காட்டினான். அதனால் விஷ்ணு
பகவான் மகிழ்வுற்று, "ஏகருட! சந்தோஷம்; நீ விரும்பும் வரம்
யாது? அதைக் கேள் தருகின்றேன்" என்றனர். கருடன் நாகங்
கள் செய்த வஞ்சனையினால் மிகுந்த சினங்கொண்டானாதலால்
மகா விஷ்ணுவினிடம், 'நாகங்கள் யாவும் எனக்கு ஆகாரமாக
வேண்டு' மென்று வரம் கேட்டனன். நாராயணன் 'அவ்வாறே
யாகுக' என்று வரந்தந்தனர். அப்பால் கருடன் தன் பராக்ர
மத்தால் அமிர்தத்தை யடைந்து எடுத்து வந்தனன். அதை
யறிந்த தேவேந்திரன் கருடனைப் பார்த்து, "இந்த அமிர்தத்தை
மூடர்களாகிய நாகங்கள் புசிக்க முடியாமற் போகவும் நான்
அதை அவர்களிடமிருந்து கிரகித்துக்கொண்டு வரவும் தக்கவாறு
நீ அவர்களிடம் கொடுக்கவேண்டும்" என்றான். விஷ்ணு கொடுத்த
வர மகிமையால் பெருமைபெற்ற கருடன், "அவ்வாறே செய்
கின்றேன்" என்று இந்திரனுக்குச் சொல்லி யனுப்பிவிட்டு அமுத
கலசத்தோடு நாகங்களிடம் வந்தான். நாகங்கள் யாவும் கருட
னுக்கு விஷ்ணு வரமளித்திருப்பதைத் தெரிந்துகொண்டமையால்
இச்சமயம் மிகுதியும் பயமடைந்திருந்தனர். அவர்களைக் கண்ட
கருடன் ஒன்றும் பேசாமல், 'உங்கள் விருப்பப்படி அமிர்தங்
கொண்டு வந்தேன். என் அன்னையை விடுவியுங்கள். நீங்கள்
பயப்படுவதாகத் தெரிகின்றது. அங்ஙனமாயின் நான் அமிர்தத்
தை இந்தத் தார்ப்பைப் புல்லில் வைத்துவிட்டு என்தாயை யழைத்
துக் கொண்டுபோய் விடுகின்றேன். பிறகு நீங்கள் பயமின்றி
அமிர்தத்தை யெடுத்துக் கொள்ளுங்கள்' என்றான். நாகங்கள்
அவ்வாறே செய்யலாமென்று கூறின. கருடன் பரிசுத்தமான
தார்ப்பையில் அமிர்தத்தை வைத்தனன். நாகங்கள் உடனே வின
தையையும் விடுவித்தன. கருடன் தன் தாயை அழைத்துக்
கொண்டு தன்னிருப்பிடமேகினன். அப்பால் நாகங்கள் அச்ச
மின்றி அவ்வமிர்தத்தைப் புசிக்கவந்தன. அதனை யறிந்த
தேவேந்திரன் தன் சக்தியால் நாகங்களுக்கு மோகத்தை யுண்டு

பண்ணி அமிர்த கலசத்தை யெடுத்துக்கொண்டு சென்றனன்.
அந்த நாகங்கள் ஐயோ! கைக்கெட்டியது வாய்க்கெட்டாமற் போ
யிற்றே என்று வருந்திப் பின் அமிர்தகலசம் வைக்கப்பட்டிருந்த
தர்ப்பையில் ஏதேனும் ஒட்டிக்கொண்டிருக்குமென்று கருதி அந்
தத் தர்ப்பையை நாவினுல் நக்கின. அதனுல் அவைகளுக்கு நாவு
பிளவுபட்டு இரண்டு நாவுடையன போயாயின. அப்பால் கரு
டன் நாகங்களைத் தான் பெற்ற வரத்தின் வலுவால் புசிக்க
முயற்சித்தனன். ஒரு சமயம் கருடன் பாதாளலோகம் சென்ற
னன். அங்குள்ள சர்ப்பங்கள் யாவும் நாசமடைந்தன. இவ்
வாறு அடிக்கடி சம்பவித்தது. இது கண்ட சர்ப்பங்கட்
கிறைவனுகிய வாசுகி, ஓகோ இனி இந்த நாகலோகம் யாவும்
நாசமடையும்போ லிருக்கிறது; நாம் கருடனைக் கண்டு
பிரார்த்தித்துக் கொள்ளவேண்டு மென்று கருதி, கருடனி
டம் வந்து வந்தனஞ் செய்து 'நாடோறும் உன்னுடைய ஆகா
ரத்திற்காக ஒரு சர்ப்பத்தைக் கடலிலுள்ள மணற்குன்றிற்கு
அனுப்புகின்றேன்; நீ அதைப்புசித்துவிட்டு உனதுபசியைத்தணித்
துக்கொள்; வீணே எங்களுலகத்தில் வந்து எங்களை நாசஞ்செ
ய்ய வேண்டாம்' என்று கேட்டுக்கொண்டது. கருடன் 'அவ்வா
றே செய்கின்றேன்' என்று ஒப்புக்கொண்டான். அப்பால் நா
டோறும் வாசுகி தான்செய்த பிரதிக்ஞைப்படி சர்ப்ப மொன்றை
மணற்குன்றுக்கு அனுப்பிவந்தான். கருடன் அப்படிவரும் சர்ப்ப
ங்களைப் புசித்துக்கொண்டே வருவானுயினன். அவ்வாறுக அநேக
சர்ப்பங்கள் நாசமடைந்தன. நான் சங்கசூடனென்னும் பெயரு
டைய சர்ப்பம்; இன்று நான் கருடனுக்கு ஆகாரமாகப் போக
வேண்டியநாள். ஆகையால் வாசுகியின் ஆக்ஞைப்படி நான் இன்று
இந்த இடத்திற்கு வந்திருக்கின்றேன். அதனுல் என் அன்னை வரு
ந்துகின்றுள்'' என்றுன்.

சங்கசூடன் இவ்வாறு கூறவே ஜீமூதவாகனன் மிகுதியும்
துக்கமடைந்து, அவனை நோக்கி ''ஆச்சரியம்! வாசுகியின் அரசா
ட்சியானது சத்வகுண மற்றதாகின்றது; ஏனெனின் அந்த வாசுகி
தன் பிரஜைகளைத் தன் கையாலேயே பகைவனுக்கு ஆகாரமாகத்
தருகின்றுனன்றே? அந்த வாசுகி தன் சரீரத்தை யேன் கருட
னுக்கு ஆகாரமாகக் கொடுக்கக்கூடாது. பயனற்றவனன்றே தன்
சுற்றத்தார் நாசமடைவதை விரும்புவான்? அந்தக் கருடன் கச்



யபருடைய குமாரனுக விருந்தும், இவ்வளவு பெரிய தீமையைச்
செய்கிறுன். ஆ! ஆச்சரியம்!! மகான்களும் தேகசம்பந்தமாக
எவ்வளவு மோக மடைகின்றனர். ஆயினும், இப்போது கருடனு
க்கு என் சரீரத்தைத் தந்து உன்னுயிரைக் காப்பாற்றுகின்றேன்.
நண்ப! நீ வருத்தப்படவேண்டாம்'' என்றுன். சங்கசூடன் தைரி
யத்தோடு ஜீமூதவாகனனை நோக்கி, தீமை யொழியக்கடவது! மிகு
ந்த சத்வகுணமுடையவனே! மீண்டும் இவ்வாறு சொல்லவேண்
டாம். வளையலைவிரும்பி முத்து மணியை வீணுக்குவது உசிதமா
மோ? நான் என் வம்சத்திற்குக் களங்க முண்டாகும்படி நட
வேன். இப்போது கருடன் வரும் சமயம். நான் இதோ இக்கடற்
கரையி லிருக்கும் கோகர்ணேசுவரரைத் தரிசனஞ் செய்து வரு
கின்றேன்'' என்று சாதுவாகிய சங்கசூடன் தெரிவித்துச் சென்
றுன். இவ்வாறு சங்க சூடன் சென்றதும் கருணைக் கிருப்பிடமாக
விளங்கும் ஜீமூதவாகனன் இப்போது கருடன் வரவேண்டும்.
இது நல்ல சமயம். நான் சரீரத்தைக் கொடுத்துச் சங்கசூடனைக்
காப்பபாற்றுவேன். அவன் வரக்காணுமே யென்று கருதினுன்.
உடனே எதையோ மறந்து வீட்டில் வைத்து விட்டதாகச் சொல்
லித் தன் கூடவந்த மித்ராவஸுவைத்தன்கிருகத்திற்கனுப்பினன்.
அச்சமயம் கருடனுடைய இறக்கைக் காற்றினுல் பூமியானது சுழ
ன்றது. அவ்வாறு பூமி சுழன்றதானது கருடனுடைய பராக்ரமத்
தைக் கண்ட பூமிதேவி தலையை யசைக்கின்றனளென்று சொல்
லும்படி யிருந்தது. இதனுல் கருடன் வருகின்று னென்று ஜீமூத
வாஹனன் தெரிந்து கொண்டு உடனே சங்கசூடன் நின்று கொ
ண்டிருந்த சிலையின் மீதேறினுன். ஒரு க்ஷணப்பொழுதில் கருடன்
தன்னிழலால் ஆகாயமார்க்கத்தை மறைத்துக்கொண்டு அவ்விடம்
வந்து தன் மூக்கினுல் ஜீமூதவாஹனனைக் கொத்தி யெடுத்து இர
த்தம் பெருக அவனை யிழுத்து மலையின் சிகரத்தின் மீது வைத்
துப்புசிக்க யத்தனித்தான். அப்பொழுது ஆகாயத்தினின்று மலர்
மாரி பொழிந்தது. இதனைக் கண்ட கருடன் அதிக ஆச்சரிய
மடைந்து தயங்கி நின்றனன். அப்பொழுது சங்கசூடனும் அங்கு
வந்து சேர்ந்தான். அந்தச் சிலையானது இரத்த வெள்ளமாக விரு
க்கக்கண்டான் அவன். ஆ கஷ்டம் மகாத்மா என் நிமித்தம் தன்
உயிரைக் கொடுத்திருக்கின்றுன். அதிகநேரமாகவில்லையே. இதற்
குள் கருடன் அவனை எங்கே கொண்டுபோயிருப்பான்? நான்

விரைவில்சென்று தேடுகின்றேன் என்று யோசித்து இரத்தத் தாரையைத் தொடர்ந்து நடந்தான்.

கருடன் ஜீமூதவாகனனுடைய முகத்தை நோக்கினான். அவன் தான் தன்னுயிரை யிழக்குந் தருணத்திலிருந்தும் சிறிதும் வருந்தாது முகமலர்ச்சியுடனிருந்தான். அதுகண்ட கருடன் ஆச்சரிய மடைந்து, இவன் யார்? நாகங்களைச் சார்ந்தவனாகக் காணப்படவில்லையே; நான் இவனைப் புசிக்கப்போகின்றேன் என்பதும் இவனுக்குத் தெரியும்; அப்படியிருந்தும் இவன் முகமலர்ச்சியுடனிருக்கின்றான்; இதன் காரணம் தெரிந்துகொள்ள வேண்டும்" என்று யோசித்தவாறே யிருந்தான். இச்சமயம் பார்த்து ஜீமூதவாஹனன் தான் தற்போதிருக்கும் நிலைமையைப் பொருட்படுத்தாமல் கருடனை நோக்கி "ஓ பக்ஷிராஜனே! என் தேகத்தில் மாம்சமும் இரத்தமு மிருக்கின்றன; நீர் ஏன் என்னைப் புசிக்காமலிருக்கின்றீர்" என்று கேட்டான். கருடன் ஆச்சரியம் மடைந்து "ஓ சாதுவே, நீ சர்ப்பமல்ல வென்பதை நான் தெரிந்து கொண்டேன்; நீயார்? சொல்லவேண்டும்" என்றான். ஜீமூதவாகனன், "நான் ஸர்ப்பந்தான்; என்னை நீர் புசித்துப் பசிதணித்துக் கொள்ளலாம். தீரர்கள் முயற்சித்த காரியத்தை முடிக்காமல் விடமாட்டார்கள்" என்று கூறினான்.

இவ்வாறு ஜீமூதவாகனன் சொல்லிக்கொண்டிருக்கையில் சங்கசூடன் அங்கு வந்து வெகு தூரத்திலேயே நின்று "பக்ஷிராஜனே! இவன் சர்ப்பமல்ல, உண்மையில் இவனல்ல சர்ப்பம். நானே இன்று உமக்கு ஆகாரமாகவேண்டிய சர்ப்பம். ஆகையால் இவனை விட்டு விடும். உமக்கு அகாரணமாக இவ்வாறான பிரமம் ஏன் உண்டாக வேண்டும்?" என்றான். கருடன் இப்பொழுது இன்னது செய்வதென்று தோன்றாமல் பிரமித்திருந்தான். ஜீமூதவாகனனும் தன்விருப்பம் நிறைவேறாதது பற்றி வருத்த மடைந்தான். அப்பால் சற்றுநேரத்திற்கெல்லாம் இருவருக்கும் சிறிதுசம்பாஷணை நடந்தது. அப்பொழுது கருடன் ஜீமூதவாகனனை யொரு வித்தியாதரனெனத் தெரிந்துகொண்டான். ஐயோ இவனை இன்னானென்றறியாமல் மயங்கிப் புசிக்க யத்தனித்தோமே யென்று வருந்தினான். ஐயோ! கஷ்டம். இந்தப் பாபத்திற்கு ஆளானேனே; வழிதவறி நடப்பவர்கட்குப் பாபம் எளிதில் ஏற்படும்



என்பது நிச்சயம். இந்த வித்தியாதரன் மகாத்மா! சான்றோன் பிறனொருவனைக் காப்பதன் பொருட்டுத் தன்னுயிரைக் கொடுக்கத் துணிந்து என்னுடையது என்ற மோகத்திற்கு முக்கிய சுவாதீனமாகிய இப்பிரபஞ்சத்தைத் திரஸ்கரித்தானன்றோ? இந்தப் பாபபரிகாரத்தின் பொருட்டு நான் தீயிற் குதித்து உயிரை விடுகின்றேன் என்றான். அப்பொழுது ஜீமூதவாஹனன் கருடனைப் பார்த்து "பக்ஷிராஜனே! நீபாபத்திற்குப் பயந்தவராயின் இன்று முதல் நாகங்களைப் புசிப்பதை யொழித்தல் வேண்டும். ஏற்கனவே நீர் புசித்த நாகங்களிடம் பச்சாதாபத்தை யடைய வேண்டும். இதுதான் உமக்கேற்பட்ட பாபத்திற்கேற்ற பிராயச்சித்தம். மற்றபடி வேறுநினைப்பது வீணே" என்றான்.

பூதங்களிடம் கருணை யுடைய ஜீமூதவாகனன் இவ்வாறு கூறவே கருடன் மகிழ்வுற்று அவன் மொழியைத் தன் ஆசிரியர் வாக்காகக் கொண்டான். உடனே தேகத்தில் காயமடைந்த ஜீமூதவாகனன் சுகமடையவும் எலும்பாகக் கிடக்கும் நாகங்கள் உயிர் பெறவும் கருதி அமுதங்கொண்டு வருவதன்பொருட்டுச் சுவர்க்கலோகஞ் சென்றான்.

அப்பால் ஜீமூதவாகனனுடைய பத்திக்குவந்த கௌரீதேவி அங்கே பிராப்தமாகி அவனை அமுதத்தால் நனைத்தாள். அதனால் காயமடைந்திருந்த அவன் அவயவங்கள் எப்போதும் போலாயின. இச்சமயம் தேவர்கள் துந்திபி வாத்தியங்களை முழக்கினர். அப்பால் கருடன் அமுதங்கொண்டு வந்து ஆகாயத்திலிருந்தவாறே அக்கடற் கரையைச் சார்ந்த வனமெங்கும் அதனை மாரியாகப் பொழிந்தான். உடனே நாகங்கள் யாவும் உயிர் பெற்றெழுந்தன. ஆரண்ய முழுதும் நாகக் கூட்டங்களால் நிறையப்பெற்றது. அப்பொழுது அவ்வனமானது ஜீமூதவாகனனைப் பார்க்கும் பொருட்டு வந்த பாதாள உலகமோவென்றெண்ணும்படி யிருந்தது. அப்பால் ஜீமூதவாகனனைக் கண்ட அவன் உறவினர்களும் நண்பர்களும் என்று மடையாத மகிழ்ச்சி யடைந்தனர். துக்கமே சுகமாக மாறுமாயின் யார் தான் சந்தோஷப் படமாட்டார்கள்! பிறகு சங்கசூடன் ஜீமூதவாகனனை வணங்கி விடைபெற்றுக்கொண்டு பாதாள உலகம் சென்றான். ஜீமூதவாகனனுடைய கீர்த்தியானது மூவுலகமும் பாவிற்று.

அப்பால் வித்யாதரவம்சத்திற்குத் திலகம் போல விளங்கும் ஜீமூதவாகனனை அவனுடைய தாயாதர்கள் ஆச்ரயித்தனர். முன்பு இவர்கள் எல்லோரும் ஜீமூதவாகனனுக்குக் கெடுதி செய்தவர்களல்லவா? ஜீமூதவாகனன் கௌரியின் பூர்ண அநுக்கிரகம் பெற்றவனாதலால், அப்படிப்பட்ட துஷ்டர்கள் அனைவரும் அவனுக்கு வசமாயினர். பிறகு அவர்கள் ஜீமூதவாஹனனை இமயமலைக்கு வரவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். ஜீமூதவாஹனன் அவர்கள் பிரார்த்தனைக்கிணங்கி மலயபர்வதத்திலிருந்து இமயமலை சென்று அவர்களுக்குச் சக்ரவர்த்தியாக விருந்து பல வருடங்கள் சுகமாக வாழ்ந்து வந்தான் என்று கதையை முடித்தான் யௌகந்தராயணன்.

இந்தத் திவ்விய சரித்திரத்தைக் கேட்ட வாஸவதத்தைப் பரமானந்த மடைந்தாள். பின்னர் வாஸவதத்தை தன் கணவன் அருகே வீற்றிருந்து தனக்குப் பிறக்கப்போகும் பிள்ளை வித்யாதரர்களுக்கு அதிபதியாகும் என்னும் பெருமையைப் பற்றிப் புகழ்ந்து பேசிக்கொண்டு அன்றைப்பொழுதைப் போக்கினள்.

இரண்டாவது தரங்கம் முற்றிற்று.



## 3-வது தரங்கம்.



ஒரு சமயம் வாசவதத்தை மந்திரிமார்களுடனிருக்கும் தன் கணவனை நோக்கி, "ஆரியபுத்ர! நான் கர்ப்பந்தரித்தது முதல் அதைக் காப்பாற்றுவதிலேயே கவலையாயிருக்கின்றேன். அதே கவலையுடன் நேற்று இரவு நித்திரை செய்து கொண்டிருந்தேன். சொப்பனத்தில் ஒரு புருஷன் வந்தான். அவன் நெற்றியில் திருநீறணிந்து கொண்டிருந்தான். சிரவில் சந்திரனணிந்து கொண்டிருந்தான். அவனுக்குக் கோரோசனை நிறமுடைய சடையிருந்தது. கரத்திற் சூலாயுதந்தரித்து கொண்டிருந்தான். இந்தத்திவ்ய புருஷன் என்னைக் கருணையுடன் பார்த்து; பெண்ணே! நீ கர்ப்பத்தைப்பற்றிச் சிறிதுங் கவலைப்படவேண்டாம். இந்தக்கர்ப்பத்தை நான் காப்பாற்றுகின்றேன். இக்குமாரனை உனக்குக் கொடுத்தவன் நானே. உனக்கு இதில் நம்பிக்கையுண்டாவதற்காக ஒரு விஷயம் தெரிவிக்கின்றேன் கேள்; நாளை யுதயத்தில் ஒரு ஸ்திரீ



உங்களிடம் வருவாள்; அவள் தன்கணவனை நிந்தித்துப் பேசுவாள்; அவளுடைய நடத்தை கெட்டது; அவள் தன் உறவினரின் வலுவைக்கொண்டு தன் நாயகனைக் கொலை செய்வதற்காகப் பொய் பேசப் போகின்றாள். அந்தத் துஷ்ட ஸ்திரீயினிடம் அகப்பட்டுக் கொண்ட அந்த ஆடவனைக் காப்பாற்றுவது உன் புருஷன் கடமையாம். ஆதலால் இச்செய்தியை உன் கணவனிடம் முன்பே தெரிவித்து விடு என்று திருவாய் மலர்ந்தருளி அந்தத் திவ்ய புருஷர் அந்தர்த்தானமாயினர். உடனே நான் விழித்துக் கொண்டேன். அப்பொழுது விடியற்காலமாயிற்று" என்றாள்.

இவ்வாறு வாசவதத்தை தெரிவித்ததும் அவர்கள் எல்லோரும் இது பரமசிவனுடைய அநுக்கிரகமாகும், நாம் இனி அந்த ஆடவனை அந்தக் கெட்ட ஸ்திரீயிடமிருந்து காப்பாற்றுவதற்குரிய உபாயந்தேட வேண்டும் என்று பேசிக்கொண்டிருந்தனர். அச்சமயம் அங்கு அரண்மனை வாயிற்காப்போன் பிரவேசித்து, வந்தனஞ் செய்து "பிரபுவே! வீதியில் ஒரு ஸ்திரீ ஆறு குழந்தைகளுடனும் தன் உறவினர் சிலருடனும் வந்து தன் நாயகனை நிந்தித்துப் பேசிக்கொண்டிருக்கின்றனள்; அவளுக்குச் சமூகத்திய தரிசனம் வேண்டுமாம்; ஏதோதெரிவித்துக்கொள்ள வேண்டுமாம்" என்று கூறினான். இதைக்கேட்ட உதயனன் வாசவதத்தை கனவிற் கண்டது பலித்ததென்று மகிழ்வுற்று, "அந்த ஸ்திரீயை இங்கு வரச்சொல்" என்று வேலைக்காரனுக்குச் சொல்லி அனுப்பினன். கனவு நிச்சயமானது கண்டு தனக்குப் பிறக்கும் புத்திரன் சற்புத்திரனாக விருப்பானென்று நிச்சயித்து வாசவதத்தை மகிழ்ச்சியடைந்தனள்.

எல்லோரும் ஸ்திரீயின் வரவை யெதிர் பார்த்துக் கொண்டிருந்தனர். சற்று நேரத்திற்கெல்லாம் அந்த மாது தனது மக்களுடனும் உறவினருடனும் இராஜ சபையிற் பிரவேசித்தாள். அவளுடைய கணவனும் அங்கே வந்து சேர்ந்தனன். பின்னர் அந்த ஸ்திரீ அரசனை வணங்கி "பிரபுவே! குற்ற மற்றவளாகிய எனக்கு இவர் நாயகனாயிருந்தும் எனக்குப் போஜனம் வஸ்திரம் முதலியவற்றைக் கொடுப்பதில்லை; இதைத் தங்களிடம் தெரிவிக்கும் பொருட்டே வந்தேன்" என்றாள். கணவன், "பிரபுவே! இவள் தன் உறவினருடன் இங்கு வந்து பொய் பேசுகின்றாள்; நான் ஒரு வருடத்திற்கு வேண்டியவற்றை முன்னரேஇவளுக்குக்

கொடுத்திருக்கின்றேன். என்னை வதை செய்ய விரும்பி இவ்வாறு பழிசுமத்துகின்றாள். இங்கு வந்திருக்கும் இவர்கள் இந்த மாதுக்கு உறவினர்களாயினும் இவர்களையே நான் சாட்சியாகக் கொள்கின்றேன்" என்று கூறினான். இதைக்கேட்ட உதயனன் வியப்புற்று, "இவர்களையேன் நான் சாட்சியாகக் கொண்டு விசாரித்தல்வேண்டும்; வாசவதத்தையின் கனவில்தெரிவித்த பரமசிவனே இதற்குப்போதுமான சாட்சி. ஆகையால் இந்த மாதையும் இவள் உறவினரையும் தண்டிப்பது தான் நான் செய்யத்தக்கது" என்றனன்.

அப்பொழுது அருகேயிருந்த புத்திமானாகிய யௌகந்தராயணன், "பிரபுவே! தாங்கள் சொல்வதுண்மை தான்; ஆயினும், சாட்சியங்களை விசாரித்து அதன் பிரகாரம் தீர்மானம் செய்தல் வேண்டும். கனவிற் கண்டவாறு தண்டனை விதிக்கின் அதனை ஜனங்கள் நம்பமாட்டார்கள்" என்று கூறினன். உதயனன் யௌகந்தராயணன் கூறுவது உசித மெனக்கொண்டு, சாட்சிகளை ஒவ்வொருவராக விசாரித்தான். சாட்சிகள் எல்லோரும் ஒருமுகமாக "இம்மாது பொய் பேசுகின்றனள்" என்று கூறினர். பிறகு உதயனன் யோசித்து, போக்யனாகிய தன் கணவனுக்குத் துரோகஞ் செய்யத்துணிந்து வெளிவந்த அந்தமாதை அந்நகரத்தை விட்டு வெளிப்படுத்தும்படி உத்தரவளித்தனன். துஷ்ட ஸ்திரீயால் நிந்திக்கப்பட்ட அந்த ஆடவனுக்கு, கருணையுடைய உதயனன் வேறு விவாகஞ் செய்வித்து மிகுந்த பொருளையுங் கொடுத்தனுப்பினான்.

துர்த்தசை யென்கிற குழியில் விழுந்தவனும், வியாகுலத்தில் மூழ்கியவனுமாகிய புருஷனை அவன் உயிருடனிருக்கும் பொழுதே கெட்ட ஸ்திரீகள் காக்கைபோன்று கொத்திப்பிடுங்கி இழுக்கின்றார்கள்! நல்ல வம்சத்திற் பிறந்தவளும் அன்புடையவளும் உத்தமியும் பாபங்களை யொழிக்கத்தக்கவளுமாகிய ஸ்திரீ, புண்ணிய வசத்தால் வழியிலுள்ள மரத்தின் நிழலைப் போன்று எவனுக்கேனும் வாய்க்கின்றாள்".

அப்பொழுது அரசனைப் பார்த்து, கதை சொல்வதில் வல்லவனாகிய வஸந்தகன் கூறுகின்றான்:

தேவ! மானிடர்களுக்கு நட்பு பகைமையென்னும் இவ்விரண்டும் முன் ஜன்மங்களின் வாசனா வசத்தால் பெரும்பா



ன்மையு முண்டாகின்றன. அதற்கொரு கதையிருக் கின்றது, அதனைக் கூறுகின்றேன் கேளுங்கள் என்று கூறுவானாயினான்.

வாரணாசியில் விக்ரமசண்டன் என்னுமொரு மன்னனிருந்தான். அவ்வரசனுக்கு ஸிம்மபராக்ரமனென்னுமொரு பிருத்யனிருந்தான். அவன் யுத்தத்தில் அதிசமர்த்தன்; அவ்வாறே சூதாடுவதிலும் சமர்த்தனாயிருந்தான். அவனுக்குக் கலகக்காரியென்னும் காரணப் பெயர் பெற்ற ஒரு மனைவியிருந்தாள். அவள் விகாரமான ரூபமுடையவள். அவள் வக்ர உருவத்திற்கேற்றவாறு அவளுடைய மனமும் விகாரத்துடனிருந்தது. அந்த ஸிம்மபராக்கிரமன் அவ்வரசனோடு அடிக்கடி சூதாடி அளவற்ற பொருளைச் சம்பாதித்தான். தான் சம்பாதித்த பொருளெல்லாவற்றையும் தன் மனைவியிடமே கொடுத்து வந்தான். கலகக்காரியென்னும் அந்தமாது ஸிம்மபராக்கிரமனிடம் மூன்றுபுத்திரர்களையடைந்தாள். அவள் ஒரு கணமேனும் கலகமின்றிக்காலத்தைப் போக்குவதில்லை. புருஷனைப்பார்த்து, "நீ எப்போதும் வெளியிற் சென்று குடிக்கின்றாய்; எனக்கு எதையுங் கொண்டு வந்து கொடுப்பதில்லை" என்று கூறிச் சினந்து போராடுவாள். இவ்வாறாக நாடோறும் நடந்துவந்தது. ஒருநாள், ஸிம்மபராக்கிரமன் தன் மனைவியின் தொந்தரவு பொறுக்கமாட்டால் கோபங்கொண்டு வீட்டைவிட்டுப் புறப்பட்டு விந்தியமலைசென்று அங்குத் தனியேயிருந்து துர்க்காதேவியைத் தியானித்து வந்தான்.

அப்போது தேவி அவன் கனவிற்றோன்றி 'புத்ர! எழுந்திரு வாரணாசிக்குச்செல்; அங்கு ஒரு பெரிய ஆலமரமிருக்கின்றது; அதனடியில் வெட்டினால் ஒரு நிதியை நீ யடைவாய்; அதன் நடுவில் நழுவிய ஆகாயம் போன்றதொருவஸ்து கருட பச்சை மயமாயும் ஆயுதம்போல நிர்மலமாயுமுள்ள ஒரு பாத்திரத்தையுங் காண்பாய்; அதில் உற்றுப் பார்ப்பாயாயின், சகல ஜீவராசிகளுடைய முன்ஜன்ம வரலாறுந் தெரிந்து கொள்வாய். அதைக்கொண்டு நீ உன் முன் ஜன்மவரலாறும் உன் மனைவியின் முன் ஜன்ம வரலாறுந் தெரிந்து கொண்டு வேண்டிய பொருளை யடைந்து சுகமே வாழ்ந்திரு" என்று திவாய்மலர்ந்தருளி மறைந்தனன்.

இவ்வாறு தேவி தெரிவித்துச் செல்லவும் ஸிம்மபராக்கிரமன், எழுந்து மறுநாட்பொழுது புலரும் வரையில் தேவியைத் தியானித்தவாறே யிருந்து அங்கிருந்து வாரணாசிக்குப் புறப்

பட்டுச் சென்று தேவி குறித்த ஆலமரத்தை யடைந்து அதன் கீழே பூமியைத் தோண்டிப்பார்த்தான். அங்குத் தேவி கூறியவாறே நிதியும் நிதியின் நடுவே மணிமயமான பெரும்பாத்திரமு மிருக்கக்கண்டு அதிசயித்து அதில் உற்றுப்பார்த்தான். தான் முன் ஜன்மத்தில் சிங்கமாகவும் தன் மனைவி கரடியாகவு மிருந்ததாகத் தெரிந்துகொண்டு அதனாற்றான் தங்களுக்குள் இந்த ஜன்மத்தில் ஒற்றுமை பேற்படாமற் போயிற்றென்று நிச்சயித்து, சோகத்தையும் மோகத்தையும் ஒழித்தான். பின்னர் அப்பாத்திரத்தின் மகிமையால் அநேககன்னிகைகளின் முன் ஜன்ம வரலாறு தெரிந்துகொண்டு அவர்களில் தன் ஜன்மத்திற்கேற்ற ஒரு கன்னிகையைத் தேடி மணந்து சுகமே காலத்தைக் கழித்துவந்தான். கலகக்காரிக்கு உணவு மாத்திரம் கொடுத்துக் காப்பாற்றி வந்தான்.

அரசனே! மனைவி முதலியவர்களும் உலகத்தில் மானிடர்களுக்கு முன் ஜன்ம ஸம்ஸ்காரவசத்தால் ஏற்படும் பகைமை, நட்பு என்னும் இவற்றை மேற்கொண்டவர்களாகின்றார்கள் என்று கூறினான் வசந்தகன்.

இவ்வாறு வசந்தகன் கூறிய விசித்திரமான சரித்திரத்தைக் கேட்டு அரசனும் அரசியும் ஸந்தோஷித்தார்கள்.

பின்னர் சில நாட்கள் கழிந்தன. அப்பால் வரப்போகும் நல்ல செய்தியைச் ஆசிப்பவர்களும் நல்ல இலக்ஷண மமைப்பெற்றவர்களுமாகிய புத்திரர்கள் பிறந்தனர். முதன் முதலாக யௌகந்தராயணனுக்கு மருபூமியென்னுமொரு புத்திரன்பிறந்தான். பின் ருமண்வானுக்கு ஹரிசிகன் என்னும் புத்திரனுண்டானான். வசந்தகன் தபந்தகன் என்னும் புதல்வனை யடைந்தான். இத்பகன்என்னும் வேறொரு பெயரினையுடைய நித்யோதிதன் என்னும் துவாரபாலகர்களின் அதிகாரிக்குப் கோமுகன் என்னுமொரு மகன் பிறந்தனன். இச்சமயம். "இவர்களெல்லோரும் இனி உண்டாகப் போகும் உதயன மகாராஜனுடைய புத்திரனுக்கு அமைச்சர்களாகப் போகின்றனர். பகைவர்கள் இவர்களால் த்வம்சம் செய்யப்படுவார்கள்" என்னும் அசரீரி வாக்குண்டாயிற்று.

பின் சில நாளைக்கெல்லாம் வாஸவதத்தை பிரசவிக்குங்காலம் சமீபித்தது. வாசவதத்தைக்கு எது பிரசவ அறையாக ஏற்படுத்தப்பட்டதோ அதிலிருந்துவந்தாள். அந்த அறை அத்யற்புதமா



யலங்கரிக்கப்பட் டிருந்தது. பதுமைகள் நான்கு பக்கங்களிலும் வைக்கப்பட்டிருந்தன. வன்னிக்குச்சியாலும் எருக்கங்குச்சியாலும் மூடப்பட்ட கவாடங்குளுடன் விளங்கிற்று. ரத்தின விளக்குகள் அங்கங்கு பிரகாசியானின்றன. பலவிதமான ஆயுதங்கள் வைக்கப்பட்டிருந்தன. மந்திரிகளுடைய முயற்சியால் மந்திரங்களாலும் தந்திரங்களாலும் இரக்ஷிக்கப்பட்டு வந்தது அவ்வறை.

இப்படிப்பட்ட அறையில் வாசவதத்தை இருந்துவருகையில் உசிதமான காலத்தில் அதிசுந்தர ரூபமுடைய ஒரு குமாரனை, ஆகாயமானது, அமுதமயமான கிரணங்களையுடைய சந்திரனை யீன்றதுபோலப் பெற்றாள். அந்தக் குமாரன் பிறந்ததும் அவ்வறையானது மிகுந்த பிரகாசமடைந்தது. எல்லோரும் பரமானந்த மடைந்தனர். உதயன மகாராஜனுக்கு அவனுடைய அந்தரங்கக் காரியதரிசி புத்திர ஜனனத்தைத் தெரிவித்தான். அரசன் அச்சுபச்செய்தி கேட்டதும் மகிழ்வுற்று அந்த அந்தரங்கக்காரியதரிசிக்குத் தன் இராஜ்யத்தை கொடுத்துவிட வெண்ணி, இதுவல்ல இவனுக்கேற்ற வெகுமதி இதனினும் விசேஷமானதா யிருக்கவேண்டுமென்று தீர்மானித்தான். அரசன் இராஜ்யத்தைக் கொடுப்பதா இவனுக்கென்னும் பேராசையால் கொடுக்காமலிருக்கவில்லை. அவன் எண்ணம் அதனினும் விசேஷமானதொன்றை நாடியதே அதற்குக் காரணமாகும். அரசன் உடனே அந்தப்புறம் வந்து குழந்தையைப்பார்த்தான். குழந்தை பொன்போன்ற திருமேனியும் பவளம்போன்ற இதழும் அசையும் அஜத்திரோமம்போன்ற கேசமும் சாம்பிராஜ்ய லக்ஷ்மியின் லீலைக்குரிய பத்மம்போன்ற முகமுமுடையதா யிருக்கக்கண்டு பரமானந்தமடைந்தான். அக்குழந்தையின் பாதங்களில் சில அடையாளங்கள் காணப்பட்டன. அவை மற்ற அரசர்களின் குடை, சாமரம் முதலியவைகள் அவ்வரசர்களிடமிருந்து இவனிடம் பயத்தினால் வந்தடைந்தனவென்று சொல்லும்படி யிருந்தன. இவற்றைக் கண்ட உதயனன் கண்களிலிருந்து ஆநந்தபாஷ்பம் பெருகிற்று. அது புத்திரனிடம் அவ்வரசன் கொண்ட சிநேகத்தை யொத்திருந்தது. மந்திரிமார்களும் குழந்தையைக் கண்டு ஆநந்த பரிதரானார்கள். இப்பொழுது "அரசனே! உம்முடைய இந்தப் புத்திரன் மன்மதாம்சம் பெற்றவன். இவனை நரவாஹனதத்தன் என்னும் திருநாமமிட்டழைத்தல் வேண்டும். இவன் சீக்கிரத்தில் வித்பாதரர்கள் எல்லோருக்கும் சக்ரவர்த்தியாவான். இவன் ஜாகரூக

னாக விருந்து தேவகற்பம் வரையில் அரசுசெலுத்தி வருவான்.” என்றிவ்வாறு அசரீரி வாக்குண்டாயிற்று. இவ்வாக்கெழுந்த அக்கணமே ஆகாயத்திலிருந்து மலர்மாரி பொழிந்தது. ஆகாயத்தில் வாத்தியகோஷங்களும் முழங்கின. இவ்வாறான குறிகள் வித்தியாதரர்களுக் கரசன் பிறந்திருக்கிறானென்பதைக் குறிப்பிட்டன. உப்பரிகைகளின் சிகரங்களின்மீது சிவந்தகாந்தியுடைய பதாகைகளாடின. அவ்வாறு கொடிகளசைவது சிந்தூரப்பொடியை யொன்றுக்கொன்று தூவிக்கொள்வதுபோற் காணப்பட்டன. தாசிகள் நர்த்தனம் செய்தனர். அது இப்புவியில் மன்மதன் சரீரத்தொடு ஜனித்ததுபற்றித் தேவமாதர்கள் நர்த்தனம் செய்வதுபோலிருந்தது. அச்சமயம் அரசன் எல்லோருக்கும் நூதன வஸ்திரங்களை ஏராளமாகக் கொடுத்தான். அளவிடற்கரிய ஆபரணங்களையும் ஏழை ஜனங்களுக்கு வழங்கினான். பலபேர் பலவாறான காணிக்கைகளைக் கொண்டுவந்து வாத்திய முழக்கத்துடன் அரசனுக்குச் சமர்ப்பித்தனர். மன்னர்களி லனேகர் அரசனை வந்து வணங்கிக் குழந்தையைக் கண்டு மனமகிழ்ச்சியோடு திரும்பினர். இவ்வாறு அநேகநாள் உற்சவங் கொண்டாடப்பட்டது.

பிறகு குழந்தைக்கு நரவாஹனதத்தன், என்னும் பெயர் புனைந்து அதனை நாளொருமேனியும்பொழுதொரு வண்ணமுமாக வளர்த்துவந்தான். நரவாஹனதத்தன் பூரணசந்திரன் போல் வளர்ந்துவந்தான். அவன் விளையாடத் தொடங்கியதும் மந்திரிமார்கள் தங்கள் குமாரர்கள் அவனோடுகூடி விளையாடிவருமாறு அரண்மனைக் கனுப்பினர். வசந்தகனும் தன்குமாரன் தப்தகனை யனுப்பினன். புரோகிதராகிய சாந்திகரர் தன் சகோதரனுக்குப் பிங்களையிடம் இரட்டையாகப் பிறந்த சாந்திசோமன் வைஸ்வானரன் என்னும் இருவரையும் அனுப்பினர்.

உதயனனும் வாசவதத்தையும் அவர்கள் குமாரர்களைத் தங்கள் குழந்தைகள் போலவே பாவித்து அன்புபாராட்டி வந்தனர்.

தங்கள் குமாரன் நவநவமாக விளையாடுவதையும் மழலைமொழிவழங்குவதையும் கண்டும் கேட்டும் பரமானந்தமடைந்துவரும் வாசவதத்தை, உதயன னிருவருக்கும் அந்த நாட்களெல்லாம் ஆநந்தமாகவே கழிந்தன.

மூன்றாவதுதாங்கம் முற்றிற்று.

நான்காவதாகிய நரவாஹன தத்த ஜனனலம்பகம் முற்றிற்று.



ஐந்தாவது

# சதுர்த்தாரிகா லம்பகம்.

## முதலாவது தரங்கம்.



இவ்வாறு உதயனன் ஒரு புத்ரனை யடைந்ததும் அவனைக் காப்பாற்றுவதில் அதிகக் கவலைபெடுத்துக்கொண்டு அன்பாய் வளர்த்து வந்தான். அங்ஙனமிருக்கும் அவ்வரசனை யௌகந்தராயணன் பார்த்து “தாங்களேன் தமது குமாரனைப் பற்றிக்கவலைப்படவேண்டும். பகவானாகிய பரமசிவன் வித்தியாதரர்கள் யாவருக்கும் சக்ரவர்த்தியாகக்கூடிய ஒருவன் உனக்குப் புத்திரனாகப் பிறக்கப்போகின்றான் என்று தெரிவித்திருக்கின்றாரல்லவா? இச்செய்திபறிந்த வித்தியாதரர்கள், மனம் பொறுக்காமல் தங்கள் புத்திரனுக்குக் கெடுதிசெய்ய விரும்பிக் கலகஞ் செய்துகொண்டிருக்கின்றனர். இதைச் சந்திரசேகரனாகிய சங்கரன் அறிந்து, உமது குமாரனைக்காப்பாற்றுவதற்கு ஸ்தம்பகன் என்னும் ஒரு பூதத்தைக் காவல் வைத்திருக்கின்றார். அந்த ஸ்தமகபன் நமது கண்ணுக்குப் புலப்படாமலிருந்து குழந்தையைக் காத்துக்கொண்டிருக்கின்றான். இச்செய்தி இப்போதுதான் நாரத முனிவர் இங்கு வந்து தெரிவித்துச் சென்றார்” என்று கூறினான்.

இவ்வாறு யௌகந்தராயணன் பேசிக்கொண்டிருக்கையில், ஆகாயத்திலிருந்து ஒரு புருஷன் இறங்கினான். அவன் கிரீடகுண்டலங்கள் அணிந்துகொண்டிருந்தான். அவன் தேவர்களைச் சேர்ந்தவன்போலக் காணப்பட்டான். கையில் கத்திபிடித்துக்கொண்டிருந்தான். அவன் புவியிலிறங்கியதும் உதயன மகாராஜனையும் யௌகந்தராயணனையும் வணங்கினான். உடனே அவனுக்கு அதிதிகளுக்குரிய உபசரணைகள் செய்யப்பட்டன. அப்பால் உதயனன், “தாங்கள் யார்? இங்கு எழுந்தருளிய நோக்கம் யாது?” என்று கேட்டனன். அவன், அரசனைக் கைகுவித்து வணங்கி நின்று, “பிரபுவே! நான் மானிடன். என் பெயர் சக்திவேகன். நான் வித்யாதரர்களுக்குப் பதியாகவிருந்தேன். எனக்குப் பகைவர்கள் அநேகரிருக்கின்றனர். தங்கள் புத்திரன் எங்களுக்குச் சக்ரவர்த்தியாகப் போகின்றானென்பதை நாங்கள் எமது வித்தையாலறிந்து

கொண்டோம். ஆகையால் நான் அந்தப் புத்திரசிகாமணியைப் பார்த்துவிட்டுப் போகவந்தேன்" என்றான். இதைக் கேட்ட உதயனன், அவனை நோக்கி, "நண்ப! ஒருவன் வித்தியாதரத் தன்மையை எவ்வாறடைவது? அது எவ்வாறிருக்கின்றது? நீ எவ்வாறு அத்தன்மையை யடைந்தாய்? இவற்றைத் தெரிவிக்கவேண்டும்" என்று கேட்டான்.

வித்தியாதரன், மிகுந்த விநயத்துடன் அரசனைப் பார்த்து, இச்சன்மத்திலோ அல்லது முன் ஜன்மத்திலோ பரம பதியாகிய சிவபெருமானைப் பூஜித்து அவரது அநுக்கிரகம் பெற்றவர்க்கே வித்தியாதரப் பதவி கிடைக்கும். அப்பதவி அநேக விதமானது. வித்தை, கட்கம், மாலை முதலிய ஸாதனங்களுடன் கூடியது. அடியேனுக்கு அந்த ஸ்தானங் கிடைத்த விதத்தைக் கூறுகின்றேன், கேளுங்கள் என்றான்.

வர்த்தமானம் என்னுமொரு நகரமுண்டு. அந்நகரம் பூமிக்குப் பூஷணம் போன்றது. அதில் பரோபகாரி யென்னும் பெயருடைய அரசனிருந்தான். அவன் சத்துருக்களைத் தபிக்கச் செய்யும் வல்லமை படைத்தவன். இப்படிப்பட்ட தன்மை வாய்ந்த அந்தப் பூபாலனுக்குக் கனகப்பிரபை யென்னும் மனைவி யிருந்தாள். அவள் மின்னலைப்போன்ற இடையை யுடையவள். இவளுக்குப் பரோபகாரி ராஜனிடம் ஒருபுத்திரி யுண்டானாள். இலக்ஷ்மி தேவி, தானே யழகுள்ளவள் என்று கர்வங்கொண்டிருப்பதை யடக்கப் பிர்மதேவர் இப் பெண்மணியைப் படைத்தனரோ வென்றெண்ணும்படி விளங்கினள். அவ்வனிதை ஜனங்களெல்லோருடைய கண்களுக்கும் சந்திரிகை போன்றவள். பரோபகாரி அவ்வணங்கிற்குக் கனகரேகை யெனும் பெயரிட்டு அவளைச் செல்வமாக வளர்த்து வந்தான்.

சில வருடங்கட்கெல்லாம் கனகரேகை யௌவனப் பருவமடைந்தாள். பரோபகாரி அப்பொழுது ஒரு நாள், கனப்ரபையை நோக்கி, "பிரியே! இந்தக் கனகரேகையின் விவாகத்தைப் பற்றிக் கவலை யதிகரிக்கின்றது. அதனால் என் மனம் துன்பப்படுகிறது. குலத்திற் பிறந்த கன்னிகை தகுந்த இடத்தை அடையாமலிருந்து அது பிறனொருவன் செவியிற்படின் அது அவனுக்கு ஸ்தானத்தில் நிலைபெறாத கானம் போல வருத்தத்தை யுண்டு



பண்ணும். அயோக்கியனுக்குப் பெண்ணைக்கொடுப்பது அயோக்கியனுக்கு உபதேசிக்கப்பட்ட வித்தையைப் போல கீர்த்தியை யடையாது; தர்மமுமாகாது; தாபத்திற்கே காரணமாகும். தேவி! நமது கனகரேகையை நான் எந்த நல்ல அரசனுக்குக் கொடுப்பேன்? இவளுக்குச் சமமானவன் யாவன்? எனக்கொன்றுந் தெரியவில்லை; கவலைமாத்திரம் நாளுக்குநாள் அதிகரிக்கின்றது" என்று கூறினான். கனகப்ரபை மந்தகாஸம் செய்து, "நாதா! நீரோ இவ்வாறு பேசுகின்றீர்? கனகரேகையோ விவாகஞ் செய்துகொள்ள விருப்பமில்லாதவளா யிருக்கின்றாள்; சிறிது நேரத்திற்கு முன்னர் கனகரேகையை யழைத்து 'கண்ணே! நான் எப்பொழுது உன் திருமணக்கோலத்தைக் காண்பேன்?' என்று சேட்டேன். கனகரேகை உடனே என்னை வெறுப்பாய்ப்பார்த்து, 'வேண்டாம்! அம்மா! விவாகம் வேண்டாம்!! என்னை எவனுக்கும்விவாகஞ்செய்து கொடுக்கவேண்டாம். நான் கன்னிகையாகவேயிருக்கப்போகின்றேன். இல்லாவிடில் நான் மரணமடைந்தேனென்று எண்ணவேண்டியது தான். இதற்கு ஒரு காரணமிருக்கின்றது' என்றாள். இதைக்கேட்டதும் எனக்குக் கவலை யதிகமாய்விட்டது. தங்களிடம் வந்தேன். அவள் இப்படிக் கூறும்போது நாம் எந்த வரனை விசாரிப்பது?" என்று தெரிவித்தனள்.

பரோபகாரி இதைக்கேட்டதும் பரபரப்புற்று, தன் மகளிருக்கும் மாளிகைக்குச்சென்று, "கண்மணி! தேவ கன்னிகைகளும் அசுர கன்னிகைகளும் கணவனையடைய விரும்புகின்றவர்களாயிருக்க, நீ யேன் கணவன் வேண்டாமென்று கூறுகின்றாய்?" என்று கேட்டான். கனகரேகை புவியைக்குனிந்து பார்த்தவண்ணமிருந்து "பிதாவே! விவாகஞ் செய்துகொள்வதில் எனக்கிப்போது சம்மதமில்லை. அதனால் தங்களுக்கேன் கவலை? நான் விரும்பாததைப்பற்றி நீங்களேன் பிடிவாதமாகப் பேசுகின்றீர்கள்?" என்றுகேட்டாள். இதைக்கேட்ட பரோபகாரி, "பாபத்தை யொழிப்பதற்குக் கன்னிகாதானத்திலும் சிறந்ததொன்றுண்டோ? உறவினர்களுக்குட்பட்ட கன்னிகைக்குச் சுவதந்தரமேது?" கன்னிகை பிறந்தது முதல் பிறருக்காகவேகாப்பாற்றப் படுகின்றாள். ஒரு பெண்ணிற்குக் கணவன் வீடன்றித் தந்தையின் வீடு வசிப்பதற்குரியதாமோ? கன்னிகை ருதுவாய்விடின், பந்துஜனங்கள் கீழான கதியையடைகின்றார்கள். அவளை வ்ருஷளி

யென்றழைப்பார்கள். பின்னர் எவன் அவளை விவாகஞ் செய்து கொள்ளுகின்றானோ அவனை வ்ருஷளீபதி யென்றழைப்பார்கள்" என்று கூறினன்.

இவ்வாறு தந்தை கூறவே, ராஜகுமாரியாகிய கனகரேகை, "பிதாவே! அவ்வாறாயின் வேதியர்களிலோ க்ஷத்திரியர்களிலோ எந்தப் புண்ணியாத்துமா கனகபுரியென்னும் நகரத்தை பார்த்திருக்கின்றானோ அவனுக்கே என்னைத் தாங்கள் மணஞ்செய்து கொடுக்கவேண்டும். இல்லாவிடில் என்னைக்கேட்பது வீணேயாகும்" என்றாள். இவ்வாறு கனகரேகை தெரிவிக்கவே, அரசன், சந்தோஷம்; விவாகமே செய்து கொள்ளமாட்டேன் என்று கூறிய இவள் இப்போது செய்துகொள்ள ஒப்புக்கொண்டிருக்கின்றாள்; அதுவே போதும்! இவள் தேவமாதாகவிருப்பள். ஏதோ ஒரு நிமித்தமாக நம் வீட்டிற் பிறந்திருக்கின்றாள். இல்லாவிடின், இச்சிறுமி இவ்வளவு விவரம் எவ்வாறறிவள்? என்று தனக்குள்ளே யோசித்துக்கொண்டு மகளைப்பார்த்து, "உன் விருப்பத்தின்படியே யாகட்டும்" என்று அன்போடுரைத்து அவ்விடம் விட்டகன்றனன்.

மறுநாள் ராஜசபை கூடிற்று. மந்திரி பிரதானிகள் பிரமுகர்கள் யாவரும் வந்து தத்தம் ஆசனத்தமர்ந்திருந்தனர். அரசன் சபைக்கு வந்து ஆசனத்தமர்ந்து எல்லோரையும் பார்த்து கனகபுரி யென்னும் நகரத்தைக் கண்டவர் யாரேனுமிருக்கின்றனரா? அந்நகரத்தைப் பார்த்தவன் எவனோ அவனுக்கு நமது குமாரியை விவாகஞ்செய்து கொடுத்து யுவராஜ்யத்தையும் அவனுக்கே தருவதாகத் தீர்மானித்திருக்கின்றோம். அவன் வேதியனாகவாவது க்ஷத்திரியனாகவாவது இருக்கலாம்" என்று கூறினன். சபையோர், "மகாராஜாவே! கனகபுரி யென்னும் நகரத்தின் பெயரை யிதுவரையில் நாங்கள் செவியிற் கேட்டுமறியோம். அவ்வாறிருக்க அந்நகரத்தை யார்பார்த்திருக்கப்போகின்றார்கள்?" என்று வியப்புடன் தெரிவித்தனர். உடனே அரசன் துவாரபாலகனைவரவழைத்து, நீ இந்நகரமுழுதும் பறைபறைவித்து எவனேனும் கனகபுரியைப் பார்த்ததுண்டாவென்று விசாரித்துத் தெரிந்து வாவென்று ஆக்ஞாபித்தான். துவாரபாலகன் அவ்வாறே செய்கின்றேன் என்று கூறிப்போய்விட்டான்.



துவார பாலகன், வள்ளுவரிற் பலரை வரவழைத்து, "வேதியர் அல்லது க்ஷத்திரியர்களுள் யார் கனகபுரியைப்பார்த்தவரோ அவருக்கு மகாராஜா அவர்கள் தமது பெண்ணைக் கொடுத்து இராஜ்யத்தையுங் கொடுக்கத் தீர்மானித்திருக்கின்றார்கள்; பார்த்தவர்கள் இராஜ சமுகத்திற்குச்சென்று தெரிவித்துக் கொள்ளலாம் என்று கூறிப் பறையறையும்படி செய்தனன். வள்ளுவர்கள் அவ்வாறே நகரமுழுதும் நான்கு பாரிசமும்பறையறைந்தனர். அந்நகரத்தாரெல்லாரும் இதென்ன விந்தை! கனகபுரியென்னும் ஒரு நகரமிருப்பதாக நாம் கேட்டது மில்லையே! பார்த்தவர்கள் யாரிருக்கப்போகின்றார்கள் என்று பேசிக்கொண்டார்கள். ஒருவராவது கண்டதாக முன் வரவில்லை. ஆனால் அனேக நாள் சென்ற பின்பு சக்திதேவன் என்னும் ஒரு பிராமணன் செவிக்கு இச்சங்கதி யெட்டியது. அவன் பரமயேழை. சூதாடிச் சொத்தைத் துறந்தவன். அந்தப் பிராமணன், நானோ பரமயேழை நான் சூதாடிச் சொத்தை யொழித்துவிட்டமையின் தந்தை வீடு செல்லக்கூடாதவனாயிருக்கின்றேன். தாஸி வீடு போகவும் அருகனல்லன். இவ்வாறான நிலைமையிலிருக்கும் நான் பொய் சொல்வதுதான் சிறந்தது. ஆகையால் நான் இப்போதே போய் இராஜதூதர்களிடம் கனகபுரியை நான் கண்டேனென்று கூறுகின்றேன். எவன் என்னைக்கவனிக்கப்போகின்றான்? இவ்வாறு செய்யின் நான் இராஜகுமாரியை யடையக்கூடும் என்று தனக்குள் யோசித்துக்கொண்டுஇராஜ தூதர்களிடஞ் சென்று "நான் கனகபுரியைக் கண்டிருக்கின்றேன்" என்று கூறினான். அவர்கள் சந்தோஷமடைந்து அவ்வந்தணனைத்துவாரபாலகனிடம்அழைத்துச் சென்றனர். துவாரபாலகன் கேட்டதற்கும் அவ்வந்தணன் "ஆம் நான் கனகபுரியைக்கண்டதுண்டு" என்றுதெரிவித்தான். துவாரபாலகன் அவனை யுபசரித்து மனமகிழ்ச்சியுடன் அரசனிடம் அழைத்துச்சென்று செய்திகூறினன். அவ்வந்தணன் அரசன் முன்னேயும்தான் கனகபுரியைக்கண்டதாகப் பொய் சொன்னான். சூதிற் பொருளிழந்த வஞ்சகர்கள் எதைத் தான் செய்யத் துணியார்கள்?

இந்தச் சக்திதேவன் கூறுவது உண்மையா வென்றறிய அவனைத் தன் புத்திரியினிடம் அனுப்பினான். கனகரேகை அவ்

வந்தனனை நோக்கி, "நீர் கனகபுரியைக் கண்டதுண்டா?" என்று வினவினள். சக்திதேவன், "நான் வித்தையை விரும் பிப்பூமியில் சுற்றிவரும்போது கனகபுரியைக் கண்டேன்" என் றான். கனகரேகை, "நீர் எந்தவழியே கனகபுரிக்குச் சென்றீர்? அந்நகரம் எத்தன்மயது?" என்று கேட்டனள். வேதியன், "இங்கிருந்து நான் ஹரபுரஞ்சென்று அப்பால் வாரணசி சென் றேன். அங்கிருந்து சில நாளைக்கெல்லாம் பௌண்டர வர்த்த னம் என்னும் நகரஞ்சென்றேன். அப்பால் அந்நகரத்திலிருந்து புறப்பட்டுக் கனகபுரிக்குச்சென்றேன். அதைச் சுற்றிப்பார்த் தேன். அது புண்யகர்மமுடையவர்களுக்குச் சுகமனுபவிக்கத் தக்க பூமியாகக் காணப்பட்டது. இமையா நாட்டமுடைய வர்களனுபவிக்கத்தக்க இந்திரலோகம் போலவிருந்தது அந் நகரம். அங்கே நான் கல்விபயின்று சில காலத்திற்குப்பிறகு இங் கே வந்தேன்" என்று கூறினன். இராஜகுமாரி இதைக்கேட்ட தும் புன்முறுவலுடன் அவனைப்பார்த்து, 'பரமாச்சரியமாயிருக் கிறது; நீர் கனகபுரியைக்கண்டவர் என்பதில் சந்தேகமில்லை. நீர் எந்த மார்க்கமாக அந்நகரம் சென்றீர்? இன்னொரு முறை அத னைத்தெரிவியும்" என்று கேட்டாள். சக்திதேவன் முன்போல வே தன் சாமர்த்தியத்தைக் காட்டிப்பேசினன். கனகரேகை சின மடைந்து, தன் சேடிகளை ஏவி அவனை வெளியே துரத்தினள். பிறகு கனகரேகை தந்தையினரண்மனை சென்று அவரை வணங்கி நின்றாள். பரோபகாரி, "பெண்ணே! வேதியனொருவன் வந்தா னே? அவன் சொல்லிய துண்மைதானு?" என்று கேட்டான். கனகரேகை, "பிதாவே! நீர் ஓர் அரசனுகவிருந்தும் விசாரியா மலே அரசுசெலுத்துகின்றீர். வஞ்சகர்கள் உண்மை பேசுகிறவர் களை மோசஞ்செய்வார்கள் என்பதைத் தாங்கள் அறியாமற்போ னீர்கள்! அந்த வேதியன் பொய்யன். என்னை ஏமாற்றுவதற்காக வந்தவன். அவன் கனகபுரியைக் கண்டவனே யல்லன். தூர்த்தர் கள் இந்தப் புவியில் பலவாறான வஞ்சனைகளைச் செய்கின்றனர். அவ்வாறு நடந்த சிவன், மாதவன் என்னும் இருவருடைய வர லாற்றைத் தெரிவிக்கின்றேன் சற்றுக் கவனித்துக்கேளுங்கள்" என்று கூறுவாளாயினள்.

இரத்தினபுரமென்னுமொருபட்டணமுண்டு. அங்கே சிவன் மாதவன் என்னும் இரண்டு வஞ்சகர்களிருந்தனர். கபடமான



வழியில் நடந்து அந்நகரத்திலுள்ள பிரபுக்களின் பொருளைக் கொள்ளைகொண்டு இறுமாந்திருந்தனர். அவ்விருவரும் ஒரு சமயம் தனித்தவிடத்திலிருந்து "இந்நகரமுழுதையும் நாம் கெடு த்துவிட்டோம். இனி இங்கிருத்தல் கூடாது. உச்சயினி நகரஞ் செல்வோம். அந்த உச்சயினி நகரத்து அரசனுடைய புரோகித ரொருவரிருக்கின்றார். சங்கரசுவாமி யென்பது அவர் பெயர். அவர் மிகுந்த பொருளுடையவர் என்று கேள்வி. அவ ரிடமிருந்து யுக்தியாகப் பொருளை அபகரிக்கவேண்டும். அப் படியே மாளவதேசத்து மாதர்களின் விலாஸ ஸரஸங்களை யறிந்து கொள்ளலாம். அந்தச் சங்கரஸ்வாமிக்கு ஒரு சிறந்த கன்னிகையிருப்பதாகவும் கேள்வி. அந்தக்கன்னிகையையும் அவ ரிடமிருந்து அடையலாம் என்று ஒருவன் தெரிவித்தான். பிறகு இருவரும் அதற்குத்தக்கபடி கலந்து யோசனை செய்துகொண்டு அந்நகரத்திலிருந்து புறப்பட்டுப் போனர்கள். மாதவன் தன் பரி வாரங்களுடன் உச்சயினிக்குச்சென்று அந்நகரத்திற்குப்புறம்பே யிருந்த வொரு கிராமத்தில் தங்கி அங்கே இராஜகுமாரனைப் போலவேடம் பூண்டு கொண்டிருந்தனன். சிவன் பிர்மசாரிவே டம் பூண்டு அந்த உச்சயினி நகரத்திற்குள் பிரவேசித்து அங் கோடும் ஒரு நதியின் கரையில் மண் தர்ப்பைகள், பிக்ஷா பாத் திரம், மான்தோல் இவைகளுடன் மடத்தில் வசித்துக்கொண் டிருந்தான். அவன் நாடோறும் அதிகாலையில் தன்னை மண்ணால் சுத்திசெய்துக் கொள்வான். நதியில் மூழ்கி ஜலத்திற்குள் தலை கீழாக நெடுநேரமிருப்பான். அவன் செய்யும் கெட்டசெய்கைக ளால் ஏற்படப்போகும் கீழானகதியை அப்பியஸிப்பவன் போலக் காணப்படுவான். மூழ்கியெழுந்ததும் சூரியனுக்கு நேராகவெகு நேரமிருப்பன். அப்படியவன் சூரியனுக்கு நேராக விருப்பது, தான் சூலத்தில் ஏறுவதற்குத் தகுதியுடையவனென்பதைக்காட்டு வது போலவிருக்கும்.

அப்பால் சிவபெருமானுடைய ஸந்நிதானத்திற்குச் சென்று தர் ப்பைகளையும் கூர்ச்சங்களையும் கையில் வைத்துக்கொண்டு டாம் பீகத்தைத்தெரிவிக்கும் முகத்துடன் பத்மாஸனத்தில் வீற்றிருப் பான். நெடுநேரம்வரையில் ஜபம் செய்வான். ஸாதுக்களின் மனம் போன்ற நிர்மலமான மலர்களைக்கொய்து பரமசிவனைப் பூஜிப்

பான். பூஜை புரிந்தபின்னர் மறுபடியும் பொய்யாக ஜபஞ் செய்
வான். கெட்டவழிகளிற் கருத்தைச்செலுத்துபவன் போலத்
தியானஞ்செய்வான். நடுப்பகல் நேரத்தில் பிக்ஷையை விரும்பி
மான்தோலுடுத்து மோசக் கருத்துடைய கடைக்கண்போலச்
சுற்றுவான். மௌந நியமத்துடன் அந்தணர்களில்லங்கடோறுஞ்
சென்று பிக்ஷை யெடுத்து வந்து ஓரிடத்துட்கார்ந்து தண்டத்
துடனும் மான்தோலுடனும் ஸத்தியத்தைக்கண்டிப்பது போலப்
பிரிப்பான். ஒரு பாகத்தைக் காக்கைளுக்குப் போடுவான். ஒரு
பாகத்தை அதிதிகளுக்குப் போடுவான். மீந்ததைத்துருத்தி போ
ன்ற தன் வயிற்றுக்கீந்து நிரப்புவான். தான் செய்யும் பாபங்களை
யெல்லாம் கணக்குச் செய்பவன் போல உருத்திராக்ஷமாலையை
உருட்டிக்கொண்டு ஜபஞ்செய்வான். இராத்திரியில் மடத்தில் தா
னொருவனாகவே படுத்திருந்து ஜனங்களின் ஸௌக்ஷேம நிலைமை
களைப்பற்றி நினைத்துக்கொண்டிருப்பான். இவ்வாறு தினந்தோறும்
சிரமமும் வஞ்சகமுமான தவத்தைச்செய்து கொண்டிருந்து அந்
நகரவாசிகளின் மனதைக்கவர்ந்தான். இவர் சாந்தசீலர்; மகா
தபசி யென்னும் பேச்சு எங்கும் பரவிற்று. ஜனங்களில் அநேகர்
பக்தியோடு இவனிடம் வந்து இவனை வணங்கத் தலைப்பட்டனர்.

இச்சமயம் பார்த்து மாதவனும் நகரத்திற்குட் பிரவேசித்து,
அவனுக்கு வெகு தூரத்திற் கப்பாலிருந்தவோர் ஆலயத்தில்
தன் வாசஸ்தானமேற்படுத்திக்கொண்டு நாடோறும் ஸிப்ரை
என்னும் நதிக்கு ஸ்நானத்திற்குச்சென்று அந்நதிக்கரையில் உட்
கார்ந்து ஜபஞ் செய்யும் தன் நண்பனாகிய சிவனைத் தன் பரிவாரங்
களுடன் வணங்குவதும் அவனைப்பற்றி ஜனங்களுக்கு மத்தியில்
"இவர் மகாத்மா, தபஸி, இவரை நான் யாத்திரைசென்ற சமயம்
அடிக்கடி தரிசித்திருக்கிறேன். இவர் போன்ற தபஸி தற்காலங்
கிடைப்பதரிது" என்று புகழ்வதுமாக சில நாளிருந்தான். அப்
பால் ஒரு நாளிரவில் இருவரும் ஓரிடத்தில் ஒன்றுசேர்ந்துஇனிச்
செய்யவேண்டியதைப்பற்றி யோசித்துத் தீர்மானஞ் செய்து
கொண்டு தத்தம்மிருப்பிடம் விடியுமுன்னரே திரும்பிவிட்டனர்.
அன்றைக்கு மறுநாட் காலையில் மாதவன், தன்னைச்சேர்ந்த தூர்
த்தனொருவனை யழைத்து "நீ இந்த வஸ்திரத்தை யெடுத்துக்கொ
ண்டு இராஜ புரோகிதராகிய சங்கரசுவாமியிடம் சென்று அவரு



க்கு இதைக் காணிக்கையாகத் தந்து, மாதவன் என்னும் இராஜ
குமாரன் தன்னுடைய தாயாதிகளிடம் அவமதிப்படைந்து தன்
தந்தையின் பொருளில் மிகுதியும் எடுத்துக்கொண்டு தென்றே
யத்திலிருந்து இங்கே வந்திருக்கின்றார். அவருக்குச் சமமான
இன்னும் சில இராஜகுமாரர்களுடன் உங்களுடைய இராஜாவைப்
பார்க்க விருப்பங்கொண்டிருக்கின்றார். கீர்த்திக்கு நதியாகிய
குருவே! அந்த மாதவன் என்னைத் தங்களுடைய தரிசனத்திற்
காக அனுப்பினர் என்று வணக்கத்துடன் புரோஹிதருக்கு சொ
ல்லவேண்டும்" என்று கூறினன். அந்தத் தூர்த்தன் சம்மதித்து,
உடனே காணிக்கையை யெடுத்துக்கொண்டு அந்தப் புரோகித
னுடையகிருகம் வந்தான். அப்போது புரோகிதனுடைய வீட்டில்
யாருமில்லை. புரோகிதன் தனியே உட்கார்ந்திருந்தான். அப்பொ
ழுது அவனைக் கண்ட தூர்த்தன் தான் கொண்டு வந்தஉபாயனத்
தைக் கொடுத்து,மாதவன் கூறியதை உசிதமாகத்தெரிவித்தான்.
புரோகிதன் காணிக்கையை ஆசையோடு பெற்றுக்கொண்டு தூர்த்
தனுடைய வார்த்தையை நம்பி மனமகிழ்ச்சியடைந்தான். ஆசை
யுள்ளவர்களை வசப்படுத்தக் கொடுப்பதென்பதேமருந்தாகின்றது.
பிறகு தூர்த்தன் புரோகிதனிடம் விடைபெற்றுக்கொண்டு மாதவ
னிடம் சென்று செய்தி தெரிவித்தான். மாதவன் மறுநாளே சம
யம் பார்த்துப் புரோகிதரைப் பார்ப்பதற்குத் தானே புறப்பட்டு
வந்தான். அவனைச் சார்ந்தவர்களும் மாதவனை இராஜ குமார
னென்ற பாவனையோடு தொடர்ந்து வந்தனர். மாதவன் தன்வர
வைச் சேவகன் மூலமாகத் தெரிவித்துப் புரோகிதனிடம்சென்று
அவரோடு கணப்பொழுது சம்பாஷித்துக் கொண்டிருந்து அவ
ரிடம் விடைபெற்றுத் தன்னிருப்பிடம் சென்றான். இரண்டாவது
நாளும் தன் தூர்த்தன் மூலமாக இரண்டு வஸ்திரங்களைக் காணிக்
கையாக அனுப்பி, 'நாங்கள் பரிவாரங்களுடன் அரசனைக் காண
விரும்பியுள்ளோம். இவ்விஷயத்தில் தாங்கள் ஏற்பாடாகவிரு
ந்து எங்கட்கநுக்கிரக்க வேண்டும். எங்களுக்குப்போதுமான
பொருளிருக்கின்றது" என்று தெரிவித்துக் கொண்டான் மாத
வன். புரோகிதன் அவ்வாறே செய்கிறேன் என்று பிரதிக்ஞை
செய்து அரசனுக்கு மாதவன் வருகையைத் தெரிவித்
தான். அரசன் புரோகிதனிடம் கொண்ட கௌரவத்தால் மாத
வன் வரவை ஏற்றுக்கொண்டான். அடுத்த நாள் மாதவன் தன்

பரிவாரங்களுடன் புரோகிதன் வீட்டிற்கு வந்தான். புரோகிதன் மாதவனை அவன் பரிவாரங்களுடன் அரண்மனைக் கழைத்துச் சென்று அரசனுக்கு அறிமுகஞ் செய்வித்தான். அரசன் மாதவனிடம் அவன் வரலாறு கேட்டுத்தெரிந்து கொண்டு அவனையரசகுமாரனென்று நம்பித் தன் அரண்மனையிலேயே யிருக்க ஆக்ஞாபித்தான். மாதவன் மனமகிழ்ச்சியடைந்து அன்று முதல் அரசன் அரண்மனையிலேயே யிருந்துவந்தான். பகலெல்லாம் அரண்மனையிற் கழித்து இராத்திரியில் சிவனிடஞ் சென்று தான் கொண்ட கருத்தை நிறைவேற்றுதற்கேற்ற ஆலோசனைகளைச் செய்து வந்தான். புரோகிதருக்கு அடிக்கடி மாதவன் பொருள் கொடுத்துச் சந்தோஷப்படுத்தி வந்தான். அதனால் புரோகிதன் மாதவனிடம் அன்பு கொண்டு அவனைத் தன் கிருகத்தில் வந்து சில நாளிருக்கும்படி கேட்டுக்கொண்டான். மாதவன் அதற்கிசைந்து அவனுடைய கிருகத்திலேயே யிருந்து வந்தான். அப்பொழுது ஒரு நாள் மாதவன் புரோகிதனுக்கு மாணிக்கமயமான ஆபரணங்கள் நிறைந்த ஒரு பாத்திரத்தைக் காட்டினான். இதிலுள்ள ஆபரணங்கள் விலை மதிக்கக் கூடாதன என்று கூறிப் பசுவின் மனதை இளம்புற்களாற் கவருவதுபோலப் புரோகிதன் மனதைக் கவர்ந்தான் மாதவன். புரோகிதன் மாதவனை ஒரு பெரிய தன வந்தனென்று நம்பியிருந்தான்.

இவ்வாறான நம்பிக்கை ஏற்பட்டபின், மாதவன் தன் ஆகாரத்தை வேண்டுமென்று குறைத்துண்டு வந்தான். அதனால் அவன் தேகம் சிலநாளில் மெலிவடைந்து படுக்கும்படியான நிலைமைக்கு வந்து விட்டான். அப்பொழுது மாதவன், புரோகிதனைப்பார்த்து, "பிராம்மண சிரேஷ்ட! தேகத்தில் கெட்ட அவஸ்தைகளுண்டாயிருக்கின்றன. ஆகையால் உமக்குத் தெரிந்த பிரம்மணரொருவரை யழைத்து வாரும்; அவர் மகாசிஷ்டராகவிருக்கவேண்டும். அவருக்கு இகபரமிரண்டு சுகங்களையுங் கருதிப் பொருளெல்லாவற்றையு மளிக்கின்றேன். ஸ்திரமில்லாத உயிரில்சிறந்த மனமுடையவன் விருப்பம் வைப்பானோ?" என்று கூறினன். புரோகிதன் "அவ்வாறே தேடியழைத்து வருகின்றேன்" என்றனன். மாதவன், "பரமசந்தோஷம்" என்று கூறிப் புரோகிதன் பாதத்தில் பணிந்தான். அப்பால் புரோகிதன்



அந்நகரத்திலுள்ள பிராம்மணருள்சிறந்தவர்களைத்தேடியழைத்து வந்தான். மாதவன் அவர்களொருவரையும் ஏற்றுக்கொள்ளவில்லை. அப்போது மாதவன் அருகேயிருந்த தூர்த்தனொருவன், புரோகிதனைப் பார்த்து, "சுவாமி! ஸிப்ராநதிக் கரையிலிருக்கும் மகாதவசியையழைத்துவரின் இவர்விரும்புகின்றாராபார்ப்போம்" என்றனன். மாதவன் இதைக்கேட்டதும் மகிழ்வுற்றுப் புரோகிதனை நோக்கி, "ஐயா! அநுக்கிரகம் செய்யவேண்டும். மற்ற அந்தணர்கள் அந்தச் சிவனுக்குச் சமானர்களாகார்கள் என்றெண்ணுகின்றேன். அவரை வரவழையுங்கள்" என்று பிரார்த்தித்தான். புரோகிதன் உடனே சிவனிடம்சென்று பார்த்தான்; அப்போது சிவன் தியானத்திலிருந்தான். அது கண்ட புரோகிதன் அவனை வலம் வந்து பணிந்து அவன்முன் னுட்கார்ந்தான். அப்பொழுது அந்தச் சிவன் கண்களைத்திறந்து பார்த்தான். புரோகிதன் இது தான் சமயமென்றெண்ணி, "சுவாமி! கோபங்கொள்ளாதிருந்தால் ஒரு விஷயம் தெரியப்படுத்துகின்றேன்" என்று விநயத்துடன் கூறினான். சிவன் உதட்டை அசைத்துச் சமிக்ஞை செய்து விடை கொடுத்தான். புரோகிதன், "சுவாமி! நமது கிருகத்திற்கு மிகுந்த பொருளுடைய ஒருவர் தென்தேசத்திலிருந்து வந்திருக்கின்றார். அவர் பெயர் மாதவன். அவர் இப்பொழுது மிகவும் அசௌக்கியமா யிருக்கின்றார். அவர் தம்மிடமிருக்கும் பொருளை யெல்லாம் தம்போன்ற அந்தண சிரேஷ்டருக்குக் கொடுக்கத் தீர்மானித்திருக்கின்றார். அப்பொருளைப் பெற்றுக்கொள்ளத் தங்களுக்குச் சம்மதமாயின் தெரிவிக்கலாம். அவரிடமுள்ள பொருள்களெல்லாம் விலையுயர்ந்தன. சிறந்த இரத்தினங்களும் அவரிட மிருக்கின்றன" என்று தெரிவித்தான். இதுவரையில் சிவன் மௌநநிலையிலிருந்து இப்பொழுது கண்ணைத் திறந்து, "பிராமணோத்தமரே! பிக்ஷையெடுத் துண்பவனும் பிரமசாரியுமாகிய எனக்குப் பொருளால் பயனென்ன?" என்று வெறுப்பாய்ப் பேசினான்.

புரோகிதன் "பிராம்மணோத்தமரே! தாங்கள் இவ்வாறுபேசலாகாது. ஆஸ்ரமங்களின் தன்மையையறிந்தவரல்லவா தாங்கள். விவாகஞ் செய்துகொண்டு தேவர்கள், பிதிராகள், அதிதிகள் இவர்களுக்குரிய கர்மங்களைச்செய்து வரும் கிருகஸ்தன் நான்கு ஆச்ரமிகளுக்குள் சிறந்தவனாகின்றான். அந்தக் கிருகஸ்தன் பொரு

ளால் தர்மம், அர்த்தம், காமம் என்னும் புருஷார்த்தங்களையடை
கின்றான்" என்று கூறினன். சிவன், "நான் விவாகமில்லாதவனா
யிற்றே! நல்லவம்சத்திற் பிறந்த கன்னிகை கிடைக்காவிடில் நான்
விவாகஞ்செய்து கொள்வதில்லை"யென்று கூறினான். புரோகிதன்,
லோபகுண முடையவனாகையால் மாதவனுடைய பொருளைச்
சுகமாக அநுபவிக்கலாமென்றெண்ணி, "வேதியரே! எனக்கு
ஒரு புதல்வியிருக்கின்றாள். விநயஸ்வாமினி என்பது அவளுடைய
பெயர். நல்லரூபவதி. அப்பெண்மணியை உமக்கு நான் கொடுக்
கின்றேன். தாங்கள் அப்பால் மாதவனிடம் பொருளையடைய
லாம். அந்தப் பொருளை நான் காப்பாற்றுகின்றேன். ஆகையால்
தாங்கள் கிருகஸ்தாசிரமத்தைத் தடையின்றி அடையலாம்" என்
றான். சிவன், "அந்தணரே! நீர் விரும்புகிறபடியே செய்கின்
றேன். நான் தபஸி, ஸ்வர்ணம் இரத்தினம் இவைகளின் சொரூ
பத்தையறியேன். உமது பேச்சை நம்பித்தான் நான் உடன்
படுகின்றேன். உமது சம்மதப்படி செய்யுங்கள்" என்றான்.
புரோகிதன், ஸந்தோஷமடைந்து, உடனே சிவனைத்தன் வீட்டிற்
கழைத்துச்சென்று ஓரிடத்திலிருக்கச் செய்துவிட்டுத் தான் மட்
டும் மாதவனிடஞ் சென்று நடந்ததைத் தெரிவித்தான். மாதவன்
கேட்டு மகிழ்வுற்றான். அப்பால் சிவனுக்குத் தன் புதல்வியை
அக்னி சாட்சியாக மணஞ்செய்து கொடுத்தான்.

விவாக முடிந்த சில நாளைக்கெல்லாம் சிவனை மாதவனிடம்
அழைத்துச் சென்று தெரியப்படுத்தினான். மாதவன் உடனே
மெதுவாய் எழுந்து சிவனுடைய திருவடிமலரிற்பணிந்து பெட்டி
யிலிருந்து பொருளைக் கொண்டுவரச் சொல்லி விதிப்படி அவனுக்
குத் தானங் கொடுத்தான். சிவன் அதை மனமகிழ்ச்சியுடன்
மாதவனிடமிருந்து பெற்றுக்கொண்டு புரோகிதனிடம் அப்பொ
ழுதே கொடுத்து, "நான் பொருளைக் காப்பாற்றும் வகையையறி
யேன். நீர்தான் எல்லாம் நடத்தவேண்டும்." என்றான். புரோகி
தன், "அதைத்தான் நான்முன்பே ஒப்புக்கொண் டிருக்கின்றே
னே; அதைப்பற்றி நீர் ஏன் கவலைப்படவேண்டும்" என்று தெரி
வித்து அப்பொருளைப் பெற்றுக்கொண்டான். அப்பால் சிவன்
மாதவனுக்கு ஆசீர்வசனங் கூறித் தன் மனைவியிடஞ் சென்றான்.

மாதவன் இரண்டொரு நாள் சென்ற பிறகு தான் தான
ஞ் செய்த மகிமையால் தனக்கு நேரிட்டிருந்த வியாதி நீங்கி



விட்டதென்று சொல்லிக்கொண்டு எழுந்துட்கார்ந்து பேசத்தொ
டங்கினான். அப்போது தன்னைப் பார்க்கவந்த புரோகிதனைப்பார்
த்து "உமது சகாயத்தால் தான் நான் எனக்கு நேரிட்ட ஆபத்
திலிருந்து தப்பினேன்" என்று கூறி அவனைக் கொண்டாடினான்.
பிறகு நாளடைவில் மாதவன் சிவனோடு வெளிப்படையாகச் சிநே
கம் பாராட்டலானான். இந்த மகானுக்குத் தானமளித்த மகிமை
யால் நான் ஆபத்திலிருந்து தப்பினேனென்று எல்லோரிடமும்
சொல்லிச் சிவனைப்பற்றிப் புகழ்ந்து பேசிவந்தான் மாதவன்.

இவ்வாறுகச் சிலநாட் கழிந்தன. அப்பால் சிவன், புரோகித
னைப்பார்த்து, "இவ்வாறே நான் உமது கிருகத்திற் புசித்துவரு
கின்றேன்? நீர் என்னிடமிருக்கும் விலையுயர்ந்த நகைகளை ஏதே
னும் பொருள் கொடுத்து ஏன் பெற்றுக்கொள்ளக் கூடாது"
என்று கேட்டான். புரோகிதன், சிவனிடமிருக்கும் ஆபரணங்
கள் விலையுயர்ந்தன வென்றெண்ணி, அவற்றிற் கொருவிலை யேற்
படுத்தி அதைக் கொடுத்து அவைகளை வாங்கிக்கொண்டான்.
புரோகிதன் சிவனுடைய ஆபரணம் விலையுயர்ந்ததென்னு மெண்
ணமுடையவனாதலின் அவனிடம் ஒரு விக்கிரயப் பத்திரமும்
எழுதி வாங்கிக்கொண்டான். இவனும் அவனுக்கொன்று எழுதிக்
கொடுத்தான்.

அப்பால் சிவனும் மாதவனும் சேர்ந்து புரோகிதனுடைய
பொருளை யநுபவித்துக்கொண்டு தங்களிச்சைப்படி அவ்விடத்
திலேயே யிருந்து வந்தார்கள். இங்ஙனமிருக்குங் காலத்தில் ஒரு
நாள் அவ்விடத்திற்கோர் இரத்தினப் பரிக்ஷை தெரிந்தவன் வந்
தான். அவனைப் புரோகிதன் அழைத்துவந்து தான் சிவனிட
மிருந்து வாங்கிய இரத்தினாபரணங்களைப் பரீட்சை செய்யுமாறு
கேட்டுக்கொண்டான். அவன் பரீக்ஷித்துப் பார்த்து, "இவ்வாபர
ணங்களிலுள்ள இரத்தினங்களெல்லாம் சுயமான இரத்தினங்க
ளல்ல; ஸ்படிகக் கற்கள்; தக்கவாறு வர்ணங் கொடுக்கப்பட்டிருக்
கின்றன; கிருத்திருமமாய் ஏற்பட்டவைகள்" என்று கூறினான்.
புரோகிதன் இவ்வார்த்தையைக் கேட்டவுடன் இடிமுழக்கங்
கேட்ட அரவம்போன்று அஞ்சினான்; உடனே சிவனிடஞ்சென்று
உமது ஆபரண முதலியவற்றை வாங்கிக்கொண்டு என்னிடம்
என்பொருளைக் கொடுத்துவிடுமென்று கேட்டான். சிவன் "என்
னிடமேது பொருள்? எனக்கும் பொருளுக்கும் வெகுதூரமெ

ன்று முன்பே தெரிவித்தேனே; அல்லாமலும், இவ்வளவு நாள் சாப்பிட்டுவந்ததற்கு யாவும் செலவாய்விட்டனவே" என்று கூறினன். அப்பால் இருவரும் அருகேயிருந்த மாதவனைப்பற்றிவிவாதஞ் செய்துகொண்டு அரசனிடம் சென்றார்கள். புரோகிதன் அரசனை நோக்கி, "மகாராஜாவே! இந்தச் சிவன் படிகக் கற்களில் சாயங்களேற்றி ஆபரணங்களில் வைத்துக்கட்டி என்னிடங் கொண்டுவந்து காட்டி என்னிடமிருந்த பொன்னை வாங்கிக் கொண்டுபோய் ஒளித்துவிட்டான்" என்று முறையிட்டான். சிவன், "பிரபுவே! நான் சிறுவயதுமுதல், தவசியாகவே யிருந்துவந்தவன்; இந்தப் புரோகிதனே என்னை யழைத்து வந்து இவ்வாபரணங்களைத் தானம் வாங்கும்படி செய்தான். நான் மூடனேயெனினும் அப்பொழுதே புரோகிதனை நோக்கி, "எனக்குப் பொருளைப்பற்றி ஒன்றுந் தெரியாது. நான் ஒன்று மறியாதவன். எல்லாவற்றையும் நீங்கள் தான் பார்த்துக்கொள்ள வேண்டும்" என்று சொன்னேன். அதற்கு "இவர் நீங்களேன் கவலைப்பட வேண்டும், நானிருக்கின்றேன் பார்த்துக் கொள்கின்றேன்" என்று கூறினார். அவ்வாறு ஒப்புக்கொண்டபிறகு தான் நான் தானம் வாங்கி, வாங்கியவற்றை இவர் வசம் ஒப்புவித்தேன். அப்பால் இவர் தம்மிஷ்டப்படி பொருளைக் கொடுத்து ஆபரணங்களைத் தமது சுவாதீனப்படுத்திக்கொண்டார். இவ்விஷயத்தில் எங்களுக்குள் தஸ்தாவேஜுகள் ஏற்பட்டிருக்கின்றன என்று தனக்குப் புரோகிதன் எழுதிக் கொடுத்திருந்த பத்திரத்தைக் காட்டிப் "பிரபுவே! கவனிக்க வேண்டு"மென்று கூறினான்.

இவ்வாறு சிவன் கூறியும் மாதவன், "ஓய் நீர் பெரியவர்! பூஜிப்பதற் குரியவர். இவ்வாறு சொல்லக்கூடாது. இவ்விஷயத்தில் நான் செய்த குற்றமென்ன? உம்மிடத்திலாவது இவரிடத்திலாவது எதையும் நான் பெறவில்லையே. நான் என் தந்தைக்குரிய பொருளையல்லவா கொண்டுவந்து வேதியருக்குக் கொடுத்தேன். நான் கொடுத்த பொருள் யாவும் உண்மையில் நல்ல இரத்தினங்களும் சொர்ணங்களுமேயாம். நான் படிகக் கற்களைத் தானஞ் செய்திருப்பேனாயின் அதற்குரிய பலன் எனக்கேற்படட்டும். நான் நிஷ்கபடியாகையால், தானஞ் செய்வதில் எனக்கு நம்பிக்கையுண்டாயிற்று. இந்தநம்பிக்கைக் கேற்ற



படி எனக்கு நேர்ந்திருந்த வியாதியும் குணமாயிற்று" என்று கூறினான்.

இவ்வாறு மாதவன் தன் முகக்குறி ஒருசிறிதும் மாறாமற் கூறியவுடன் அரசன் ஆச்சரியமடைந்து, அமைச்சர்களை நோக்கி நகைத்து, மாதவனிடம் நல்ல அபிப்பிராயங் கொண்டான். சபையோரும் மாதவனிடத்திலாவது சிவனிடத்திலாவது பிழையில்லை என்று தங்கள் கருத்தைத் தெரிவித்தனர். இதைக் கேட்டவுடன் வேதியன் மிகுதியும் வெட்கமடைந்து அரசனை மறுமுறை பார்க்கவும் மனங்கொள்ளாமல் வீடுபோய்ச் சேர்ந்தான். லோபகுணத்தால் அறிவையிழந்து குருடானவர்கள் எத்தன்மையான ஆபத்தைத் தான் அடையார்கள்?

இவ்வாறு வஞ்சனையினால் பொருளைக் கவர்ந்த தூர்த்தர்களாகிய சிவனும் மாதவனும் சந்தோஷசித்தமுடையவர்களாயும் பயமில்லாமலும் அந்நகரத்திலேயே அநேகவருடகாலம் வாழ்ந்துவந்தனர்.

பிதாவே! தூர்த்தர்கள் இவ்வாறான உபாயங்களை மேற்கொண்டு பலவாறு பேசுவார்கள். இவர்களை நம்பொணாது. இந்த வேதியனும் கனகபுரியைக் கண்டவனல்லன். பொய்பேசும் வஞ்சகன். தங்களை மோசஞ் செய்து என்னை யடைய அவாக்கொண்டு இங்கே வந்த மூடன்; ஆகையால் தாங்கள் எனது திருமணத்தைக் குறித்து தற்போது அவசரப்படவேண்டாம். அடியேன் கன்னிகையாகவே யிருக்கின்றேன். நான் இவ்வாறிருப்பின் என்ன நடக்கின்றது பார்ப்போம் என்று தெரிவித்தாள் கனகரேகையென்னும் வனிதை.

பரோபகாரி, "பெண்ணே! யௌவனப் பருவம் வந்தால் விவாகமில்லாதிருப்பது தகுதியுடையதன்று. குணாகுணங்களிற் பகைகொண்ட துஷ்டர்கள் வீணே குறை கூறுவார்கள். சாதாரண ஜனங்களும் பெரியோர்மீது குற்றத்தை ஏற்படுத்துவார்கள். இதுசம்பந்தமான கதை யொன்றுண்டு கூறுகின்றேன் கேள்" என்று அரசன் கூறுவானாயினான்.

கங்கா நதியின் சமீபத்தில் குஸுமபுரம் என்னுமொரு நகரமுண்டு. அது பிரசித்திபெற்றவொரு பெரிய நகரம். அங்கு

ஹரசுவாமி யென்றொரு தவசிரேஷ்ட ரிருந்தார். அவர் புண்ணிய தீர்த்தத்தையே யெப்போதும் விரும்பியவர். அதனால் கங்கா நதிக் கரையிலேயே ஆச்ரமமேற்படுத்திக் கொண்டு வசித்து வந்தனர். அவர் பிக்ஷை யெடுத்து க்ஷுத்பாதையைத் தீர்த்துக் கொண்டு தன் தவத்திற் கருத்தைச் செலுத்தி வந்தனர். அவரிடத்தில் ஜனங்களுக்கு விசேஷமான கௌரவ முண்டு. ஹரசுவாமி யென்னுந் தவசி ஒரு சமயம் பிக்ஷைக்காக வெளியேபுறப்பட்டார். அப்பொழுது அவரைக்கண்ட ஒரு துஷ்டன் அவருடைய உத்தமமான குணங்களிற் பொறாமைகொண்டு ஜனங்களுக்குமத்தியிலிருந்து, "ஜனங்களே! இதோவரும் இந்தத் தவசிவஞ்சகன். இதை நீங்கள் தெரிந்துகொள்ளுங்கள். இவன் இந்நகரத்தில் வெகுநாளாக விருந்து அநேக சிறுவர்களைப் புசித்துவிட்டான்" என்றான். அவனருகேயிருந்த மற்றொரு துஷ்டன் "ஆம் இஃதுண்மை" என்று ஆமோதித்தனன். இதைக்கேட்ட மற்றொரு துஷ்டனும் ஆம் இவன் அப்படிப்பட்ட வஞ்சகனே யென்றான். இவ்வாறான துஷ்டர்களின் பேச்சாகிய சங்கிலியானது பெரியோருக்கு அபவாதத்தை யுண்டாக்குகிறது. அப்பால் சில நாளைக்கெல்லாம் அந்நகரமெங்கும் இப்பேச்சுப் பரவிவிட்டது. நகரவாசிகளனைவரும் ஐயோ! நமது ஸந்ததி நாசமடையுமே எனப் பயந்து ஹரசுவாமி யென்னுந் தவசியை நகரத்தைவிட்டு அப்புறப்படுத்த ஆலோசனை செய்தனர். நாம் நேரே சென்று தெரிவிக்கின் சினமடைந்து நம்மைப் புசித்துவிடுவார் என்று பயந்து எல்லோருஞ் சேர்ந்து யோசித்து ஒரு தூதனை யவரிடம் அனுப்பினர். தூதன் அவருக்கு வெகுதூரத்திற் சென்று நின்று "பெரியவரே! இந்நகரை விட்டு நீர்செல்ல வேண்டும்" என்று வேதியர்கள் தெரிவிக்கின்றார்கள் என்று கூறினன். இவ்வாறு தூதன் கூறவே, ஹரசுவாமி ஆச்சரியமடைந்து, காரணமென்னவென்று கேட்டார். தூதன், "பெரியவரே! தாங்கள் இந்நாள்வரையில் அநேக சிறு பிள்ளைகளைப் புசித்திருக்கிறீர்களாம். இன்னும் புசிப்பீர்களாம். இதுதான் காரணம்" என்றனன். உடனே ஹரஸ்வாமி அந்தணர்களிடஞ் சென்று தம்மிடம் அவர்களுக்கு நம்பிக்கையுண்டாகுமாறு செய்யப் பிரயத்தனப்பட்டார். இவரைக்கண்டதும் அந்தணர்கள் யாவரும், மாடிமீதேறி மறைந்துகொண்டனர். பிறனொருவன் அபவாதத்



தைக்கேட்டு அதில் நம்பிக்கை கொண்ட ஜனங்கள் அதைவிசாரிப்பதற்குச் சக்திபெறமாட்டார்கள். இது கண்ட ஹரஸ்வாமி வியப்புற்று, மாடியின்மீதிருக்கும் வேதியர்களை ஒவ்வொருவராகப் பெயரைச் சொல்லியழைத்து, "வேதியர்களே! இப்படிப்பட்ட மயக்க முண்டானதற்குக் காரணமென்ன? நான் எந்தவிடத்தில் எத்தனை பிள்ளைகளை யெப்போது புசித்தேன்" என்று கேட்டனர். பிறகு வேதியர்கள் எல்லோரும் அதைப்பற்றி யொருவரை யொருவர் விசாரிக்கலாயினர். எல்லோருடைய குழந்தைகளும் சுகமேயிருக்கக் கேட்டு நகரத்துள்ள மற்ற ஜனங்களையும் விசாரித்தார்கள். ஒருவருக்கும் ஒரு கெடுதியும் உண்டாகவில்லை யென்று தெரியவந்தது. ஆச்சரியம்! மூடர்களாகிய நாம் பரமசாதுவை வீணே தூஷித்தோம் என்று வருத்தமடைந்தனர்.

அப்பால் ஹரஸ்வாமி அந்நகரத்தைவிட்டு அன்றே புறப்படத் தயாராயினர். துஷ்டர்களால் ஏற்பட்ட அபவாதத்தால் வைராக்யமடைந்த மனமுடைய தீரன், விவேகமற்ற கெட்ட தேசத்திலிருக்கப் பிரியங்கொள்வானா? ஹரஸ்வாமி வேறு நகரஞ் செல்லப் புறப்பட்டுவிட்டா ரென்பதை யறிந்த வேதியர்களும் வர்த்தகர்களும் அவரது பாதத்திற் பணிந்து "எங்களை மன்னித்து இந்நகரத்திலேயே யிருந்து எங்களுக்கு அநுக்கிரகிக்கவேண்டும்" என்று வேண்டிக்கொண்டனர். ஹரஸ்வாமிகள் அவர்கள் பிரார்த்தனைக் கிரங்கி அந்நகரத்திலேயே வசித்து வந்தனர். துஷ்டர்கள் சாதுக்களின் நல்ல நடத்தையைக் கண்டு அதிற் பொறாமை கொண்டு அவர்கள் மீது இவ்வாறு அபவாத மேற்படுத்துகின்றனர். சாதுக்களிடம் சிறிது தோஷமிருக்குமாயின் அப்போது இவர்கள் பேசக் கேட்கவேண்டுமா? கொழுந்துவிட்டெரியும் தீயில் நெய்யை ஆகுதி செய்தது போலவாகு மன்றோ?

ஆதலின் என்னைச் சங்கடத்திற் காளாக்காமலிருக்க உனக்கு விருப்ப மிருக்குமாயின், உனது யௌவனப் பருவம் விருத்தியடையும் இக்காலத்தில் துஷ்டர்களுடைய அபவாத முண்டாகாதபடி விரைவில் விவாகஞ் செய்துகொள்வது தான் சரியாகும். நீடித்தகாலம் கன்னிகையா யிருப்பது சரியல்ல என்றான் பரோபகாரி. கனகரேகை, "பிதாவே! வேதியனிலோ க்ஷத்திரியனிலோ எவன் கனகபுரியைக் கண்டவனோ அவனைத் தேடிக்கொண்டு வரவேண்டும். அவனுக்கு என்னை மணஞ்செய்துகொடும். அவ்வாறு

செய்யின் அஃது எனக்குச் சம்மதமாம். இவ்வளவு தான் எனக்குச் சொல்லத் தெரியும்" என்றாள். அரசன், கனகரேகைபோ இவ்விஷயத்தில் நிச்சயமான தீர்மான முடையவளா யிருக்கின்றாள். ஜன்மாந்தர ஞாபகம் இவளுக் கிருக்கவேண்டுமென் றெண்ணி, அவள் கூறியபடியே கனகபுரியைக் கண்டவனைத் தேடிக் கொண்டுவர ஏற்பாடு செய்தான். தன் தேசத்திலெங்கும் இவ் விஷயமாய்ப் படகவாத்தியம் முழக்கும்படி தூதர்களுக்குக் கட்டளையிட்டான். நாடோறும் வள்ளுவர்களை எங்குக் கண்டாலும் படகவாத்தியத்தை முழக்கிக்கொண்டு "க்ஷத்திரியர்களிலும் வேதியர்களிலும் எவர்கள் கனகபுரியைக் கண்டவர்களோ அவர்கள் மகாராஜாவிடஞ் சென்று தெரிவிக்கவேண்டியது" என்று கூறினார்கள். அங்ஙனஞ் செய்தும் கனகபுரியைக் கண்டவன் நான் என்று ஒருவனும் முன்வரவில்லை.

## சதுர்த்தாரிகாலம்பகம்

### முதல் தரங்கம்




## சதுர்த்தாரிகாலம்பகம்

### 2-வது தரங்கம்.

இஃது இவ்வாறிருக்கையில், அந்தணச் சிறுவனாகிய சக்திதேவன், தான் இச்சித்த இராஜகுமாரியினிடம் அவமதிப்படைந்ததைக்கருதிப் பின்வருமாறு ஆலோசனைசெய்யத்தொடங்கினான்.

"கனகபுரியைக் கண்டேனென்று பொய் சொன்னதற்கு இராஜகுமாரியினிடம் நான் அவமதிப்பை யடைந்தேனேயன்றி அவ்வனிதையைப் பெற்றேனில்லை. எவ்விதத்திலும் இந்த இராஜகுமாரத்தியை நானடைய வேண்டும். என்னுடைய மனோரதம் முற்றுப்பெறுவது நான் கனகபுரியைக் கண்டாலல்லது முடியாது. அந்தக் கனகபுரியைக் காணும் வரையி லிப்புவி முற்றிலுஞ் சுற்றியலைவேன்; அங்ஙனஞ் செய்து கனகபுரியைக் கண்டு இவ்வரசகுமாரியை நானடையாவிடில் இந்தஜன்மமெடுத்ததன் பயன் யாது?" என்று யோசித்து வர்த்தமான மென்னும் அந்நகரத்தினின்றும் புறப்பட்டுத் தென்திசைநோக்கிச் சென்றான். சில நாட்களில் அவ்வந்தணச் சிறுவன் விந்தியமலைச்சாரலை யடைந்து ஆங்கொரு வனத்தைக்கண்டு அதிற் பிரவேசித்தான். அவ்வனம் அவனுடைய விருப்பம்போல் மனதிற்கு இன்பந்தரத் தக்கதாயிருந்தது. காற்றினால் அசையும் இளந்தளிர்களையுடைய அவ்வனத்து மரங்கள், சூரிய வெப்பத்தால் தாபமடைந்த அவ்வந்தணனுக்கு வீசும் விசிறிகள் போலிருந்தன; சிங்க முதலிய பெரிய மிருகங்களால் வாதைப்படும்மிருகங்களின் சத்தத்தாலும், அங்குச் சஞ்சரிக்கும் திருடர்களின் பயத்தாலும் அவ்வனம் இரவு பகலாகக் கதறுவது போன்றிருந்தது. மேலும், அது பெரிய பொட்டற் காடுகளின் கிரணங்களால் மிகுதியும் உக்ரமுடையதாயினும் சூரியனுடைய தேஜஸை ஜயிக்க விரும்பியது போற் காணப்பட்டது.

இவ்வாறிருந்த அவ்வனத்தில் சக்திதேவன் நெடுந்தூரஞ் சென்று அலைந்து திரிந்து ஒரு தடாகத்தைக் கண்டான். சீதளமும் நிர்மலமுமான ஜலத்தையுடையதாயும் வெண்டாமரை மலர்களாகிய குடைகளையுடையதாயும், பிரகாசிக்கும் ஹம்ஸங்களாகிய சாமரைகளை யுடையதாயும் விளங்கிற்று அத்தடாகம். தடாகங்கட்கெல்லாம் அரசுபோலவும் காணப்பட்டது அவ்வழகிய

தடாகம். அதில் இறங்கி நீராடித் தெய்வவழிபாடு செய்து கரையேறினான் சக்திதேவன். அத்தடாகத்தின் வடபாரிசத்தில் பலன்கள் மலிந்த விருக்ஷங்களடர்ந்த ஆச்ரமமொன்று விளங்கக்கண்டனன் அவ்வந்தணச் சிறுவன். ஆங்கொரு அரசமரத்தடியில் சில தவசிகளுடன் ஸூர்யதபஸ் என்னும் வயோதிக முனிவரொருவர் வீற்றிருக்கவும் கண்டனன். அம்முனிவரின் நூறு வயதினைக் காட்டும் கணித கருவிபோன்ற உருத்திராக்க மாலையொன்று அவர் கழுத்திலிருந்தது. இம்மகா முனிவரைக் கண்டதும் சக்திதேவன் மகிழ்வுற்று அவரருகே சென்று நமஸ்கரித்து நின்றான். முனிவர் சக்தி தேவனையுபசரித்து அதிதிகளுக்குச் செய்பத்தக்க மரியாதைகளைச் செய்து அவனுக்குக் கனிவர்க்கங்களை யளித்துத் திருப்திசெய்தனர். "மங்களசுவரூப முடைய அந்தணனே! நீ எங்கிருந்து இங்குவந்தாய்? எங்கே போகின்றாய்?" என்று வினவினார் முனிவர். சக்திதேவன், "பகவானே! கனகபுரியைக்காணவேண்டுமென்னும் பிரதிக்ஞையை மேற்கொண்டு வர்த்தமானமென்னும் நகரத்தினின்று புறப்பட்டுவருகின்றேன். முனிவர் பெருமானே! அந்நகரம் இன்னவிடத்திலிருக்கிறதென்பதை நானறியேன். ஸந்நிதானத்திற்கு அதைப்பற்றித் தெரியுமானால்தெரிவிக்கவேண்டுகின்றேன்" என்று பயபக்தியுடன் தெரிவித்துக் கொண்டான். ஸூர்யதபஸ் என்னும் அம்முனிவர், "அப்பனே! நான் இவ்வாச்ரமத்தில் எண்ணூறு வருடங்களாக இருக்கின்றேன். அந்நகரத்தைக் கண்டதுமில்லை; அதுபற்றிக் கேட்டதுமில்லை." என்று கூறினார். சக்திதேவன், இதைக்கேட்டதும் துக்கமடைந்து முனிவரைப்பார்த்து, "அங்ஙனமாயின், நான் இனி இறக்கவேண்டியது தான்" என்றான். முனிவர், தமது ஞானதிருஷ்டியால் விஷயமின்னதென்றறிந்து, "சக்திதேவ! நான் சொல்லுகின்றேன் கேள். அவ்வாறு செய்." என்று கூறிக் "காம்பல்யமென்றொரு தேசமிருக்கின்றது. அத்தேசம் இங்கிருந்து முந்நூறு யோசனை தூரத்திற்கப்பாலுள்ளது. அங்கே உத்தரம் என்றொரு பர்வதமிருக்கின்றது. அதன் அடிவாரத்திலோர் ஆச்ரமமிருக்கின்றது. அவ்வாச்ரமத்தில் தீர்க்கதபஸ் என்னுமொரு முனிவர் இருக்கின்றார். அவர் என் சகோதரர். மகா சிஷ்டர். அவரிடம் நீ செல்வாயாயின், அவர் அக்கனகபுரியிருக்குமிடத்தை யுனக்கு அறிவிக்கக்கூடும்' என்று கூறினார். அது கேட்டுச் சந்தோஷித்து முனிவரை வணங்கி அங்கிருந்து புறப்பட்டு ஓய்வு



ஒழிவில்லாமல் நடந்து அநேக வனங்களைக்கடந்து சென்று காம்பல்ய தேசஞ்சென்று அங்கிருந்த உத்தரமலையைக்கண்டு அதன் மேலேறினான். ஸூர்யதபஸ் கூறியவாறே ஆங்கோர் ஆச்ரமமிருக்கக்கண்டான். அதில் பெரியவரொருவர் தியானத்திலிருக்கப்பார்த்தான். அவரிடஞ்சென்று அவரைப்பணிந்து கைகுவித்து நின்றான். அம்முனிவர் அவனை வரவேற்றுபசரித்தார். சக்திதேவன், "சுவாமி! கனகபுரியென்பது எங்கிருக்கின்றது? அதைக் காணுமாறே நான் வெகு தூரத்தினின்றும் புறப்பட்டு இங்கு வந்திருக்கின்றேன். நான் எவ்விதத்திலும் அந்நகரத்தைக்கண்டுதான் வரவேண்டும். தாங்கள் அதனிருப்பிடத்தைத் தெரிவிக்கவேண்டுகின்றேன். என்னைத் தங்களிடம் சென்று தெரிவிக்கும்படி ஸூர்யதபஸ் என்னும் முனிவர் தெரிவித்தனர்." என்றான். அம்முனிவர், "அப்பனே! எனக்கு இவ்வளவு வயதாகியும் கனகபுரியென்றொரு நகரமிருப்பதாக இப்போது நீ கூறத்தான் கேட்டேன். அந்நகரம் ஏதேனுமொரு தீவின் நடுவே யிருக்கவேண்டும். அவ்விஷயத்தில் ஓர் உபாயம் உனக்குக் கூறுகின்றேன் கேள். சமுத்திர நடுவில் உத்தளம் என்னுமொருதீவிருக்கின்றது. அங்கே வேடர்களுக்கு அரசனொருவனிருக்கின்றான். அவன் பெயர் ஸத்யவிருதன் என்று கூறுவார்கள். அவன் பெரியதனவந்தன். அவன் வேறு தீவுகளுக்கு அடிக்கடிபோய்வருவான். அவன் ஒருகால் அந்நகரத்தைப் பார்த்திருக்கக் கூடுமென்றெண்ணுகின்றேன்; அல்லது அவன் அதுபற்றிக் கேட்டேனுமிருப்பான். ஆகையால் நீ கடலுக்குச் சமீபத்திலிருக்கும் விடங்கபுரஞ்சென்று அங்கு வர்த்தகனொருவன் உதவியைக்கொண்டு வங்கமேறி ஸத்யவிருதனிருக்கும் தீவிற்குச்செல். அங்கு உன் மனோரதம் நிறைவேறும்" என்று கூறினார்.

இவ்வாறு முனிவர் கூறலும், சக்தி தேவன் அவ்வாறு செய்யச் சம்மதித்து அம்முனிவர் திருவடியிற் பணிந்து விடைபெற்றுக்கொண்டு அக்கணமே அங்கிருந்து புறப்பட்டு அநேக நகரங்களைக் கடந்து சென்று கடற்கரைக்குத் திலகம்போல் விளங்காநின்ற விடங்கபுரம் போய்ச் சேர்ந்தான். அங்கே உத்தளம் என்னும் தீவுக்கு வங்கமேறுபவர் யாரென்று விசாரித்துக்கொண்டிருந்து ஸமுத்திரதத்தன் என்பவன் அங்குச் செல்வதையறிந்து அவனையடுத்து அவனுடன் அவனுக்குச்சொந்தமான கப்பலிலேறிச் சென்றான்.

நாவாய் சில யோசனை தூரம் சென்றதும், மின்னற்கொடியையொத்த நாவும் கறுத்ததேகமுமுடைய பர்ஜன்யன் என்னும் இராக்ஷஸ னொருவன் கர்ஜித்துக்கொண்டு பாதலத்தினின்றும் வெளிப்படுவதுபோன்று கிளம்பினான்; அச்சமயம் காற்றும், லேசாகிய வஸ்துக்களை உயரவெடுத்துக்கொண்டும் பாரமுள்ளவைகளைக்கீழே புரட்டிக்கொண்டும் விதியின் ஆரம்பம்போல் பிரசண்டமாகவீசிற்று. அதனால் அலைகள் பெரிது பெரிதாகச் சமுத்திரத்தினின்று கிளம்பின. வங்கமானது கணப்பொழு துயரத்திலும் கணப்பொழுது பள்ளத்திலுமாகச்சென்றது; பொருளுடையவர்கள் உயர்வடைவதையும் தாழ்வடைவதையும் காட்டுவது போலிருந்தது அத்தோற்றம். பின்னர் ஒரு கணப்பொழுதில் கப்பலிலிருந்த வர்த்தகர்கள் கூக்குரலிட்டனர். அச்சத்தத்தின் மிகுதியைப்போலவே கப்பலும் திடீரென்று உயரக்கிளம்பி உடைந்தது. கப்பல் உடைந்தவுடன் அதன் யஜமானன், கடலில் முழுகியெழுந்து ஒரு பலகையைப் பிடித்துக்கொண்டு மெல்லமெல்ல நீந்திச் சென்று வேறொரு தோணியைக்கண்டு அதன்மீ தேறிக்கரை சேர்ந்தான். சக்திதேவனை அச்சமயம் அங்கு வாயை அங்காந்துகொண்டிருந்த ஒரு பெரிய மீன் விழுங்கிவிட்டது. அம்மீன் கடலில் சஞ்சரித்துக் கொண்டிருக்கையில் விதியின் வலிபால் உத்தளத் தீவின் சமீபம் வந்தது; அங்கு மீன்பிடித்துக்கொண்டிருந்த வேடராஜனாகிய ஸத்யவிருதனது ஊழியர்களின் வலையிற் சிக்கியது அம்மீன். அவ்வளவு பெரியமீனைக் கண்டவுடன் அவ்வலைஞர்கள் வியப்புற்று அதனைத் தங்கள் யஜமானனிடங்கொண்டு போயினர். ஸத்யவிருதன் அம்மீனைப் பார்த்தவுடன் வியப்பும் மகிழ்ச்சியு மடைந்து அம்மீனைப் பிளக்குமாறு உத்தரவு செய்தான். அவ்வாறே மீன் பிளக்கப்பட்டது. அதிலிருந்து சக்திதேவன் கர்ப்பவாஸஞ் செய்தவன்போல் உயிருடன் வெளிப்பட்டான். அவன் புறப்படும்போது "மங்களமுண்டாகுக" என்று கூறிக்கொண்டே புறப்பட்டனன். அவனைப்பார்த்த ஸத்பவிருதனும் மற்றவர்களும் பெருத்ததோர் ஆச்சரியமடைந்தனர். ஸத்யவிருதன், அவனை நோக்கி, "பிராம்மணசிரேஷ்டரே! தாங்கள்யார்? எங்கிருந்து வந்தீர்கள்? இம்மீனின் வயிற்றிலிருந்ததன் காரணமென்ன? உமது வரலாறு மிகவும் ஆச்சரியமானதாகவிருக்கும்போலிருக்கின்றது" என்றுகேட்டான். சக்திதேவன் அவ்வேடராஜனைப் பார்த்து, "நான் வேதியன். சக்திதேவன் என்பது என் பெயர். வர்த்தமானபுரியி



னின்றுபுறப்பட்டுக் கனகபுரிக்குப்போகவந்தவன். அந்நகர மிருக்குமிடந் தெரியாமல் வெகுகாலமாக இப்புவியைச் சுற்றியலைந்து திரிந்துவருகையில் தீர்க்கதபஸ் என்னும் முனிவரைக்கண்டேன். அவர் அந்நகர் தீவுகளி லிருக்கவேண்டுமென்று கூறி அதுபற்றித் தெரிந்துகொள்ள உத்தளத் தீவிலிருக்கும் வேடராஜனாகிய ஸத்யவிருதனிடம் போமென்று கட்டளையிட்டார். அந்த உத்தளத் தீவிற்குப் புறப்பட்டு வருகையில் நடுக்கடலில் கப்பல் காற்றினால் அலைப்புண்டு கடலில் மூழ்கியது. அப்பொழுது அவ்விடத்திலிருந்த இந்தப் பெரிய மீன் என்னை விழுங்கியது. அஃது என்னை இத்தீவுக்குக் கொண்டுவர நான் இவண் வர நேர்ந்தது" என்று கூறினான். ஸத்யவ்ருதன், "வேதியரே! நான்தான் அந்த ஸத்பவிருதன். இதுதான் அந்த உத்தளத் தீவு. நான் என்னுடைய இந்த வயதிற்குள் அநேக தீவுகளைப் பார்த்திருக்கின்றேன். நீர் சொல்லும் கனகபுரியை நான் கண்டதுமில்லை; அதுபற்றிக் கேட்டதுமில்லை" என்று கூறினன். இதைக் கேட்டவுடன், சக்திதேவன் முகம் வாடியது; மனதில் வருத்தமும் கவலையும் வந்து குடிபுகுந்தன. அதனால் அவன் சற்றுநேரம் ஒன்றும் பேசத் தோன்றாமல் நின்றான். அவன் வருத்தப்படுவதை யறிந்த ஸத்யவிருதன், "வேதியரே! நீர் வருத்தப்படவேண்டாம். இன்றிரவு இங்கேயே வாசஞ்செய்யும். உமதிஷ்டம் நிறைவேறக் காலையில் ஒருபாயங் கூறுகின்றேன்" என்று சமாதானங் கூறி அவனை அங்கிருந்த பிராமணர்களது மடத்திற்குப் போஜனத்திற் கனுப்பினன். சக்திதேவன் அங்கே நல்ல போஜனமுண்டு அங்கு வசிக்கும் விஷ்ணுதத்தன் என்பவனோடு அநேக கதைகளைப் பேசிக்கொண்டிருந்தான்.

அப்பொழுது அவனிடம் தன் தேசம், வம்சம், தன் வரலாறு யாவற்றையும் கூறினன் சக்திதேவன். அதைக் கேட்டவுடன் விஷ்ணுதத்தன் அந்தச்சக்திதேவனைத் தழுவி மிகவும் மகிழ்ந்து, "சக்திதேவ! பரம சந்தோஷம்! நீ யெனக்கு அம்மான்பிள்ளையாக வேண்டும். நாமிருவரும் ஒரே தேசத்திற் பிறந்தவர்கள். நான் முன்பே அத்தேசத்திலிருந்து இங்குவந்தவன். நீ இங்கேயே யிரு. ஏனைய தீவுகளிலிருந்துவரும் வர்த்தகர்களின் மூலமாகக் கனகபுரி யிருக்குமிடந் தெரிந்துகொள்ளலாம்" என்று கூறி அவனை இதமொழிகளால்சமாதானப்படுத்தி உபசரித்துவந்தான்.

சக்தி தேவனும் வழிநடந்து வந்த சிரமம் நீங்கிச் சந்தோஷமடைந்தான். தேசாந்தரத்தில் பந்துவை யடைந்தது நடுப்பொட்டலில் அமுதங் கிடைத்ததற்குச் சமானமாகுமன்றோ? சக்திதேவன் இனிநமது கோரிக்கை நிறைவேறிவிட்டதென்றே யெண்ணினன். ஒரு காரியம் நிறைவேறுவதைக் குறிப்பிடும் நன்மையானது பிரயத்தனத்தின் இடையிலேயே தெரியுமல்லவா? சக்திதேவன் தன் காரியம் நிறைவேறுமென்னும் நம்பிக்கையை யடைந்தும் கவலையை விட்டானில்லை. அன்றிரவு முழுதும் நித்திரை செய்யாமலே பலவாறு யோசித்துக் கொண்டிருந்தான். அதனையறிந்த விஷ்ணுதத்தன் அவனிடம் விநோதமாகச் சம்பாஷித்து, ஒரு கதையைக் கூறத் தொடங்கினன்.

யமுனாநதிக் கருகேயிருந்த பெரிய அக்ரகாரத்தில் கோவிந்தஸ்வாமி யென்னுமொரு அந்தணனிருந்தான். அவ்வேதியன்நல்ல குணவான். அவனுக்கு அசோகதத்தன், விஜயதத்தன் என்னும் இரண்டு குமாரர்களிருந்தனர். அவர்கள் அங்கு வசித்துக்கொண்டிருக்கையில் பெரிய பஞ்சமுண்டாயிற்று. அப்பொழுதுகோவிந்தசாமி, தன் மனைவியை நோக்கி, இத்தேசத்தில் பஞ்சம்பாவி ஜனங்களை வாட்டுகிறது. நண்பர்களும் உறவினர்களும் வருந்துவதைப் பார்க்க மனம் பொறுக்கவில்லை. எவனுக்கு எவ்வளவென்று கொடுப்பது. ஆகையால் நம்மிடம் உள்ள பொருள்களை நண்பர்கட்கும் உறவினர்கட்கும் கொடுத்துவிட்டு இத்தேசத்திலிருந்து வேறிடஞ் செல்வோம். குடும்பத்துடன் வாரணாசிசென்று வசிப்பதுதான் நமக்கு யோக்யமானது" என்றனன். மனைவியும் கணவன் கருத்திற் கிசைந்தனள். அப்பால் அவ்வந்தணன் தன்னிடமுள்ள பொருள்களைத் தன் உத்தேசப்படி உறவினர்நண்பர் இவர்களுக்குப் பகிர்ந்துகொடுத்துத் தன் மனைவி மக்களுடன் அத்தேயத்தை விட்டுச் சென்றான்.

உத்தம புருஷர்கள் தங்களைச்சேர்ந்தவர்கட்கு ஏற்படும் ஆபத்தைப் பார்த்துச் சகிப்பார்களா? ஒருபோதும் சகிக்கமாட்டார்களன்றோ? ஆகவே அவர்கள் தங்களுடைய பொருள்களைப் பொருட் படுத்தாது அவற்றைப் பந்துக்களுக்குப் பகிர்ந்து கொடுத்து அவ்வூரைவிட்டு வெளியே சென்றனர்.

நிற்க; அவர்கள் போய்க்கொண்டிருக்கையில் வழியில் ஒரு ஞானியைப் பார்த்தனர். அவர் மகாவிரத சீலராகக் காணப்பட்டார்; தேக முழுதும் திருநீறு பூசிக்கொண்டிருந்தமையின் ஒரே வெண்மையாய்க் காணப்பட்டார். கையிற் கபாலமொன்று தாங்கிக் கொண்டிருந்தார். அந்த மகாத்மா பரமசிவனே மூர்த்தீகரித்துப் பிரத்தியட்சமாயினரென்றெண்ணுமாறு விளங்கினர். இவர்கள் அவர் சமீபஞ்சென்று வந்தனம்புரிந்து, புத்திரர்களிடம் விசுவாசத்தால் அவர்களுடைய நன்மை தீமைகளைப் பற்றிக்கேட்டனர். அந்த ஞானி கோவிந்தஸ்வாமியைப் பார்த்து, "உமது புத்திரர்களுக்கு மங்களமுண்டாகும். ஆயினும் வேதியரே! இளயவனாகிய விஜயதத்தன் உம்மை விட்டுப்பிரிவான். பிறகு இந்த அசோக தத்தனுடைய மகிமையால் விஜயதத்தனுடன் உமக்குச் சேர்க்கை ஏற்படப்போகிறது" என்று கூறினர். இவ்வாறு ஞானியார்கூறலும், கோவிந்த ஸ்வாமி சுகம், துக்கம், ஆச்சரியம் இவைகளை ஏககாலத்திலடைந்து, அவரை வணங்கி விடைபெற்றுக்கொண்டு சென்றார்.

அப்பால் சிலநாளையில் வாரணாசி க்ஷேத்திரமடைந்து, அங்கே அந்நகரத்திற்குப் புறம்பேயுள்ள சண்டிகையின் ஆலயஞ்சென்று அத்தேவதையைப் பூஜிப்பதில் ஒரு பகலைக் கழித்தார்கள். அன்றிரவும் அங்கேயே ஒருமரத்தடியில் வேறு சில யாத்திரிகர்களுடன் படுத்து நித்திரை செய்தனர். அப்பொழுது நடுராத்திரியில் கோவிந்த ஸ்வாமியினுடைய இளயகுமாரன் விஜயதத்தன் அகாரணமாக விழித்துக்கொண்டான். விழித்த சற்றுநேரத்திற்கெல்லாம் அவனுக்குப் பொறுக்கமுடியாத சீதஜ்வரமுண்டாயிற்று. இனி உண்டாகப்போகிற பந்து வியோகத்திற்குக் காரணமான அந்த ஜ்வரத்தினால் மயிர்க்குச் செறியும்படியான நடுக்கம் தேகத்திலுண்டாயிற்று. விஜயதத்தன் உடனே தந்தையையெழுப்பி "அப்பா! இப்போது எனக்கு சீதஜ்வரங் கண்டிருக்கிறது. மிகுதியும் துன்பப்படுத்துகிறது. ஆகையினால் சீக்கிரமாகச் சில சமித்துக்களைச் சேகரித்துவந்து இங்கே தீ மூட்டி யெரித்து எனக்கு உஷ்ணமுண்டாக்குங்கள்; இன்றேல் நான்பொறுக்கமாட்டேன். இராப்போது போவது கஷ்டமாகும்" என்று கூறினன். கோவிந்தஸ்வாமி இதைக் கேட்டதும் வருத்தமுற்று, "விஜயதத்தா! இங்கே இச்சமயம் நெருப்பெங்கிருந்து கிடைக்கும்?, என, விஜயதத்தன், "பிதாவே! அதோ பாருங்கள் அங்கே நெருப்பு கொழுந்து விட்டெரிகிறது. அங்கேன் என்னைக் கொண்டுபோய் என்தேகம் உஷ்ணமாகும்படி செய்யக்கூடாது. சீக்கிரமாக என்

கையைப்பிடித்து அழைத்துக்கொண்டு போய் அங்கே விடுங்கள். நான் அங்குச்சற்றுநேரமிருந்து பார்க்கின்றேன்" என்றான். கோவிந்தஸாமி, "விஜயதத்தா! அந்த இடம் மயானம். அங்கெரிவது சிதை. நீயோ சிறுவன். பிசாசு முதலியவற்றால் பயம்நேரக்கூடிய அங்கு உன்னுடன் எவ்வாறு செல்வது?" என்றார். இவ்வாறு கூறியதும் விஜயதத்தன் மந்தஹாஸஞ் செய்து, கர்வத்துடன் கூறுகிறான்.

"அற்பப் பிசாசுகளால் என்னசெய்யமுடியும்? என்பலம் அவற்றிற்கு ஈடுகொடுக்க முடியாததா? சந்தேகமின்றி என்னையழைத்துக்கொண்டு போங்கள்" என்றான். கோவிந்தஸ்வாமி உடனே விஜயதத்தனை அங்கு அழைத்துச்சென்றார். விஜயதத்தன் எரியும் சிதையினிடம் அவனுடன் போயுட்கார்ந்தான். ஜ்வலிக்கும் அக்னி ஜ்வாலையானது விபாகுலமென்னும் கூந்தலுடையதுபோலவும் மானிட மாம்ஸத்தைக் கிரகிக்கும் ராக்ஷஸ தேவதை போலவும் விளங்கிற்று. விஜயதத்தன் அங்கே சற்றுநேரமிருந்து பிதாவை நோக்கி "சிதைக்குளுருண்டையாகக்காணப்படுகிறதேதோவொன்று, அஃதென்னவென்று தெரிகிலேன்" என, கோவிந்தஸ்வாமி, 'அது மானிடனுடைய மண்டையோடு, என்று கூறினர். விஜயதத்தன் உடனே அச்சிதையினின்று ஒரு குச்சியையெடுத்து அந்த மண்டையோட்டை அடித்துடைத்தான். அதனின்று வஸை பெருகி விஜயதத்தனுடைய வாயில் தெரித்தது. மயானத்திலுள்ள அக்னி தேவனாலளிக்கப்பட்ட ராக்ஷஸ ஸித்திபோற் காணப்பட்டது அது. அவன் அந்த வஸையைக் காய்ச்சல்வெறியில் தெரியாமற் பானஞ் செய்துவிட்டான். பானஞ்செய்த மாத்திரத்தில் விஜயதத்தன், உயரநிமிர்ந்து நிற்கும் கேசத்துடனும், தெற்றிப்பற்களுடனும் கையில் ஒரு கத்தியையுடைய ராக்ஷஸனாகி நின்றான். உடனே கபாலத்தை யிழுத்துடைத்து அதிலுள்ள வஸையை மோர்ந்து பருகினான். பிறகு அக்கபாலத்தை யெறிந்துவிட்டுத் தன் பிதாவாகிய கோவிந்த ஸ்வாமியைக் கத்தியால் வெட்டப்போனான். அச்சமயம், "கபாலத்தையுடைத்த தேவ! நீ உன் பிதாவைவெட்டாதே. இங்கேவா" என்றோர் வாக்குண்டாயிற்று. இவ்வாக்குச் செவியிற்பட்டதும் விஜயதத்தன், கபாலஸ்போடகன் என்னும் பெயர்பெற்று அக்கணமே தந்தையைவிட்டுமறைந்தான்.

இந்த ஆச்சரியத்தை அதிபயத்துடன் பார்த்துக்கொண்டிருந்த கோவிந்தஸ்வாமி, "அப்பா! குழந்தாய்! விஜயதத்தா! நீ



எங்கே சென்றாய்? உன்னைவிட்டு நானெவ்வாறிருக்கச் சகிப்பேன். குணசாலியே! என்னை இவ்வேளையில் இங்கே விட்டுப்பிரிய உனக்கு மனமெப்படித் துணிந்தது?" என்று பலவாறாகக் கூறியழுதுகொண்டு வெகு நேரமங்கிருந்து அப்பால் விடியுந்தருணத்திற் சண்டிகையின் ஆலயம் வந்துசேர்ந்து நடந்ததைத் தன் மனைவிக்கும் மூத்த பிள்ளை அசோகதத்தனுக்கும் தெரிவித்தனர். அங்கு வந்து தங்கியிருந்த வேறு யாத்திரிகர்களும் இந்த ஆச்சரிய சம்பவத்தைக்கேட்டுக் கோவிந்தஸ்வாமியினும் பதின்மடங்கதிமான துக்கத்தை யடைந்தனர். அச்சமயம் தேவியைப் பூஜிப்பதற்குச் சமுத்திரதத்தன் என்னும் ஒரு வர்த்தகன் அங்கு வந்தான். அவன் கோவிந்தஸ்வாமியின் துக்கத்தைக்கண்டு மனவிரக்கங்கொண்டு அவருக்குத்தக்க சமாதானங்கூறித் தன்வீட்டிற்கழைத்துச்சென்று அவருக்குவேண்டிய உபசாரங்கள் செய்தான். மகான்களுக்கு ஆபத்தையடைந்தவர்களைக் கண்டால் தயையுண்டாவது இயற்கைக்குணமன்றோ?

கோவிந்தஸ்வாமியும் ஞானியார் திருவாய் மலர்ந்தருளியபடி நாம் நமது புத்திரனை மீண்டும் அடையக்கூடும் என்னும் நம்பிக்கையில் நிச்சய முடையவராய்க் கவலையைவிட்டுத் தைரியமடைந்து தமது மனைவிக்கும் தைரியங்கூறிச் சமாதானப்படுத்தினர். ஸமுத்திரதத்தன் என்னும் அவ்வர்த்தகன் ஏராளமான பொருளுடையவனாதலால் அவன் வீட்டிலேயே அவன் வேண்டுகோளுக்கிணங்கி வசித்து வந்தனர். அங்கேயே அசோகதத்தன் கல்வி பயின்றுவந்தான். அப்பால் யௌவனபருவ மடைந்ததும் கைச்சண்டைசெய்வதில் பழகிவந்தான் அவ்வசோகதத்தன். சில நாளையில் அவன் புவியில் எவனும் வெல்லுதற் கரிய வல்லமையையடைந்தனன்.

இவ்வாறிருக்கையில் ஆங்கோர் உற்சவ நடந்தது. அச்சமயம் மல்லர்கள் அங்கு வந்துகூடினர். அவர்களுள் தென்றிசையினின்று வந்தவன் ஒருவனிருந்தான். அவன் மகா சமர்த்தன். காசி தேசத்துமல்லர்களனைவரும் அவன் முன் நிற்கமாட்டாமல் அவமானமடைந்தனர். அப்பொழுது அத்தேசத்து அரசனாகிய பிரதாபமகுடன் என்பவனுக்கு அசோகதத்தனைப்பற்றி வர்த்தகன் தெரியப்படுத்தினான். அரசன் உடனே மகா வல்லமை சாலியாகிய அசோகதத்தனைத் தன் அரண்மனைக்கழைப்பித்து அம்மல்

லனுடன் சண்டைக்கனுப்பினன். இருவரும் அவ்வாறே போர் புரியத்தொடங்கினர். சற்றுநேரத்திற் கெல்லாம் அசோகதத்தன் அந்த மல்லனைக்கீழே வீழ்த்திக் கைகொட்டினான். எல்லோரும் நன்று! நன்று!! என்று அவனைக் கொண்டாடினார். மகாமல்லன் விழுந்ததாலுண்டான சத்தமானது, அசோகதத்தன் ஜயித்தானென்னும் சந்தோஷத்தினால் யுத்த பூமியும் நன்று என்று தெரிவித்தது போலிருந்தது. அரசன் அதனால் அசோகதத்தன் மீது பரமசந்தோஷமடைந்து அவனுக்கு வேண்டிய இரத்தினங்களையும் ஆபரணங்களையுமளித்து அவனைத் தன் அரண்மனையிலேயே வைத்துக்கொண்டான். அசோகதத்தனும் அரசனுக்குப் பிரியமாக நடந்துவந்து நாளடைவில் வேண்டிய திரவியத்தையடைந்தான்.

இவ்வாறிருக்கையில் ஒருசமயம் பிரதாபமகுடன் அந்தக் காசிநகரத்திற்குப் புறம்பேயுள்ள சங்கரனைப் பூஜிப்பதற்காகக் கிருஷ்ணபக்ஷம் சதுர்த்தசி யன்று சென்றான். இரவில் பூஜை செய்துவிட்டு அங்கிருந்து திரும்பி வழியிலிருந்த மாயானத்தைக் கடந்து வந்துகொண்டிருந்தான். அப்பொழுது அந்த மயானத்தில்· “அரசனே! என்னிடம் கொண்டதுவேஷத்தினால், ‘இவன் வதைக்குரியவன்’ என்றுரைத்து வீணே என்னைக் கழுவிலேற்றிவிட்டான் தண்டாதிபதி. பாவியாகிய என் பிராணன் இன்னும் வெளியேறவில்லை. தேவ! எனக்குத்தாகமிகுதியா யிருக்கின்றது இச்சமயம். ஜலம் வேண்டுங் கொஞ்சம்” என்னும் கூக்குரல் அங்குக் கேட்கப்பட்டது.

இவ்வார்த்தைகளைக் கேட்ட பிரதாபமகுடன் வியப்படைந்து அருகே வந்த அசோகதத்தனை நோக்கி, “நீ அவனுக்கு ஜலமனுப்பிக்கொடு” என்றான். அசோகதத்தன் “இராத்திரியில் இவ்வாறு பேசுபவன் யார்? நானே ஜலத்துடன் சென்று பார்த்து வருகிறேன்” என்று தெரிவித்துத்தானே ஒரு பாத்திரத்தில் ஜலமெடுத்துக்கொண்டு சென்றான். அரசன் அதைப்பற்றி யோசித்துக்கொண்டே அரண்மனை சென்றான்.

அசோககத்தன் மயானத்தை யடுத்ததும் சுற்றிலும் பார்த்தான். எங்கும் இருள் சூழ்ந்து பார்க்கப் பயங்கரமாகவிருந்தது. நரிகள் அங்கங்கு மாமிசத்துண்டங்களை இறைத்திருந்தன. அவை சந்தியாகாலபலியை பொத்துக்காணப்பட்டன. ஆங்காங்கு சிதை



கள் பிரகாசமான தீபங்கள்போல எறியக்கண்டான் அசோகதத்தன். வேதாளங்களின் இறைச்சல் எங்கும் கேட்கப்பட்டது. அம்மயானம் கிருஷ்ணபக்ஷத்து இரவிற்கு வாசகிருகம்போலத் தோன்றியது. இவ்வாறிருக்கும் மயானத்திற்குள் தைரியமாய் நுழைந்து “அரசனிடம் தாகத்திற்கு நீர் கேட்டவன் யாவன்” என்று உரத்துக்கூவினன். உடனே “நான்தான்கேட்டவன்” என்னும்சத்தமுண்டாயது. அந்தத் தொனியை யநுசரித்துக் கொஞ்சதூரஞ் சென்றவுடன் ஒரு சிதை மண்டி யெரியக்கண்டான் அசோகதத்தன்; அதனருகே கழுவிலேற்றப்பட்டிருக்கும் ஆடவனையுங் கண்டனன் மகா பராக்கிரமசாலியாகிய அசோகதத்தன். சற்றுக் கீழ்புறத்தில் இதற்குமுன்பு பார்க்கப்படாத நல்ல ரூபவதியாகிய ஒரு ஸ்திரீ அழுதுகொண்டிருக்கப் பார்த்தான் அசோகதத்தன். அம்மாது சிதை யடுக்குவித்துத் தீ மூட்டி அதனருகே நின்றுகொண்டிருந்தாள். கிருஷ்ண பக்ஷத்தில் குறைவினையடைந்த சந்திரன் அஸ்தமனமானதும் தனது கிரணங்களோடு பிரகாசிக்கும் சமயத்தில் இரவு வந்தததற் கொப்பவிளங்கினள் அம்மாது. அவளைக்கண்டதும் அவளருகே சென்று “அம்மா! நீ யார் ஏன் இவ்வாறு அழுதுகொண்டிருக்கின்றாய்?” என்று கேட்டான். அம்மாது, “ஐயா! நான் இங்கே கழுவிலேற்றப்பட்டிருக்கும்இப்புருஷனுடைய மனைவி. இவ்வருத்தத்தினால் இலக்ஷணத்தை யிழந்தவள். இவரோடு சிதையேறுவதற்காக நிச்சயித்து இங்கு நின்றுகொண்டிருக்கின்றேன். இவருடைய பிராணன் வெளியேறுந் தருணத்தை யெதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றேன். இவர் கழுவிலேற்றப்பட்டு மூன்று நாளாயின. இன்னும் பிராணன் வெளிப்படவில்லை. இவர் அடிக்கடி தாகத்திற்காக நீர் கேட்கிறார். நானிதோ கோண்டுவெந் திருக்கின்றேன் உயரமான கழுவிலிருக்கும் இவருக்கு நானெவ்வாறு இந்நீரைக் கொடுப்பேன்” என்று கூறினாள். இவ்வாறு அம்மாது கூறக்கேட்டதும் அசோகதத்தன், “மாதே! இதோ நானும் ஜலங்கொண்டு வந்திருக்கின்றேன். நான் குனிந்துகொள்ளுகின்றேன். என்முதுகின்மீதேறி நீ இந்த ஜலத்தைக்கொடு. ஆபத்து நேர்ந்த இச்சமயம்மாதர்கள் பரபுருஷரைத்தொடுவது குற்றமாகாது” என்றான். உடனே அம்மாது அவ்வாறு செய்ய விசைந்தனள். அசோகதத்தன் அந்தக் கழுமரத்தி னடியிற்குனிந்து நின்றான். அம்மாது

தன்கையில் ஜலத்தை யெடுத்துக்கொண்டு அசோகதத்தன் முதுகின்மீது காலைவைத்து ஏறினாள். அப்பொழுது கணநேரத்திற்கெல்லாம் புவியிலும் தன்முதுகிலும் இரத்தத் துளிகள் விழக் கண்டான் அசோகதத்தன். இஃதென்னவென்று அதிசயித்துத் தலையை நிமிர்ந்து பார்த்தான். அந்த மாது கழுமரத்திலிருக்கும் ஆடவனைக் கத்தியால் நறுக்கி அம்மாம்சங்களைப் புசிக்கக்கண்டு "ஓகோ! இவள் துஷ்டை. மோசம்போனேன்" மென்றெண்ணிச் சினந்து சரேலென்று நகர்ந்தெழுந்தான். அவள் காலிலணிந்துகொண்டிருந்த சிலம்பு கலகலவென்றுகலித்தது அச்சமயம். அதுகண்டதும் அவள் காலைப்பிடித்திழுத்து அச்சிலம்பிலொன்றைக் கழற்றிக்கொண்டான். அம்மாது அக்கணமே ஆகாயத்திற் கிளம்பிச் சென்று மறைந்துவிட்டாள். துஷ்டர்களின் கூட்டுறவுபோல முதலில் தனக்கு மனோக்ஞமாயும் அப்பால் தன்னைத் தாழ்த்தியும் கடைசியில் விகாரமும் பயங்கரமுமானஉருவமுமடைந்து மறைந்தவளாகிய அம்மாதைப்பற்றியோசித்தவாறிருந்தான். தன்கையிலகப்பட்ட திவ்யமான சிலம்பினைப் பார்த்துப்பார்த்து ஆச்சரியமடைந்தான் அசோகதத்தன்.

அப்பால் சிறிது நேரத்திற்கெல்லாம் அங்கிருந்து புறப்பட்டுத் தன்வீடுபோய்ச் சேர்ந்து மறுநாள் அரண்மனை சென்று அரசனை வணங்கிநின்றான். அரசன், "அசோகதத்த! கழுவிலேற்றப்பட்டு வருந்தியவனுக்கு ஜலங்கொடுத்தாயா?" என்று கேட்டான். அசோகதத்தன் கொடுத்தேன் என்று கூறித் தனக்குக் கிடைத்த சிலம்பை அரசனிடம் வைத்தான். அரசன் "இச்சிலம்பேது?" என்று கேட்க, அசோகதத்தன் மயானத்தில் நடந்ததைத் தெரிவித்தான். அரசன் இந்த ஆச்சரியமான செய்திகேட்டு மகிழ்ச்சியடைந்து மற்றெவர்க்குமில்லாதபலமும் வல்லமையு மிவனுக்கிருக்கின்றன; இவன் நல்ல சமர்த்தன்; அதிதீரன் என்றெண்ணி அச்சிலம்பைத் தன் மனைவியை யழைத்து அவளிடம் கொடுத்துச் சிலம்பு கிடைத்த வரலாறையும் கூறினான். அரசி அந்த அழகிய சிலம்பைப் பார்த்து ஆச்சரியமடைந்து அசோகதத்தனைப் புகழ்ந்து மகிழ்ச்சி யடைந்திருந்தாள்.

அப்பால் அரசனும் அவன் மனைவியும் தனித்து அந்தப்புரத்திலிருக்குந் தருணத்தில் அரசன் மனைவியைப்பார்த்து, "தேவி! ஜாதியைப்போல வித்தையிலும், ஸத்தியத்தைப்போல ரூபத்தி



லும் நம் அசோகதத்தன் பெரியோர்களுக்கும் பெரியவனாகின்றான். இவன் மங்களகுணமுடைய நமது பெண் மதனலேகைக்கு மணவாளனானால் மிகுந்த நன்மையுண்டாம். வரனிடத்தில் இவ்வாறான குணங்களிருக்கின்றனவா வென்று கவனிக்கவேண்டும். ஐசுவரியம் நாசமடையக் கூடியது. ஆகையால் மகா பராக்கிரமசாலியாகிய இந்த அசோகதத்தனுக்குப் பெண்ணைக்கொடுக்கத் தீர்மானித்திருக்கின்றேன்" என்றான். அவன் மனைவி, "அவ்வாறு செய்வது உசிதந்தான். அசோகதத்தன் மதனலேகைக்குத் தகுந்தவனேயாவன். அந்த வாலிபனை நமது மதனலேகை உத்யானவனத்தில் ஒருநாள் சந்தித்தனளாம். அதுமுதல் அவன்மீது காதல்கொண்டு அதேசிந்தையாயிருக்கின்றாள். ஒருவரையும் அவள் பார்ப்பது கிடையாது. ஒன்றையும் விரும்புவதில்லை. பைத்தியம் பிடித்தவள்போ லிருக்கிறாள். மதனலேகை, அசோகதத்தனை உத்யானவனத்தில் சந்தித்தனள் என்பதை அவள் தோழியின் மூலமாக நானறிந்தேன். தவிர, நேற்றிரவு ஒருகனவுங்கண்டேன். அதுவும் இதற்கிசைந்திருக்கின்றது. கனவில் ஒரு தேவஸ்திரீ என்முன்தோன்றி, 'நீஉன்பெண்ணை அசோகதத்தனைத்தவிர வேறெவர்க்கும் மணஞ்செய்து கொடுக்காதே. இவள் அசோகதத்தனுக்கு ஜன்மாந்தரத்தில் மனைவியாக ஏற்பட்டவள்—, என்று தெரிவித்து மறைந்தாள். பிறகு, நான் விழித்துக்கொண்டு தெய்வத்தைத் தியானித்துக்கொண்டிருந்தேன். விடிந்ததும் மதனலேகையினிடஞ் சென்று செய்திதெரிவித்து அவளைச் சமாதானப்படுத்திவிட்டு வந்தேன். தாங்களும் இப்போது இவ்வாறு தெரிவிக்கின்றீர்கள். எல்லாம் ஒத்திருக்கின்றன. ஆகையால் மரத்தொடு கொடி சேர்வதுபோல அசோக தத்தனோடு மதனலேகை சேரட்டும்" என்றாள்.

இவ்வாறு எல்லோருடைய அபிப்பிராயமும் ஒத்திருப்பது கண்ட அரசன் அதிசயித்து உடனே அசோக தத்தனை வரவழைத்து அவன் சம்மதம் பெற்றான். அப்பால் ஒருநாள் சுபமுகூர்த்தம்பார்த்து அதில் மதனலேகையை அசோகதத்தனுக்கு மணஞ்செய்து கொடுத்து மஹோற்சவங்கொண்டாடினான். அந்த இராஜபுத்திரிக்கும் பிராமண குமாரனுக்கும் ஏற்பட்ட சேர்க்கையானது, லக்ஷ்மிதேவிக்கும் விநயத்திற்கும் ஏற்பட்ட சேர்க்கைக்கு ஒப்பாயிற்று.

இந்த விவாகமகோற்சவம் நடந்த பிறகு ஒருநாள் பட்டமகிஷி அரசனைப்பார்த்து, "நாதா! நமக்கு அபூர்வமாகக்கிடைத்த இந்த ஒரு இரத்தினச்சிலம்பிருந்தும் பிரயோசனமில்லாமலிருக்கின்றது. இதேமாதரியான இன்னொரு சிலம்பு செய்விக்கவேண்டும்" என்றாள். பிரதாபமகுடன் அன்று அந்நகரத்திலுள்ள அநேக விசுவகர்மாக்களை வரவழைத்துத் தன்னிடத்துள்ள சிலம்பைக் காட்டி அதற்கு ஜதையாகவேறொரு சிலம்பு செய்து கொடுக்கவேண்டுமென்று கூறினான். வந்தவர்களெல்லோரும் "இம்மாதிரியான சிலம்பை நாங்கள் செய்தறியோம். இது தேவலோகத்ததாகக் காணப்படுகின்றது. புவியில் யாராலும் செய்யமுடியாதது. இது தங்களுக்கு எங்கிருந்து கிடைத்ததோ அந்த விடத்தில் விசாரிக்கவேண்டும்" என்று கூறிச் சென்றனர்.

இதைக்கேட்டதும் அரசன் மனதில் துக்கமுண்டாயிற்று. அவன் மனைவியுங் கேட்டுத் துக்கமடைந்தாள். இச்செய்தி அசோகனுககுத்தெரிந்தது. அவன் உடனே அரசனிடம் வந்து "நான் இதைச்சேர்ந்த மற்றொருசிலம்பைக்கொண்டுவருகின்றேன் கவலைப்படவேண்டாம்" என்று கூறினன். அரசன் அதிற் சந்தேகங்கொண்டு அதிர்பதியாயிருந்தான். அசோக தத்தன் மறுநாள் அந்த ஒற்றைச்சிலம்பை அரசனிடமிருந்துவாங்கிக்கொண்டு இரவில் மயானத்திற் பிரவேசித்துஅன்று சிலம்பையடைந்த இடத்திற்குச்சென்று பார்த்தான். அங்கு அன்றுகண்ட அம்மாதைக் காணவில்லை. இங்கு மங்குஞ்சென்று தேடினான்; அவள் எங்குங் காணப்படவில்லை. பின்னர், நான் அவளைக்கண்டுபிடிக்க வேண்டுமாயின், நரமாமிசம் விற்பவனைப்போலப் பாசாங்கு செய்யவேண்டும்; அவளுக்கு நரமாமிசத்தில் விருப்பமதிகம். ஆகையால் இங்கிருக்கும் சவத்தை மூட்டத்தினின்று எடுத்து என்முதுகிற் போட்டுக்கொண்டு திரிகின்றேன். இது தான் யுக்தி என்று யோசனை செய்துகொண்டு ஒரு சவத்தை யவ்வாறே யெடுத்து முதுகிற் சுமந்து கொண்டே இங்குமங்குந் திரிந்து "இதோ நரமாமிசம்; விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம்." என்று சத்தமிட்டான். அப்பொழுது கொஞ்சதூரத்திலிருந்து ஒரு ஸ்திரீ "மகாபராக்கிரமசாலியே! அந்த மாமிசத்தை யெடுத்துக்கொண்டு என்னுடன் வா; நான் வாங்கிக்கொள்ளுகின்றேன்" என்று அவனைக் கூவியழைத்தாள். அசோகதத்தன் உடனே அவளை யநுசரித்து



நடந்தான். சிறிது தூரஞ் சென்றவுடன் ஒருமரத்தடியில் தேவரூபத்துடன் ஒருமாது நின்றுகொண்டிருக்கக்கண்டான். உடனே அதிசயமுற்றுப் பின்னும் உற்றுப்பார்த்தான். அங்கு அவளைச் சூழ இன்னுஞ் சில ஸ்திரீகள் நின்றுகொண்டிருக்கக் கண்டான் அசோகதத்தன். பொட்டலில்முளைத்த தாமரைமலர்போல் அங்கு நின்றிருந்த அம்மாதினிடம் அசோகதத்தன் சென்று நரமாமிசத்தைக்காட்டி "விலைக்குக் கொண்டுவந் திருக்கின்றேன். இம்மாமிசத்தைப் பெற்றுக்கொள்ளலாம்" என்று கூறினான். அம்மாது "உமக்கு இம்மாமிசத்திற்குப் பதிலாக என்னபொருள் வேண்டும்" என்று கேட்டாள். அசோகதத்தன், முதுகில் சவத்தைச் சுமந்தவண்ணமேயிருந்து தன்கையிலிருந்த சிலம்பைக் காட்டி, இந்தச் சிலம்பிற்குச்சமமான மற்றொருசிலம்பை யார் கொடுக்கின்றார்களோ அவர்களுக்கு இந்த இறைச்சியை நான் கொடுப்பேன்" என்றான். அம்மாது, "இதற்குச்சமமான மற்றொரு சிலம்பென்னிடமிருக்கின்றது. இச்சிலம்பு மென்னுடையதேயாம். இதை நீர் அன்றிரவு அபகரித்துக்கொண்டீர். முன்னர் கழுவிலேற்றப்பட்டவனுடைய சமீபத்திலிருந்த மாது நான் தான். அன்று என்னைத்தான் நீர் பார்த்தீர். உம்மாலேயே நான் வேறு ருபமடைந்தேன். இப்போது நானென்று உமக்குக் கூறுகின்றேன். அவ்வாறு செய்வீராயின் மற்றொரு சிலம்பையும் உமக்குக் கொடுப்பேன்" என்றாள். வீரனாகிய அசோகதத்தன் அவ்வாறே செய்கின்றேனென்று ஒப்புக்கொண்டான். அம்மாது, "இமயமலைச் சிகரத்தில் திரிகண்டமென்னு மொரு நகரமிருக்கின்றது. அங்கே லம்பஜிஹ்வன் என்னுமொரு ராக்ஷஸனிருந்தான். அவன்மனைவி நான். என் பெயர் வித்யுச்சிகை. எனக்கு என்னிச்சைப்படி உருவெடுத்துக் கொள்ளும் வல்லமையுண்டு. அவரிடம் எனக்கொரு புகல்வி பிறந்திருக்கிறாள். என்பதியாகிய லம்பஜிஹ்வன் தெய்வகதியால் பிரபுவாகிய கபாலஸ்போடனுடன் யுத்தஞ்செய்து பிராணனையிழந்தார். என்னைக்கபாலஸ்போடன் தன்னுடைய நகரத்திலிருக்கும்படி வற்புறுத்தினன். இப்போது அவ்வாறே நான் என் பெண்ணுடன் சுகமாக விருக்கின்றேன். அந்தப் பெண் இப்போது பருவமடைந்திருக்கின்றாள். அவளுக்குச் சூரனாகியவொருவன்கணவனாக வரவேண்டுமென்னுங் கவலை என்மனதில் மிகுதியாயிருக்கின்றது. நீர் அன்றிரவு பிரதாப மகுடராஜனோடு இவ்வழியே செல்லும் போது இங்கிருந்த நான் "இவனே மங்களன்; யௌவனப் பருவ

முடையவன். யோக்கியன், வீரன், நமது பெண்ணுக்குத் தகுந்த நாயகன். இவனையடையநாமோருபாயத்தைச்செய்தல்அவசியமாம் என்றுநிச்சயித்து, கழுவிலேற்றப்பட்டவன் பேசியதுபோலப்பேசி தாகவிடாய் தணித்துக்கொள்ள நீர்வேண்டுமென்று யாசித்தேன். நீர் நம்பி இம்மயானம் வந்ததும் உம்மை மாயையால் கணப்பொழுது ஏமாற்றினேன். மீண்டும் உம்மை இங்கு வரவழைக்க வெண்ணியே என் காலிலிருந்த இச்சிலம்பை உம்மிடம்விட்டுச்சென்றேன். அவ்வாறே நீர் இங்கே இப்போது வந்திருக்கின்றீர். எங்களுடைய வீட்டிற்கு வந்து என்பெண்ணையும் இதற்கிணையானமற்றொரு சிலம்பையும் பெற்றுக்கொள்ளுங்கள்" என்றாள்.

இவ்வாறு இராக்ஷஸ ஸ்திரீ சொன்னதும் வீரனாகிய அசோகதத்தன், "அவ்வாறேசெய்கின்றேன்" என்று ஒப்புக்கொண்டான். உடனே அம்மாதும் அசோகதத்தனும் அவளுடைய மாயாவிசேஷத்தால் ஆகாயத்திற் கிளம்பிச் சென்றார்கள். சில நிமிஷநேரத்திற்கெல்லாம் இருவரும் இமயமலைக்குச் சென்றார்கள். அங்கு இமயமலைச் சிகரத்தில் சொர்ணமயமான ஒரு நகரமிருக்கக் கண்டான் அசோகதத்தன். அந்நகரம், ஆகாயவீதியில் நடந்ததனால் களைப்படைந்த சூரியபிம்பம் அசையாமல் அமர்ந்திருக்கின்றதோவென்று எண்ணும்படி விளங்கிற்று. அசோகதத்தன் அதைக்கண்டதும் பிரமித்ததுமல்லாமல் வியப்புமடைந்தான். அங்கு அந்த இராக்ஷஸி கிருகத்திற்குச் சென்றதும் அவள்பெண்ணைக்கண்டு மோகங்கொண்டான். குருடன் கண்ட புதையல்போல வாய்த்ததென்றெண்ணிமகிழ்வுற்றான். அப்பெண்ணும் அசோகதத்தனைத்தான் மணந்துகொள்ள விரும்பியதைக் கடைக்கண்ணாற் குறிப்பிட்டாள். அப்பால் அந்த ராக்ஷஸஸ்திரீ தன் பெண்ணை அசோக தத்தனுக்கு விவாகஞ்செய்து கொடுத்து அளவற்ற ஆபரணங்களைச் சீதனமாக வளித்தாள். அசோக தத்தன் தன் மனைவியுடன் சிலகாலம் அங்கு வசித்திருந்து அப்பால் தன்மாமியைப் பார்த்து, இங்கே நான் வந்து நாளாய்விட்டது. வாரணாசிக்கு இன்றே புறப்படவேண்டும். அரசன் என்வரவை ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்த வண்ணமாகவே யிருப்பார். அவருக்கு மற்றொரு சிலம்பைக்கொண்டு வருவதாக வாக்களித்து வந்தேன். நான் அவசியம் அச்சிலம்பை கொண்டு போகவேண்டும். அதை நீர் எனக்கு வாக்களித்தபடி அளிப்பது உசித



மாகும் என்றான். வித்யுச்சிகை யென்னும் இராக்ஷஸ மாது "சந்தோஷம்" என்று கூறிச் சிலம்பையும் இணையற்ற ஒரு பொற்றாமரை மலரையும் கொடுத்தாள். அசோகதத்தன் அவற்றை மனமகிழ்ச்சியோடு பெற்றுக்கொண்டு மீண்டும் வருகின்றேனென்று வாக்களித்து விடைபெற்றுப் புறப்பட்டான்; ராக்ஷஸியும் அவனுடன் புறப்பட்டாள். இருவரும் ஆகாய வழியே மயானம் வந்து சேர்ந்தனர். இங்கே, அந்த ராக்ஷஸ ஸ்திரீ அசோகதத்தனை நோக்கி, "நான் எப்போதும் கிருஷ்ண பக்ஷம் சதுர்த்தசி இரவில் இங்கு வருவேன். அன்றையதினம் நீர் இங்கு வருவீராயின் உமக்கு வேண்டுங் காரியங்களை முடித்துக் கொள்ளலாம்" என்று கூறினாள். அசோகதத்தன் அவ்வாறே செய்கின்றேனென்று வாக்களித்து அம்மாதினிடம் விடைபெற்றுப் புறப்பட்டுத் தன் கிருகம்போய்ச் சேர்ந்தான்.

இங்குத் தாய்தந்தையர்கள் தங்கள் இளயகுமாரனைப் பிரிந்த துக்கத்தோடு மூத்தகுமாரனாகிய அசோகதத்தனையும் நீண்ட நாளாகப் பிரிந்திருப்பதனால் மிகுதியும் துக்கத்தி லாழ்ந்திருந்தார்கள்; அசோகதத்தன் வருகையை யெதிர்பார்த்த வண்ணமாயிருந்தனர். என்ன பரிதாபம்! பெற்றபிள்ளைக ளிருவரையும் பிரிந்திருக்க மனம் எவ்வாறு சகிக்கும்? இவ்வாறாய நிலைமையிலிருக்கும் தாய்தந்தையர் முன்னர் அசோகதத்தன் சென்று வணங்கிநின்றான். பிள்ளையைக் கண்டவுடன் பெற்றோர்களடைந்த சந்தோஷத்தை நாம் எவ்வாறிங் கெழுதுதவது! அளவிடற்கரிய பரமானந்த சாகரத்தில் மூழ்கியிருந்தனர். இதனால் அவர்கள் தங்கள் துக்கத்தையெல்லாம் மறந்துவிட்டவராயினர். இச்சமயத்தில் அசோகதத்தன் தான் போய்வந்த வரலாற்றைத் தெரிவித்தான்; அது கேட்டு அவர்கள் அளவிடக்கூடாத சந்தோஷத்தை யடைந்தனர். இஃதியற்கையன்றோ! இவனைப் பிள்ளையாகப் பெற இவன் தாய்தந்தையர் என்ன தவம் புரிந்தனரோ வென்றெண்ணி வியந்துபேசுமாறன்றோ விளங்கினான் அசோகதத்தன்.

அசோகதத்தன் சிலம்புடன் வந்திருக்கும் சமாச்சாரம் மறுநாளுதயத்திற்குள் அரசனுக்கு எட்டியது. அரசன் உடனே அசோகதத்தன் வீட்டிற்குவந்து அவனைக்கண்டு தன் தேகத்தில் ரோமஞ்சிலிர்ப்ப அவனைத் தழுவிக்கொண்டு மகிழ்வெய்தினான். அசோகதத்தன் அப்பொழுது தன் கைகுவித்தவாறே யிருந்து

அரசனுக்கு வந்தனஞ் செய்தனன். அப்பால் ஆநந்தமே பிரத்தியக்ஷமாக வந்ததுபோல் விளங்கிய அசோகதத்தனோடு அரசன் அரண்மனை சென்றான். அசோகதத்தன் அரண்மனையில் எல்லோருடைய முன்னிலையிலும் இரண்டு சிலம்புகளையும் வைத்தான். அவை கணகணவென்று சப்தித்தன. அங்ஙனஞ் சப்தித்தது அசோகதத்தனுடைய பராக்கிரமத்தைப் பிரகாசப்படுத்துவதுபோலிருந்தது. தான் கொண்டுவந்த மனோஜ்ஞமான சொர்ணத்தாமரை மலரையும் அவர்களிடம் கொடுத்தான். அம்மலர் ராக்ஷஸர்களது இராஜ்ய லக்ஷ்மியின் கையினின்றும் கொண்டுவந்த விலாஸத் தாமரைமலர்போ னிருந்தது. அரசனும் பட்டமகிஷியும் மிகுந்த உற்சாகத்தோடு சிலம்பினைப்பெற்ற வரலாற்றைக் கேட்க, அசோகதத்தன், அவ்வரலாற்றைத் தெரிவித்து, ஸாஹஸத்தை யங்கீகரியாமல் விசித்திரமான சரித்திரங்களால் மாத்திரம் சமத்காரம் பெற்றவனிடம் கீர்த்தி யேற்படுமா? என்று கேட்டான். இவ்வாறு கேட்டதும் அரசனும் அவன் மனைவியும் வியப்புற்று, நாம் கிருதகிருத்யர்களானோமென்று சந்தோஷித்திருந்தனர். அன்று முழுதும் அரண்மனையில் வாத்திய முழக்கத்துடன் உற்சவங் கொண்டாடப்பட்டது. அவ்வாறு வாத்திய முழக்கத்துடன் உற்சவங் கொண்டாடியது அவ்வசோக தத்தனுடைய குணங்களைக் கானஞ் செய்வதற் கொப்பாகவிருந்தது. மறுநாள் அவ்வரசன் தான் பிரதிஷ்டைசெய்திருந்த சிவாலயத்தின் வெள்ளிக் கோபுரசிகரத்தின் மீது சொர்ணத்தாமரையை அமைத்தான். அவ்வாறு அமைத்தது பிரதாபமகுடனுடைய கீர்த்தியைப்போலவும் அசோகதத்தனுடைய பராக்கிரமத்தைப் போலவும் காணப்பட்டது.

ஒரு கால் சிவபக்தனாகிய அந்தப் பிரதாபமகுடன் மகிமை வாய்ந்த பத்மமமைந்த கோபுரசிகரத்தை நோக்கிஆச்சரியத்தால் மலர்ந்த கண்களுடையவனாகி, பக்திரஸத்தின் ஆவேசத்தோடு கூறுகின்றான்:—

ஆச்சரியம்! உந்நதமான சொர்ணத்தாமரையோடு கூடிய இச்சிகரம் திருநீறு பூசியதால் வெண்மை நிறமமையப் பெற்ற திருமேனியையும் முடிமீது பிங்களவர்ணமான ஜடையையுமுடைய பரமசிவன்போல விளங்குகின்றது. இன்னுமொரு சொர்ணத்தாமரை இதைப்போற்கிடைக்குமாயின் இரண்டாவதுகோபுர



சிகரத்திலும் வைக்கலாம்; நன்றாயிருக்கும் என்றான். இதனை அருகேயிருந்து கேட்டுக்கொண்டிருந்த அசோகதத்தன், "நான் இன்னுமொரு சொர்ணத்தாமரை கொண்டுவருகின்றேன். தங்களுடைய மநோரதத்தின்பிரகாரமே இரண்டாவது கோபுரசிகரத்திலும் ஒன்றுவைப்போம்" என்றுகூறினான். அரசன், "அப்பா! அசோகதத்தா! இந்த ஒரு மலர்கொண்டுவருவதற்கே நீபடாத பாடு பட்டிருக்கின்றாய்; இதற்காக நீ கஷ்டப்படவேண்டாம்; வேறொன்று இருப்பின் வைக்கலாம்; அழகாயிருக்கும் என்று சும்மா சொன்னேன். அதனால் எனக்கொன்றும் ஆவதில்லை" என்று மொழிந்தான்.

அசோகதத்தன் சிலநாள் அதைப்பற்றி ஒன்றும் பேசாதிருந்து ஒருநாள் சொர்ணத்தாமரை இன்னொன்று கொண்டுவரத் தான் செல்வதாக அரசனுக்குத் தெரிவித்தான்.

இஃதிவ்வா றிருக்கையில் கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசி வந்தது. அன்று வழக்கம்போல், ஆகாயமாகிய பெரிய தடாகத்திற்குச் சொர்ணத்தாமரைபோல் விளங்கும் சூரியன்அஸ்தமனமாயினன். இரவு வந்தது. அவ்வாறு சூரியன் அஸ்தமித்தது அசோகதத்தன் ஸ்வர்ணத்தாமரைமலரை யடையும் விருப்பங்கொண்டிருக்கின்றான், நாமிங்கிருத்தல் கூடாது என்றெண்ணிப் பயந்து பதுங்கினன்போலும் பகலவன் என்றெண்ணக் கூடியதாயிருந்தது.

இவ்வா றிருக்கும் அன்றிரவு நடுராத்திரியில் இராஜகுமாரத்தி நித்திரைபுரியும் சமயம் பார்த்து, அசோகதத்தன் மயானஞ் சென்றான். அங்கே குறிப்பிட்ட மரத்தடியில் சென்று பார்க்குங்கால் அங்கு அந்த ராக்ஷஸ மாதிருக்கக்கண்டான் அசோகதத்தன். அந்த ராக்ஷஸி தன் மருமகனைக் கண்டவுடன் மகிழ்வொடு வரவேற் றுபசரித்துத் தன் கிருகத்திற்குச்செல்ல அழைத்தனள். அசோகதத்தன் அதற்குச் சம்மதிக்க, இருவரும் இமயமலைக்கு முன்போல் ஆகாயமார்க்கத்திற் சென்று கிருகத்தை யடைந்தார்கள். இங்கு அசோகதத்தன் மனைவியாகிய வித்யுத்பிரியை எப்போது நமது நாயகனைக் காண்போமென்று வழியைப் பார்த்துக் கொண்டிருக்கிறாளாதலால் அசோகதத்தனைக் கண்டவுடன்அவள் அளவற்ற ஆனந்தமடைந்து அவனை அன்போடு வரவேற்று வந்தனஞ்செய் துபசரித்தாள். அசோகதத்தன் அவளோடு சுகமனுப

வித்துக்கொண்டு சிலநாளங்கிருந்து பின், வேறொரு சொர்ணத்தாமரைமலர் வேண்டுமென்று தன் மாமியைக் கேட்டான். அவள், நான் எங்கிருந்து இன்னொரு பத்மம் கொண்டுவருவேன். முன் உமக்குக் கொடுத்தது பிரபுவாகிய கபாலஸ்போடனுடைய தடாகத்திலுண்டானது. அங்கு அப்படிப்பட்ட மலர் தடாகத்தின் நான்கு பக்கங்களிலும் புஷ்பித்திருக்கின்றது. முன்னொரு சமயம் அந்தக் கபாலஸ்போடன் என் கணவனிடத்துக் கொண்ட அன்பால் அவருக்கொரு மலர் கொடுத்தனர். அதனை உமக்கு நான் கொடுத்தேன்" என்றாள். அசோகதத்தன் "அங்ஙனமாயின், எனக்கு அத்தடாகத்தைக் காட்டினால் நான் அங்குச் சென்று பத்மத்தைப் பறித்துக்கொண்டு செல்கிறேன்" என்று கூறினான். இராக்ஷஸ ஸ்திரீ அதுகேட்டு, "அந்தோ! அத்தடாகம் குரூரர்களான இராக்ஷஸர்கள் பலரால் காக்கப்பட்டுவருகின்றது. அங்குத் தாங்கள் செல்வது உசிதமல்ல. தவிர, அதை யடையத் தங்களால் முடியாது" என்று கூறினாள் அந்தராக்ஷஸி. அசோகதத்தன், "நான் அத்தடாகத்தைக்கண்டு அதிலுள்ள தாமரையை யடையாமல் வீடுதிரும்பேன். அஃது எப்படிப்பட்டகாவலுக்குள்ளிருப்பினும் அவசியமில்லை; எனக்கு அதையடையலாமென்னுந் தைரியமிருக்கின்றது. நீங்கள் அத்தாடகத்தை எனக்குக்காட்டுங்கள்" என்று கூறினான். மறுபடியும் ராக்ஷஸி "வேண்டாம் பிடிவாதம். அஃது அசாத்தியமான காரியம். அதிற் பிரவேசிப்பது பிழையாகும்; வேண்டாம்" என்று தடை செய்து பார்த்தாள்; அசோக தத்தன் கேட்டானில்லை. பின்னர் அந்த ராக்ஷஸி பிரயாசத்தின் பேரில் அத்தாடகத்தை அசோகதத்தனுக்குக் காட்டினாள். அத்தாடகம் தேவர்களுக் குரியதாகையால் பார்ப்பதற்கு இரமணீயமாக விளங்கிற்று. ஸுவர்ண கமலங்களெங்கும் நிறையப் பெற்றிருந்தது. அந்த ஸுவர்ண கமலங்கள் எப்போதும் தலைநிமிர்ந்த வண்ணமாக விருந்தமையால் ஸூரியனுடைய காந்தியைப் பருகிக்கொண்டிருப்பது போலக் காணப்பட்டன.

இவ்வாறான கமலங்களைப் பார்த்தவுடன் அசோகதத்தன் தடாகத்திலிறங்கிக் கமலங்களைப்பயமில்லாமற்பறித்தான். அவன் மலர் பறிப்பதை யறிந்தஅத்தடாகக் காவலாளிகள் ஆரவாரித்துக் கொண்டு பயங்கரமாக அவன் முன்தோன்றி அவனைத்தடுத்தார்கள். அசோகதத்தன் அவர்களை எதிர்த்துத் தன் ஆயுதத்தால்



அவர்களெல்லோரையும் இருந்தவிடந்தெரியாமல் வதஞ்செய்துவிட்டான்; தப்பியசிலர் ஓடிப்போய்க் கபாலஸ்போடனுக்குத் தெரிவித்தார்கள். கபாலஸ்போடன் இச்செய்தியைக் கேட்டவுடன்மிகுந்தகோபத்துடன்எழுந்து தன்பரிவாரங்களுடன் தடாகத்தருகே சென்று நிகரற்றவல்லமைபடைத்த அசோகன் நிற்பதைப் பார்த்தான். உடனே அவனுக்கு அவன் பூர்வ நினைவுவந்தது. இவன் என் தமையனல்லவா? இவன் இவ்விடத்திற்குஎவ்வாறுவந்தான். என்றாச்சரியப்பட்டு, தன்கையிலிருந்த ஆயுதங்களை நழுவவிட்டு ஆனந்த பாஷ்பம் பெருகும் கண்களோடு ஓடோடியும் வந்து அண்ணா! என்றலறி அவன் பாதங்களிற் பணிந்தான். அசோகதத்தன் அதுகண்டு பிரமித்துத் தன்காலில் விழுந்த அவனைவாரியெடுத்து "அப்பா நீ யார்" என்றான். கபாலஸ்போடன், நான் உன் சகோதரன் விஜயதத்தன். நாமிருவரும் வேதிய சிரேஷ்டராகிய கோவிந்த ஸ்வாமியின் பிள்ளைகளல்லவா! இவ்வளவு காலமும் நான் இராக்ஷஸனாக விருக்க நேர்ந்தது. சிதையிலிருந்த கபாலத்தை யுடைத்தமையால் கபாலஸ்போடனென்னும் பெயரடைந்தேன். உம்மை இப்போது தரிசித்தமையின், முன் பிராமணனாக விருந்ததும் நாம் கோவிந்தஸ்வாமியின் புத்திரர்கள் என்பதும் என் நினைவுக்குவந்தன. மோகத்தால் மறைப்புண்டிருந்த அறிவினையுடைய ராக்ஷஸத் தன்மையும் இப்போது நீங்கிற்று" என்று கூறினான்.

இவ்வாறு தெரிவிக்கும்போதே, ராக்ஷஸத் தன்மையையடைந்திருந்தமையால் குற்றமடைந்த தேகத்தைக் கழுவுவதுபோல ஆநந்தபாஷ்பத்தைப் பெருக்கி விஜயதத்தனைக் குளிப்பாட்டினான் அசோகதத்தன். அச்சமயம் வித்தியாதரர்களுக்கு ஆசிரியர்களாகிய பிரகஞப்தி கௌசிகர் என்பவர் ஆகாயத்தினின்றிறங்கி இவர்களிடம் வந்து "நீவிர்யாவரும் வித்தியாதரர்கள்; சாபத்தால் இவ்வவஸ்தைக்குள்ளானீர்கள்; இனி அச்சாபம் உங்களுக்கில்லை; நிவர்த்தியாயிற்று. நான் சில வித்தைகளை உங்களுக்குச் சொல்லித் தருகின்றேன். நீங்கள் இனி இங்கிருக்க வேண்டாம். எல்லோரும் உங்களிருப்பிடஞ் செல்லுங்கள்" என்றுகூறி அவர்களுக்குச் சில வித்தைகளைச் சொல்லிக்கொடுத்துத் தாம் வந்தவழியே சென்றனர். அவர் சென்றவக் கணமே அசோகதத்தனும் விஜயதத்தனும் வித்தியாதரர்களாயினர். அத

ற்குத்தகுந்த ஞானமுமடைந்தனர். அப்பால் அங்கிருந்து ஸ்வர்ணத் தாமரைகளைப் பறித் தெடுத்துக்கொண்டு இராக்ஷஸ மாதிருந்த இமயமலைச்சிகரம் வந்தனர். இவர்களிருவரையுங் கண்டதும் அந்த ராக்ஷஸமாதும்அவள் குமாரியும் வித்தியாதரர்களாயினர். பிறகு எல்லோரும் சந்தோஷத்துடன் அங்கிருந்து புறப்பட்டு ஆகாயவழியே வாரணாசியை யடைந்தனர்.

இங்கே புத்ரவியோகமாகிய அக்கினியினால் தாபமடைந்து தவிக்கும் கோபால சுவாமியையும் அவர் மனைவியையும் தங்கள் தரிசனமாகிய அமுதமழைபொழிந்து சந்தோஷப்படுத்தினார்கள் இரண்டு புத்திரர்களும். விசித்திரமாகிய மற்றொரு ஜன்மமடைந்த இவ்விருவரின் தோற்றமும் தாய் தந்தையரின் உற்சாகத்திற்கு மாத்திரம் காரணமாகவில்லை; ஜனங்களெல்லோருடைய உற்சாகத்திற்கும் காரணமாயிற்று.

இவ்வாறான வைபவத்துடன் அசோகதத்தன் வந்திருக்கும் செய்தியை அரசன் கேட்டு மிகுதியும் சந்தோஷமடைந்து அவன் கிருகம் வந்து அசோகதத்தனைத் தழுவிக்கொண்டு சம்மானமளித்தான். அசோகதத்தனும் அரசனை யுபசரித்துத் தான் கொண்டு வந்திருந்த சொர்ணத்தாமரைகளைக் கொடுத்தான். அரசன் தான் விரும்பியதினும் அதிகமானசொர்ணத்தாமரைக ளடைந்ததனால் மிகுதியும் சந்தோஷமடைந்தான்.

அப்பால் எல்லோரும் வீற்றிருக்கும் சமயத்தில் கோவிந்தஸ்வாமி ஆச்சரியத்துடன் விஜயதத்தனைப்பார்த்து, "அன்றைய தினம் இராத்திரி மயானத்தில் இராக்ஷஸத் தன்மையையடைந்த பின்னர் என்ன நடந்தது" என்று வினவினார். விஜயதத்தன், "நான் இராக்ஷஸத்தன்மையையடைந்து கபாலஸ்போடன் என்னும் பெயர் பெற்றதும் என்னை ராக்ஷஸர்கள் தங்களுடன் சேர்த்துக்கொண்டு அவர்களுடைய அரசனிடம் என்னைக்கொண்டு போய் விட்டனர். அவன் எனக்குச் சேனாதிபதி உத்தியோகமளித்து என்னிடம் மிகுதியும் அன்பு பாராட்டி வந்தான்.

அப்பால் அவன் கர்வங்கொண்டு கந்தர்வர்களுடன் சண்டை செய்யச்சென்று அவர்களிடம் தோல்வியடைந்து மரணமடைந்தான். பின்னர் ராக்ஷஸர்களெல்லோரும் என் கட்டளைப்படி நடந்து வந்தனர். நான் அவர்களுக்கரசனாக விருந்து அவர்களை நீதி



யாய் ஆண்டுவந்தேன். இவ்வாறிருக்கையில் சொர்ணத் தாமரைக்காகஅண்ணா அங்கேவந்தார். இவர்தரிசனம்கண்டவுடன் என்அவஸ்தை யடங்கிற்று; சாபம் நீங்கப்பெற்றேன். அப்பால் எங்களுக்கு வித்தைகள் கிடைத்த விசேஷத்தை அண்ணா அவர்கள் அறிவிப்பார்" என்று தெரிவித்தான். பிறகு அசோகதத்தன் 'முன் நாங்களிருவரும் வித்தியாதரர்களாக விருந்தோம். காலவமுனிவரின் ஆச்ரமத்தில் கங்காநதியில் நீராடிக்கொண்டிருந்த ரிஷிகன்னிகைகளைக் கண்டோம். அவர்கள்மீது எங்களுக்கு விருப்பமுண்டாயிற்று. அச்சமயம் அக்கன்னிகைகள் எங்களைப் பார்க்க, அவர்களும் எங்களை விரும்பினர். இவ்விரகசியத்தை அவர்களின் உறவினர் எவ்வாறோ தெரிந்துகொண்டனர். அதனால் அவர்கள் கோபங்கொண்டு கெட்டநடத்தையுடைய நீங்களிருவரும் மானிடஜன்மத்தை யடையக்கடவீர். அதிலும் உங்களுக்குள் பிரிவுவிசித்திரமாக ஏற்படப்போகின்றது. மானிடர்கள் வரமுடியாத இடத்தில் ஒருவன் வர அவனைப்பார்த்து மற்றொருவன் அறிவைப் பெறப்போகின்றான். அப்பொழுது வித்தியாதர ஆசாரியர்களிடம் வித்தைகளைப் பெற்றுச் சாபவிமோசனமடைந்து மீண்டும் உங்கள் உறவினரை அடையக் கடவீர்." என்று சாபங்கொடுத்தனர். அவ்வாறே நாங்களிருவரும் இங்கே பிறந்தோம். பிரிவினையேற்பட்டதுதான் தங்கள் சித்தமறிந்ததாகும். பிறகு என் மாமியினுடைய மாயா விசேஷத்தால் ராக்ஷஸ ராஜனின் நகரம்போய் அங்கே என் சகோதரனை யடைந்தேன். முன் சாபப்படி அந்நகரத்திலேயே குருவாகிய பிரஞ்ப்தி கௌசிகர் என்பவரிடம் வித்தைகளைப் பெற்றோம். அப்பால் அக்கணமே வித்தியாதரர்களாகி இங்கு வரலானோம்" என்று கூறினன்.

அப்பால் தன்வீட்டிலிருந்து அரசனுடன் அரண்மனைக்குச் சென்று தன்மனைவி மதனலேகையைக் கண்டு அவளிடம் சந்தோஷமாக எல்லாவற்றையும் தெரிவித்தான். அக்கணமே அவளும் வித்தியாதரத் தன்மையையடைந்து விசித்திரமாக விளங்கினள். அரசனும் அவன் மனைவியும் பார்த்துஆச்சரியமடைந்தனர். அப்பால் அசோகதத்தன் மதனலேகையை யழைத்துக்கொண்டு தன் வீடு வந்து தன் பெற்றோர், தன் சகோதரன், தன்னுடைய மற்றொரு மனைவி யெல்லோருடனும் புறப்பட்டு ஆகாயவழியே சென்று வித்தியாதர சக்ரவர்த்தியை யடைந்து அவரை

வணங்கி நின்றான். அந்த வித்தியாதர சக்ரவர்த்தி இவர்களைக் கண்டவுடன் சந்தோஷித்து அசோகதத்தனுக்கு அசோகவேகனென்னும் பெயரையும் விஜய தத்தனுக்கு விஜயவேகனென்னும் பெயரையும் கொடுத்தான். அவர்களிருவரும் அப்பெயர்களை ஏற்றுக்கொண்டு அவனுடைய ஆக்ஞைப்படி தங்கள் பூர்வவாசஸ்தானமாகிய கோவிந்த கூடம் என்னும் மலைக்குச்சென்றனர்.

காசிதேச ராஜனாகிய பிரதாபமகுடன் தன் விருப்பத்தின் பிரகாரம் சிவன் கோயிற் சிகரத்தில் அசோக தத்தன் கொடுத்த பொற்றாமரையிலொன்றைப் பொருத்திவைத்து, சிவபெருமானைச் சொர்ணத்தாமரை மலர்களால் மெய்யன்போடு அர்ச்சித்து, நாம் அசோகதத்தனுடைய சம்பந்தத்தின் காரணமாக நல்லபலனையடைந்தோம், நமது வம்சமும் நல்லகதியையடைந்தது. யாவும் ஈசன் செயலென்றெண்ணி மகிழ்வுற்றிருந்தான்.

இவ்வாறு தேவ புருஷர்கள் இந்த ஜீவலோகத்தில் ஒரு காரணமாக உண்டாகின்றார்கள். அவர்களுக்கு மிகுந்ததைரியமும் உற்சாகமுமுண்டு. அவர்கள்யாவரும்பெறுதற்கரியகாரியசித்தியையடைந்திருக்கின்றார்கள். ஆகையால் பராக்ரமசாகரமாகிய சக்திதேவ! நீரும் தேவாம்சமுள்ளவரென்று எண்ணுகின்றேன். உமது விருப்பமும் நிறைவேறும். பெரியோர்களும் செய்யமுடியாத ஒரு காரியத்தில் உற்சாகத்துடனிருப்பது இயற்கைக்குணவிசேஷத்தைக் காட்டுகின்றது. நீ விரும்பிய இராஜகுமாரியாகிய கனகரேகையும் தேவ ஸ்திரீயாகவே யிருக்கவேண்டும். இன்றேல், அவள் கனகபுரியைக்கண்டவனைக் கணவனாக அடைய எவ்வாறு விரும்புவாள் ?

இவ்வாறு சக்தி தேவன் விஷ்ணு தத்தனிடம் ரஸமானசரித்திரங்களைக்கேட்டு எவ்விதத்திலும் நாம் கனகபுரியைப்பார்க்க வேண்டும் ; அந்தப்பாக்கியம் நமக்குக்கிடைக்கும் என்றெண்ணித் தைரியங்கொண்டு அன்றிரவைக் கழித்தான்.

இரண்டாவது தரங்கம்

முற்றிற்று.



## சதுர்த்தாரிகா லம்பகம்.

### 3-வது தரங்கம்.

பின்னர் மறுநாட் காலையில் வேடராஜனாகிய ஸத்யவிருதன் மடத்திற்கு வந்து சக்திதேவனைக்கண்டு பணிந்து, "பிராம்மண சிரேஷ்ட! உமதிஷ்டம் நிறைவேறுவதன் பொருட்டு நானொரு யுக்தி கண்டுபிடித்திருக்கின்றேன்; அதைக்கேளும். கடலின் நடுவே ரத்தினகூடம் என்னுமொரு தீவிருக்கின்றது. ஆங்கு ஆதி பகவனாகிய விஷ்ணுவை ஸமுத்திரராஜன் பிரதிஷ்டை செய்திருக்கின்றான். ஒவ்வொரு ஆஷாட மாஸம் சுக்லபக்ஷம் துவாதசி தினமும் அங்கே விஷ்ணுமூர்த்தியைப் பூஜிப்பதற்காக அநேகர் வந்து கூடுகின்றனர். நாம் அங்குச் செல்வோமாயின் கனகபுரியைப் பற்றித் தெரிந்துகொள்ளுதல் கூடும். அந்தத் துவாதசி திதியும் நெருங்கிவிட்டது. நாம் போவோம்" என்று தெரிவித்தான். சக்திதேவன், அங்ஙனமே செய்வோமென்று ஒப்புக்கொண்டு விஷ்ணுதத்தன் கொடுத்த வஸ்துக்களை மனமகிழ்ச்சியுடன் பெற்றுக்கொண்டு அடுத்த தினமே புறப்பட்டு, ஸத்யவிருதன் என்னும் வேடன் தயாராக வைத்திருந்த கப்பலிலேறினான். ஸத்யவிருதன் யானையையொத்த முதலைகள் மலிந்துலாவப்பெற்றதும் பார்க்கப் பயங்கரமானதுமாகிய கடலில் தன் கப்பலைச் செலுத்தினான். அச்சமயம் சக்திதேவன், அவனைப்பார்த்து, "இதோ எதிரில் அதிகப் பருமனாயும், பார்வைக்குப் பயங்கரமாயும் தெரிகின்றதே, அஃதென்ன? தற்செயலாக நம்முன்தோன்றிய இறக்கைகளுடைய பெரிய பர்வதம்போலத் தெரிகின்றதே" என்று கேட்டான். ஸத்யவிருதன், "வேதியரே! இஃதோர் ஆலமரம். இதன் கீழ்ப்பாகத்தில் பெரிய சுழல்களுடன்கூடிய பள்ளமிருக்கின்றதென்று கூறுகின்றார்கள். இவ்விடத்தைக் கடந்துபோக வேண்டும் நாம்; இவ்விடத்திற் சென்றவர்கள் மீண்டும் திரும்புவது கிடையாது" என்று கூறினான். இவ்வாறு ஸத்தியவிருதன் சொல்லிக்கொண் டிருக்கும்போதே கப்பல் அந்தப் பள்ளத்தை நோக்கியவாறே சென்றது. அதைக்கண்ட ஸத்யவிருதன், 'வேதியரே! நமக்கு விநாசகாலம் வந்துவிட்டது, நிச்சயம். நமது கப்பல் அகாரணமாக அங்கேயே போகின்றது. இச்சமயம் நான் இந்தக் கப்பலை அடக்கிச் செல்ல அசக்தனாகவிருக்கின்றேன். வன்மை மிகுந்த கர்மம்போன்ற இந்த ஜலத்தினால்,நாம் இழுக்கப்

படுகின்றோம். நமனுடைய முகம்போன்ற கம்பீரமான இச் சுழலில் இதோ நாம் தள்ளப்படுவது நிச்சயம். இதனால் நான் வருத்தப்படவில்லை. யாரே உலகத்தில் சதமாக வாழ்பவர்? யாவருடைய சரீரம் நிலைக்கக்கூடியது? "நீர்க்குமிழி பூணமைத்து நின்றாலு நில்லாமெய்" என்றான்றோர் கூறுகின்றனர். ஆனால், உமது எண்ணம் நிறைவேறாமற்போகின்றதே யென்னும் துக்கமே தற்சமயம் என்னைப் பாதிக்கின்றது. இதோ நான் இக்கப்பலைச் சிறிதுவலுவாகத் தேக்கிக்கொள்ளுகின்றேன், நீர் தாமதியாமல் இவ்வாலமரத்துக்கிளையைப் பிடித்துக்கொள்ளும்; நீர் ஒரு கால் தப்பிப்பிழைத்தல் கூடும். தெய்வத்தின் விலாஸங்களையும் கடலின் அலைகளையும் யாரே நிர்ணயிக்கவல்லார்?" என்று தைரியசாலியாகிய ஸத்யவிருதன் கூறக் கப்பலும் மரத்தைக் கிட்டியது. உடனே சக்திதேவன் சிறிதும் அஞ்சாமல் ஆலமரத்துக் கிளையை வலுவாகப் பிடித்துக்கொண்டான். அக்கணமே சத்யவிருதன் பரோபகாரார்த்தமாக ஏற்பட்ட தன் தேகத்துடனும் கப்பலுடனும் சுழலிலாழ்ந்தான்.

அப்போது சக்திதேவன் கிளையிலிருந்தவாறே யோசிக்கின்றான். இவ்வளவு முயற்சி செய்தும் நான் கனகபுரியைக் கண்டேனில்லை. இதோ இங்கே அகாரணமாக மரணமடையப் போகின்றேன். பாவியாகிய நான் இந்த வேடராஜனை மரணமடையும்படி செய்தேன். ஆனால் வருவது வந்தேதீரும்! விதியினையாவரே வெல்லு நீர்மையர்? அஃது எல்லோருடைய தலையிலும்நிலைபெற்றிருக்கின்றது. அது மகிமை பெற்றது. நானென்ன செய்யக்கூடும் என்றெண்ணி வருந்தினான். அவன் அன்று பகல்முழுதும் பலவாறானஎண்ணங்களிலே மூழ்கியிருந்தான். அன்று மாலை அவ்வால மரத்திற்கு அநேக பறவைகள் வந்து சேர்ந்தன. திசைகளெங்கும் கேட்கும்படி அப்பறவைகள் சத்தமிட்டன. அவற்றின் இறக்கைகளின் காற்றினால் கடலின் அலைகளும் சலனமுற்றன. இவ்வாறு அவை அம்மரத்திற் கூடியது, விசுவாசத்தால் எதிர்கொண்டு வந்ததற் கொப்பாயிருந்தது. பின்னர் அப்பறவைகள் ஒன்றோடொன்று மானிடவாக்கில் சம்பாஷித்துக்கொண்டிருந்தன. அவற்றின் சம்பாஷணையைச் சக்திதேவன் இலைமறைவிலிருந்து கவனித்து வந்தான். அவற்றில் ஒன்று தான் கண்டவொரு மலையைப்பற்றியும், மற்றொன்று தான் கண்ட தீவைப்பற்றியும், வேறொன்று திசை



யைப்பற்றியும் வர்ணித்துப் பேசிக்கொண்டன. இச்சந்தர்ப்பத்தில் ஒரு கிழப்பறவை பேசத்தொடங்கி, "நான் கனகபுரி சென்றிருந்தேன். அஃது அற்புதமான நகரம். நான் நாளைக்கும் அங்கேயேபோய் இரைதேடி வருவேன்" என்று கூறியது; அமுதரஸம் போன்ற இம்மொழிகளைச் செவியிற்கொண்ட சக்திதேவன் "பாக்கியம் பெற்றேன். கனகபுரியென்னும் நகரமிருப்பது இப்போதுண்மையாயிற்று. நான் எவ்வாறு அந்நகரத்தை யடைவேன்; இப்பெரிய பறவையையே வாகனமாகக் கொள்வேனாயின், எனது காரியம் சித்தியாம். அதற்கென்ன செய்யலாம்; இது நித்திரை செய்யுமன்றே? அச்சமயம் நான் மெதுவாய் இதனருகே சென்று இதனுடைய ஒரு பக்கத்து இறக்கையில் மறைந்து பிடித்துக் கொண்டால் நான் அங்குப்போய்ச் சேர்தல்கூடும்" என்றுயோசனை செய்து கொண்டு அப்பறவை நித்திரைபோகும் வரையில் காத்திருந்து பின் தான் யோசித்தவாறு அதன் இறக்கையில் மறைந்து கொண்டான்.

பிறகு மறுநாள் அருணோதயமாகு முன்னர்ப் பறவைகளெல்லாம் மரத்தைவிட்டு நாலாபக்கமும் சென்றன. அப்பொழுது இந்தக் கிழப்பறவையும் சக்திதேவனைத் தூக்கிக்கொண்டு தன் தீர்மானப்படி கனகபுரியை நோக்கிச்சென்றது. புறப்பட்டசிறிது நேரத்திற்கெல்லாம் கனகபுரியை யடைந்து ஓர் உத்தியான வனத்திற் போய் உந்நதமான மரத்தில் உட்கார்ந்தது அப்பறவை. பின்னர்ச் சக்திதேவன் அப்பறவைக்குத்தெரியாமல் அதன் இறக்கையிலிருந்து மரத்திற்கு வந்து கீழேயிறங்கி உத்தியான வனத்தில் இங்குமங்குஞ்சென்று உலாவினான். அப்பொழுது அவ்வனத்தின் கண் ஓரிடத்தில் இரண்டு மங்கையர்பரபரப்புடன் மலர்கொய்து கொண்டிருந்தனர். அவர்களைச் சிறிது தூரத்திலிருந்தே கண்டனன் சக்திதேவன். உடனே வியப்பும் மகிழ்ச்சியுமடைந்து மெதுவாய், அம்மாதர்களிருக்குமிடஞ் சென்று, "பெண்மணிகளே! நீவிர்யார்? இவ்வூரின் பெயரென்ன?" என்று கேட்டான். அம்மாதர் "ஐயா! இது கனகபுரியென்னும் நகரம் வித்தியாதரர்கள் வசிக்குமிடம். இங்கே சந்திரப்ரபை யென்னும் ஒரு வித்தியாதர ஸ்திரீ யிருக்கின்றாள். நாங்கள் அவளுடைய உத்தியான வனமாகிய இதனைப் பரிபாலிப்பவர். நாங்கள் தற்போது மலர் கொய்வதும் அவ்வணங்கின் பொருட்டேயாம்" என்று கூறினர். சக்திதேவன், "மாதர்க

ளே! உங்களுடைய யஜமானியை நான் பார்க்கவேண்டும். அதற்கெவ்வாறு யோசனை" என்று கேட்டான்; அம்மாதர் "எங்களுடன் வந்தால் எங்கள் யஜமானியிடம் அழைத்துச் செல்கின்றோம்" என்று தம்முடன் அழைத்துக்கொண்டுபோயினர். அந்நகரம் ஸம்பத்துகளுக்கு ஸங்கேதஸ்தானம் போல மாணிக்கமயமான ஸ்தம்பங்களுடனும் ஸ்வர்ணமயமான சுவர்களுடனும் விளங்கப்பெற்றிருந்தது. அதனைக்கண்ட சக்திதேவன், பரமாச்சரியமும் என்றுமடையாத மகிழ்ச்சியு மெய்தினன். சந்திரப்பிரபை யென்னும் ஸ்திரீரத்தினமிருக்கும் மணிமயமான கிருகத்தைக் கிட்டியதும் அம்மாதர்களிருவரும் சக்திதேவனை வெளியிலேயே யிருக்கச்செய்து தாங்கள்மாத்திரம் அந்தத் திவ்ய கிருகத்திற்குட் பிரவேசித்துத் தங்கள் யஜமானியிடம் பணிவுடன் அந்தணனாகிய சக்திதேவனுடைய வரவைத்தெரிவித்தனர். அம்மாதரசியுடனே த்வாரபாலகனை யழைத்துச் சக்திதேவனைத் தன்னிடம் அழைத்துவரும்படி ஆக்ஞாபித்தாள். அவன் அவ்வாறே யென்று சக்திதேவனை மரியாதையுடன் கிருகத்திற்குள் அழைத்துச் சென்று தன் யஜமானியிடம் விட்டுப் பணிந்து நின்றான். நேத்திரோற்சவமாக விளங்குபவளும் பிரமனது ஆச்சரியமான சிருஷ்டியின் சக்திபோன்றவளுமாகிய அவ்வனிதையைக் கண்ட சக்திதேவன் "என்னே ஆச்சரியரூபமிது!" என்று கருதிப் பிரமித்து நின்றான். ஆனால் அந்தச் சந்திரப்ரபை இந்தச் சக்திதேவனிடம் சுவாதீனமடைந்து தன்னுடைய சிறந்த இரத்தினாஸனத்தினின்று எழுந்து நல்வரவு கூறித் தானே ஆதரவுடன் உட்காரும்படி உபசரித்தாள். சக்திதேவன் மனமுவந்து தனக்களிக்கப்பட்டதொரு திவ்யாசனத்தமர்ந்தான். சந்திரப்பிரபை யவனைப்பார்த்து "நீர்யார்? மானிடர்கள் எவராலும்அடைதற்கரிய இந்நகரத்திற்கு நீர் எவ்வாறு வந்தீர்" என்று கேட்டாள். சக்திதேவன், தன்னுடைய தேசத்தையும் ஜாதியையும் பெயரையும் கூறித்தான் கனகபுரியைக் கண்டு பிடிக்க முயற்சித்ததன் காரணத்தையும் தெரிவித்தனன். சக்திதேவன் இவ்வாறு கூறியது கேட்ட சந்திரப்பிரபை உடனே பெருமூச்சுவிட்டு, "சுந்தர! கேட்கவேண்டும். இங்கே சக்திகண்டனென்னு மொருவித்யாதரபதியிருக்கின்றான். அவனுக்கு என்னோடு நால்வர் பெண்களாகப் பிறந்தனர். நான் தான் அவர்களுள் மூத்தவள். என்பெயர் சந்திரப்ரபை; இரண்டாவது பெண் சந்திரரேகை யென்னும் பெயர் கொண்டவள்



மூன்றாவது பெண் சசிரேகையெனும் பெயர் பூண்டவள்; நான்காவது பெண் சசிப்ரபை யெனப்படுவாள். நாங்கள் நால்வரும் எங்கள் தந்தையின் கிருகத்தில் மிகுந்த செல்வமாக வளர்ந்து வந்தோம். அப்பொழுது ஒருநாள், என் சகோதரிகள் மூவரும் நீராடுவதற்காக மந்தாகினி நதிக்கேகினர். அங்கு அச்சமயம் அக்யதபஸ் என்னும் முனிவர் தவம்புரிந்து கொண்டிருந்தனர். சென்ற மூவரும் தங்களுடைய யௌவனக்கொழுப்பால் ஜலக்ரீடை செய்வான்றொடங்கி ஒருவர்மேல் ஒருவர் நீரைவாரியிறைத்துக்கொண்டு விளையாடினார்கள். இவ்வாறு இவர்கள்உபத்திரவஞ் செய்வது கண்ட முனிவர் கோபங்கொண்டு "நீவிர் மூவரும் மானிட உலகத்தில் குற்சிதகன்னிகைகளாப்பிறக்கக்கடவீர்" எனச்சாபங் கொடுத்தனர். பிறகு இச்செய்தி என் தந்தைக்கெட்டியது. என் தந்தை உடனே முனிவரிடஞ்சென்று "குழந்தைகள் தெரியாமற் செய்துவிட்டனர்; மன்னித்து அனுக்ரகஞ்செய்தல்வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார். அம்முனிவர் என் தந்தையின் பிரார்த்தனைக் கிரங்கி, மூவருடைய சாப விமோசனத்தைத் தனித்தனியே கூறினர். அல்லாமலும் அம்மூவரும் பூர்வஞான உணர்வுடையராய் மானிட ஜன்மமெடுத்தல் வேண்டுமெனவுங் கட்டளையிட்டனர்.

அப்பால் என் சகோதரிகள் மூவரும் அக்கணமே தங்கள்சரீரங்களை யொழித்து மானிடலோகமேகினர். என் பிதா அந்த வருத்தம் பொறுக்கமாட்டாதவராய் மனவெறுப்படைந்து என்னிடம் இந்நகரத்தை யொப்புவித்து வனஞ்சென்றனர். நான் பிறகு வருத்தத்துடன் வாசஞ்செய்துகொண்டு வருகையில் ஒருநாள் என் கனவில் அம்பிகை பிராப்தமாகி, "பெண்ணே! உனக்கு மானிடனொருவன் புருஷனாவன்" என்று கூறிமறைந்தனள். ஆகையால், எனக்குவரும் வரன்களையெல்லாம் ஏற்காமலிருக்கின்றேன். இதுவரையில் அநேகவித்யாதரர்கள் வந்து போய்விட்டனர். இன்னும் கன்னிகையாக விருக்கின்றேன். அப்பொழுது ஆச்சரியமான உம்முடைய வரவாலும் உமது தேக காந்தியாலும் உமக்கு வசமானேன். இச்செய்தியை ரிஷபம் என்னும் பெரியபர்வதத்தின் கண்ணிருக்கும் என் தந்தையினிடம்தெரிவிக்க வரும் சதுர்த்தசியில் செல்லுகின்றேன். அம்மலையில் ஒவ்வொரு வருஷமும் வித்யாதரர்கள் பரமசிவனைப் பூசிக்க அங்கு இந்தச் சதுர்த் தசி திதி

யில் வருவார்கள். என் தந்தையும் அங்கிருக்கும் ஆலயம்வருவார். அவரிடம் நான் விரைவில் சென்று இச்செய்தி தெரிவித்து உத்தரவு பெற்று வருகின்றேன். பின்னர் நீர் என்னை மணஞ்செய்து கொள்ளலாம். அதுவரையில் நீர் இங்கேயே யிருக்கலாம் என்று கூறி அவனுக்கு வேண்டிய பல உபசாரங்களும் புரிந்து வந்தனள். அவளுடைய உபசரணை அந்தச் சக்திதேவனுக்கு, காட்டுத்தீயினால் தாபமடைந்த ஒருவனுக்கு அமுதமடுவில் மூழ்கும்படியான பாக்கிய மேற்பட்டதுபோல இருந்தது.

அப்பால் கிரமமாக சதுர்த்தசி திதி வந்தது. அன்று சந்திரப்பிரபை சக்திதேவனிடம் வந்து இன்று நான் என்னுடைய பரிஜனங்களுடன் என் தந்தையினிடம் செல்லுகின்றேன். நீர் இங்கே தனியே யிருந்து வரவேண்டும். இரண்டு நாட்களில் வந்துவிடுகின்றேன் இந்தக்கிருகத்திலுள்ள மத்திமப்பிரதேசத்திற்கு நீர் எக்காரணத்தை முன்னிட்டும் வரக்கூடாதுஎன்றுகூறி, அவனுடைய மனந் தன்னைத்தொடரவும் தன்மனம் அவன் பால் நிற்கவும் புறப்பட்டாள் அந்தச் சந்திரப்பிரபை.

அப்பால் சக்திதேவன் அந்தக்கிருகத்திலிருந்து அங்கங்கு காணப்படும் விநோதங்களைக்கண்டு மகிழ்ச்சியுடனிருந்தான். இப்படியிருக்கையில் அடுத்த நாள், அந்தக் கிருகத்தின் மத்திமப் பிரதேசத்திற்குச் சமீபமாகப்போய் நின்று வித்தியாதர ஸ்திரீ இங்குச் செல்லக்கூடாதென்று கூறினாளே அதன்காரணத்தை யறிதல் வேண்டும் என்றெண்ணி, அந்தவிடத்திற் பிரவேசித்தான். மானிடர்களுடைய மனப் பிரவிர்த்தியானது எவ்வாறு தடைசெய்யப்படினும் பெரும்பான்மையும் தீயவழியிற்செல்வது வழக்கமேயன்றோ? சக்திதேவன் ஆங்குச்சென்றதும் மூன்று ரத்தினமண்டபங்களைக்கண்டான். ஒரு மண்டபத்தின்வாயிற்படி திறக்கப்பட்டிருந்தது. அதற்குள் பிரவேசித்தான்; உள்ளே ரத்னமயமான மூன்று மண்டபங்களிருந்தன. அவற்றுள் ஒன்றில் பிரவேசித்தான் சக்திதேவன். அங்குப்படுக்கையில் துணியால்தேகமுழுதும்போர்த்துக்கொண்டு படுத்திருக்கும் ஒரு மனிதனைக்கண்டான். அவன் யாரென்றறியவெண்ணி அவன்மேல்போர்த்திருந்தவஸ்திரத்தை யெடுக்கப்போனான். அக்கணமே அங்கு அம்மனிதனுக்கருகே பரோபகாரி ராஜனுடைய குமாரியாகிய கனகரேகை சவமாய்க் கிடக்கக் கண்டான். உடனே என்ன ஆச்சரியமிதுவென வியந்தான். “இது



எனக்கேற்பட்டதொரு பிரமம்போலும்! நான் எந்த மாதின்பொருட்டு யாத்திரையாக வந்தேனோ அவளே இங்குச் சவமாய்க்கிடக்கின்றாளே! உயிரிழந்த இம்மாது அத்தேயத்தில் மாத்திரம் உயிருடனிருப்பாளோ? ஆகா! இவளுடைய காந்தியோ வாடாமலிருக்கின்றது. இவ்வாறு தெய்வம் செய்யும் இந்திரஜாலத்தின் காரணம் புலப்படவில்லை. ஏதோ விசேஷ மிருக்கவேண்டும். இன்னும் இங்கிருக்கும் வேறிரண்டு மண்டபங்களிலும் பிரவேசித்துப் பார்க்கின்றேன்” என்று கருதி அவற்றுள் பிரவேசித்துப் பார்க்கையில் மண்டபத்திற் கொருவராக இரண்டு கன்னிகைகள் கனகரேகைபோல் படுத்திருக்கக்கண்டான் சக்திதேவன். பின்னர்என்னே விந்தையிது! யார் செய்யும் ஜாலமிதுவென வியந்து அங்கிருந்து வெளிப்பட்டு ஓரிடத்துட்கார்ந்தான். தான் உட்கார்ந்திருந்த இடத்திற்குச் சிறிது தூரத்தில் ஒரு அழகான வாவியையும் அதன் கரைமீது இரத்தினமயமான ஜேணமமைக்கப்பெற்ற ஒரு குதிரை நிற்கவும் கண்டான். உடனே அங்கிருந்து எழுந்து அக்குதிரையினருகே சென்றான். அங்கு நின்று சுற்றுமுற்றும் நோக்கினான். யாரையுங் காணவில்லை. உடனே அதன்மீது ஏறியுட்கார விரும்பி அதனருகே சென்றான். அக்குதிரை யவனைக் காலா லுதைத்து அந்த வாவியில் தள்ளிவிட்டது. அங்குமூழ்கிய சக்திதேவன் சிறிது நேரத்திற்கெல்லாம் தனக்குரிய வர்த்தமானமென்னு நகரத்திலுள்ள வாவியிலிருந்து பரபரப்புடன் வெளிப்பட்டான். இப்போது சக்திதேவன், சந்திரப்பிரபையைவிட்டுப் பிரிந்து நீரிலிருப்பதால், சந்திரப்பிரபையின்றிவாடும் ஆம்பல் மலரை ஒத்தவனானான். “வர்த்தமானபுரமெங்கே! வித்தியாபுரி யெங்கே! அந்தோ! ஆச்சரியமான மாயையின் ஆடம்பரத்தை யென்னென்று கூறுவது! என்னே ஆச்சரியமிது! கஷ்டம்! எவனோ மோசஞ் செய்தான் என்னை! பாக்கிய மிழந்தவனானேன். இனி நடக்கப்போவதைக் கண்டதார்?” என்று யோசித்தவாறே கரையேறித் தன் வீடுசென்று தன் தந்தைக் கெல்லாவிஷயமும் கூறினன். அது கேட்ட அவன் தந்தையும் மற்றும் அவன் உறவினரும் சக்திதேவனைக் கொண்டாடினர். மறுநாள் வீட்டிலிருந்துவெளிப்புறப்பட்டு நகரத்திற்குட் சென்றான். அங்கே, “வேதியனோ, க்ஷத்திரியனோவேறுயாரேனும் கனகபுரியைக்கண்டதுண்டாயின் அவன் உண்மையைக் கூறவேண்டும்; அவனுக்கு யுவராஜ்யமும் இராஜபுத்திரியும்கொடுக்கப்படும்” என்றுபறையறையப்படுவதைக்

கேட்டான். உடனே சக்திதேவன் அவர்களிடஞ் சென்று "நான் அந்தக் கனகபுரியைக் கண்டேன்" என்று கூறினன். அவர்கள் அப்பொழுதே சக்திதேவனை அரசனிடம் அழைத்துச் சென்று செய்திகூறினர். அரசன் சக்திதேவனை நோக்கியதும் "இவன் முன் பொய்பேசினவனன்றோ" என்று கேட்டான். சக்திதேவன், "நான்பொய்பேசவில்லை. நான்உண்மையில் கனகபுரியைக் கண்டேன். நான் சொல்வது பொய்யாகப் போமாயின் என் தலையை வெட்ட ஆக்ஞாபிக்கலாம்" என்று கூறினன். அரசன், உடனே தாதியர்களைக்கொண்டு தன் பெண் கனகரேகையை அங்கு வரவழைத்தான். கனகரேகை சக்திதேவனைக் கண்டதும் "பிதாவே! இவன் முன்பொய்பேசினவனல்லவா? இப்பொழுதும் இவன் கூறுவது பொய்யாகத்தானிருக்கும்" என்றாள். சக்திதேவன் "இராஜபுத்திரியே! நான் சொல்வது பொய்யோ மெய்யோ அதைப்பற்றிப் பின்னர் யோசிப்போம். நான் கண்டேனொரு ஆச்சரியம்! அதை உங்களுக்குக்கூற விரும்புகின்றேன். நான் கனகபுரி சென்றேன். அங்கே நீயொரு திவ்ய மண்டபத்தின்கண் சவமாய்க்கிடக்கக்கண்டேன். இப்போது நீ இங்கேஉயிருடனிருக்கின்றாய்; இஃதென்னமாயம்!" என்றான். இதைக்கேட்டதும் கனகரேகை, தந்தையை நோக்கி, "இந்த மகாத்மாதான் கனகபுரியைக் கண்டவர். இஃதுண்மை தான். இவர் தான் எனக்கு மணவாளனாகப்போகின்றார். என் மூன்று சகோதரிகளையும் இவரே மணஞ்செய்து கொள்ளப்போகின்றனர். அந்நகரத்திருந்து இவரே வித்யாதர இராஜ்யத்தைப் பரிபாலிக்கப்போகின்றார். நான் என்னுடைய தேகத்தையும் அந்நகரத்தையுமடைய வேண்டும். ஒரு முனிவரின் சாபத்தால் உமது கிருகத்தில் நான் பெண்ணாகப் பிறந்தேன். அவ்வாறு சாபங்கொடுத்த முனிவர்எனக்குச் சாபவிமோசனங் கூறத்தொடங்கி, 'மானிடனொருவன் கனகபுரியில் உன் தேகத்தைப்பார்த்து உண்மையை வெளியிடுங் காலத்துனக்குச் சாபவிமோசன முண்டாம், அவனே உனக்கு நாயகனாகவுமாவான்' என்றநுக்கிரகித்தார். இப்பொழுது எனக்குப் பூர்வஞான முண்டு. பிதாவே! இப்போது நான் என் காரியஸித்தியின்பொருட்டு எனக்குரிய வித்தியாதர நகரஞ் செல்கின்றேன்" என்று கூறித் தன் சரீரத்தை விட்டு மறைந்தாள். உடனே அரண்மனை யெங்கும் பெருங்கூக்குரல் உண்டாயிற்று.



இப்போது சக்திதேவன் ஐயோ! நாம் தவறிவிட்டோமே என்று வருத்தமுற்று, தன்னை நிந்தித்துக்கொண்டு அரண்மனையிலிருந்து வெளிப்பட்டு ஓரிடத்திலிருந்து "நானேன் கவலைப்படவேண்டும், கனகரேகை தன் விருப்பம் நிறைவேறப்போகின்றதென்று கூறினளன்றோ? ஆயினும் முன் சென்றவழியே அந்தக் கனகபுரிக்குச் செல்கின்றேன். தெய்வம் ஏற்ற உபாயங்களைத் தவறாமற் காட்டும்" என்று கருதி அன்றே அவ்வர்த்தமான நகரத்திலிருந்து புறப்பட்டான். முயற்சியுள்ள தீரர்கள் காரியசித்தி பெறாது திரும்புவதுண்டோ? சக்திதேவன் வெகுநாட் பிரயாணத்திற்கப்பால், முன் சென்ற மணற்குன்றிற்குச் சென்று அங்குச் சமுத்திரதத்தன் என்னும் வர்த்தகனைச் சந்தித்தான். ஆகா! முன் கப்பலுடைந்து கடலில் மூழ்கிய சமுத்திரதத்தனென்பவனிவனன்றோ? இவன் எவ்வாறு பிழைத்துவந்தான்! என்றெண்ணி அவனருகே சென்றான். சமுத்திரதத்தன் சக்திதேவனையின்னானென்று தெரிந்துகொண்டு மகிழ்வுற்று ஆலிங்கனஞ் செய்து நல்வரவு கூறித் தன் வீட்டிற் கழைத்துச் சென்று "கடலுக்கிரையான நீ எவ்வாறு தப்பிப்பிழைத்தனை" என்று கேட்டான். சக்திதேவன், தானொரு மீனால் விழுங்கப்பட்டு உத்கலத்தீவு சென்றது வரையில் தெரிவித்துப் பின் அவனை நோக்கி, "நீ யெவ்வாறு பிழைத்தனை" என்று வினவினன். "வேதியனே! கடலில் விழுந்த நாள்முதல் மூன்றுநாள் வரையில் ஒரு பலகையைப் பிடித்துக்கொண்டு கடலிலேயே மிதந்து கொண்டிருந்தேன். நான்காவது நாள் அவ்வழியே ஒருகப்பல்வந்தது. அதைக் கண்டு "என்னைக் காப்பாற்றவேண்டும்" என்று சைகை செய்தேன். அதனைக்கண்டு அக்கப்பலி லிருந்தவர்கள் என்னிடம் கப்பலைக் கொண்டுவந்து அதில் என்னை யேற்றிக்கொண்டார்கள். அந்தக் கப்பலில் என் தந்தை வந்திருக்கக்கண்டேன். என் தந்தை கப்பற்பிரயாணமாகப் புறப்பட்டு வெகுநாட் சென்றமையின், அப்பொழுது என்னைக் கண்டதும் மகிழ்ச்சியும் வருத்தமுமடைந்து கண்ணீருகுத்து என்னைப் பார்த்து "நீ இங்குவரக் காரணமென்ன?" என்று கேட்டார்? நான் "தாங்கள் சென்று வெகுகாலமாயும் வாராமையால், தர்மம் என்னும் வியாபாரத்தில் முயன்று கப்பலேறி வேறு தீவுக்குப் போய்க் கொண்டிருக்கையில் கப்பலுடைந்து கடலில் விழுந்தேன். தங்கள் கப்பலால் உயிர் தப்பினேன்" என்று கூறினேன். என் தந்தை "நீயேன் அவ்வாறு

கடலில் பிரயாணஞ் செய்யவேண்டும். நமக்குப் பொருள் ஏராளமாயிருக்கும்போது ஏன் இவ்வாறு கஷ்டப்படவேண்டும்? இதோ இக்கப்பலிலும் ஏராளமாகத் திரவியங் கொண்டுவந்திருக்கின்றேன்" என்று கூறி என்னை அக்கப்பலிலேயே வீட்டிற்கழைத்துவந்தார்" என்று கூறினான். சக்திதேவன் "எல்லாம் இறைவன் செயல்" என்று கூறி மகிழ்வுற்று அன்று முழுதும் அவனோடிருந்து சிரமபரிகாரஞ் செய்துகொண்டு மறுநாள் "நான் உத்தளத்தீவு போகவேண்டும். அதற்கென்ன யோசனை" யென்று கேட்டான். வர்த்தகன், "நீ கேட்டவேளை நல்லவேளை. இன்று இங்கிருந்து என்னைச் சார்ந்த சிலர் அங்குச் செல்கின்றனர். அவர்களோடு நீயும் போகலாம்" என்று கூறி அன்று உத்தளத்தீவுக்குப் புறப்பட்டவர்களோடு அவனைப் பிரயாணப்படுத்தியனுப்பினான். பின் சக்திதேவன் சரியானகாலத்தில் உத்தளத் தீவு போய்ச் சேர்ந்தான். அங்கே தன் பந்துவும் மகாத்மாவுமாகிய விஷ்ணுதத்தனிடஞ் செல்லக் கருதி ஒரு கடைவீதி வழியே போய்க்கொண்டிருந்தான். அப்பொழுது தாசராஜனாகிய ஸத்யவிரதனுடைய மைந்தர்கள் இந்தச் சக்திதேவனைச் சந்தித்து அவனை இன்னானென்று தெரிந்துகொண்டு "வேதியரே! தாங்கள் என் தந்தையோடு கனகபுரிக்குச் சென்றீரல்லவா? தாங்கள்மாத்திரம் தனியேவந்திருக்கிறீர்களே; எமது தந்தையெங்கே" என்று கேட்டனர். சக்திதேவன் "மைந்தர்காள்! நான்தான் உமது தந்தையுடன் கனகபுரி சென்ற அந்தணன். உமது தந்தை கடலில் கப்பலோடு சுழலிவிழுக்கப்பட்டு நீரிலாழ்ந்போயினர்" என்று கூறி அவர்களோடு விசனமடைந்தான். அவர்கள் இவ்வசனங் கேட்டதும் அடங்காக்கோபங்கொண்டு ஆங்கோரிடத்தில் வேலை செய்துகொண்டிருந்த தங்கள் வேலையாட்களை விளித்துத் "துராத்மாவாகிய இவ்வந்தணனைக் கட்டியடியுங்கள். இவனால் நமது தந்தை யிறந்தனர். ஒரு கப்பலிற் சென்ற இருவரில் ஒருவரிருக்க ஒருவரிறப்பதற்கு நியாயமென்ன? இந்தப் பாதகன் ஏதோ கேடு செய்திருக்கின்றான்; அதிலையமேயில்லை. ஆகையால் இவனைச் சண்டிதேவியின் ஆலயத்திற்குக் கொண்டுபோய் நாளைய தினம் பலியிட்டு விடுங்கள்" என்று உத்தரவளித்துச் சென்றனர்.

அவர்கள் உத்தாவின்படியே வேலைக்காரர்கள் சக்திதேவனைக்கட்டிப்பிடித் திழுத்துக்கொண்டு சண்டிகையின் திருக்கோ



யிலுக்குக் கொண்டுபோய் துவஜஸ்தம்பத்தில் கட்டிவிட்டு மறுநாள் பலியிடத் தீர்மானஞ்செய்து சென்றனர்.

அந்தச் சண்டிகையின் ஆலயம் அனேக ஜீவன்களைவிழுங்கியதொரு பெரிய யமனுடைய முகம்போன்றது. அங்குத் துவஜஸ்தம்பத்தில் கட்டுண்டிருக்கும் சக்திதேவன் தன் பிராணன்போய்விடுமே யென்னும் பயத்தினால் ஏதேதோ யோசனை செய்துகொண்டு அன்று பகற்பொழுதைக் கழித்து இராத்திரியில், தேவியைத் தியானித்து, "வரமளிக்கும் மகாகாளியே! மகிமைபெற்ற மகாதேவியே! பருத்த அசுரனுடைய கழுத்தினின்றும் பெருகிய இரத்தப் பிரவாஹத்தையும் இளஞ்சூரியனையும்போன்ற உருவத்துடன் நீ உலகத்தை ரக்ஷிக்கின்றாய்; அருட்பெருஞ் சோதியே! என்னை நீதான் காப்பாற்றவேண்டும். நான் அகாரணமாக எதிரிகளிடம் இச்சமயம் அகப்பட்டுக்கொண்டிருக்கின்றேன். விரும்பிய ஒருவரை யடையக் கருதி வெகுதூர மிருந்துவந்தவனாகின்றேன். என்னை, பரமகருணாநிதியாகிய நீதான் காப்பாற்றவேண்டும். வேறுதிக்கில்லை. துணைபுரிவாரில்லை. இரங்குவாரில்லை. அம்மணீ! நீதான் ஏழையைக் காக்கவேண்டும்—என்று அம்மனைத் துதித்துக்கொண்டே நித்திரை போய்விட்டான்.

சக்தி தேவன் கண்ணயர்ந்த சிறிது நேரத்திற்கெல்லாம் அவன் கனவில், தேவ ஆகிருதியுடன் கூடிய வொரு தேவதை தோன்றி, "சக்திதேவ! நீ பயப்படவேண்டாம். உனக்கு ஒருகெடுதி நேரிடாது. வேடராஜனுடைய குமாரத்தி பிந்துமதியென்பவள் நாளையதினம் காலையில் இங்கேவந்து உன்னைக்கண்டு மோகமுற்று உன்னை மணஞ்செய்துகொள்ள விரும்புவாள். நீ அவளுக்கு "உன்னிஷ்டப்படி செய்கின்றேன்" என்று வாக்குக்கொடு. பின் அப்பெண்மணியே உன்னை விடுவிப்பாள். அவள் வேட ஸ்திரீயன்று. தேவஸ்திரீ. ஒரு சாபசம்பந்தத்தால்இவ்வாறாயிருப்பவள்" என்று சொல்லிமறைந்தாள். உடனே சக்திதேவன் விழித்துக்கொண்டான். தன்கனவை யெண்ணிப் பார்த்து நல்லகாலமிருக்கின்றது நமக்கென்றுகருதிச்சந்தோஷித்தான். பின்னர்ச் சிறிதுநேரத்திற்கெல்லாம் பொழுதுபுலர்ந்தது. அமுதப்ரவாகம் எதிர்ப்பட்டதென்றெண்ணுமாறு தேவிகூறிய வேடப் பெண் அங்குத்தோன்றி சக்திதேவனைக் கண்டு, "நான் உம்மை இந்தச் சங்கடத்திலிருந்து விடுவிக்கின்றேன். என் விருப்பம்போல் நீர் செய்யவேண்

டும். என் சகோதரர்களுக்குப் பிரியமான சில வரன்களை நான் வேண்டாமென்று கூறித் தள்ளிவிட்டேன். இப்போது உம்மைக் கண்ட எனக்கு உம்மிடம் அன்புண்டாகின்றது. ஆகையால் தாங்கள் என்னை யடையவேண்டும்" என்று பிரார்த்தித்துக் கொண்டாள்.

இவ்வாறு பிந்துமதி என்னும் அப்பெண்கூறவும் சக்திதேவன் தேவி கனவிற்கூறியதை யெண்ணி மகிழ்ந்து அவ்வாறே செய்கின்றேன் என்று ஒப்புக்கொண்டான். பின்னர் அந்தப் பெண் தன் சகோதரர்களிடம் தன் விருப்பத்தைத் தெரிவித்து சக்திதேவனை விடுவித்தாள். சக்திதேவன் தேவிதனக்கிட்ட கட்டளையை மறுக்கக்கூடா தென்றெண்ணி அப்பெண்ணை மணந்து அங்கு அவளோடு சிலகாலம் சுகமாக வாழ்ந்து வந்தான்.

இவ்வாறிருக்கையில் ஒருநாள் இருவரும் தங்கள் வீட்டின் மேல்மாடி மீது உலாத்திக்கொண்டிருந்தனர். அப்பொழுது அத்தெரு வழியே ஒரு சண்டாளன் பசுவின் இறைச்சியை யெடுத்துக்கொண்டு சென்றான். அவனைச் சக்திதேவன் கண்டதும், "பெண்மணீ! இந்தப் பசு மூவுலகத்தவராலும் நமஸ்கரிக்கத்தக்கது. அவ்வாறான பெருமை வாய்ந்த பசுவைக்கொன்று இதோ இங்குத் தெருவில் செல்லுகிறானே இவன் அதன் இறைச்சியைப் புசிக்க எடுத்துக்கொண்டு போகின்றான். இவன் மகா பாவி யென்பதிலையமில்லை" என்றான். பிந்துமதி "நாதா! இந்தக் காதகத்தால் மிகுந்த பாபமுண்டென்பதை நானறிவேன். நான் முன் பசுக்களுக்குச் செய்த சிறிய அபராதம் காரணமாக இங்கு வேடர் குலவனிதையாயிருக்கின்றேன். இதற்கேதேனும் பிராயச்சித்தமிருக்கின்றதா? உண்டாயின், தெரிவிப்பீர்களாக; நான் அதனைச் செய்ய விரும்புகின்றேன்" என்றாள். சக்திதேவன், "ஆச்சரியம்! நீ யார்? உனது வரலாற்றை முதலிற் கூறினால், பின்னர் யான் பிராயச்சித்தத்தைக் கூறுகின்றேன்" என்றான். பிந்துமதி "நாதா! அஃது இரகசியமானது. அது தெரிவிக்கக் கூடாதது" என்றாள். சக்திதேவன் "நீ கூறினாலன்றி என்மனந் திருப்திபடையாது அவசியம் தெரிவிக்கவேண்டும்" என்று கட்டாயப்படுத்திக் கேட்டான். பிந்து மதி "நாதா நான் தெரிவிக்கின்றேன். தாங்களதை மிகவும் இரகசியமாகக் காப்பாற்றுவதாக வாக்குத்தரவேண்டும்" என்று கேட்டாள். சக்திதேவன்



"பிராண நாயகியே! அவ்வாறே செய்கின்றேன்" என்றான். பிந்துமதி "நாதா! சந்தோஷம்! இத்தீவில் உமக்கு இன்னொரு மனைவி ஏற்படப்போகின்றாள். அவள் சீக்கிரமாகக் கர்ப்பந்தரிப்பாள். பின் எட்டாவது மாதத்தில் அவளுடைய கர்ப்பத்தைப் பிளந்து நீர் கர்ப்பத்தை வெளிப்படுத்தவேண்டும். இவ்விஷயத்தில் நீர் தயை காட்டக்கூடாது" என்றனள். சக்திவேன் "பிந்துமதி! என்ன இவ்வாறான கொடிய செய்கை செய்யவேண்டுமென்று சிறிதுங் கூசாமற் கூறுகின்றாய்? என்ன ஆச்சரியமிது" என்று கேட்டான். பிந்துமதி "பிராணேசா! இதை நீர் அலட்சியஞ் செய்யக்கூடாது. ஒருகாரணத்தை யுத்தேசித்துச் சொன்னேன். மறுக்கவே கூடாது. எனக்கு வேட ஜன்மம் வந்த வரலாறு கேளுங்கள். நான் முன்ஜன்மத்தில் ஒரு வித்தியாதர ஸ்திரீயாகவிருந்தேன். அங்கு ஏற்பட்ட சாபத்தால் இந்தப் புவியில் மானிட ஜன்மமெடுக்க நேரிட்டது. நான் வித்யாதர ஸ்திரீயாக இருந்த காலத்தில் தந்தியைப் பற்களால் கடித்து வீணையில் பொருத்தினேன். அத்தந்தி பசுவின் நரம்பன்றோ? அது என் வாயால் தீண்டப்பட்டமையால் இந்தக்கதி யெனக்குண்டாயிற்று. அதன் இறைச்சியைப் புசிப்பவன் கதி இனிக் கேட்கவேண்டுமோ?— என்று இவ்வாறு பேசிக்கொண்டிருக்குந் தருணத்தில் அவளுடைய சகோதரனொருவன் அங்கு வந்து சக்திவேனைப் பார்த்து, "தேவ! சீக்கிரமாக எழுந்திருக்கவேண்டும். ஒரு பெரிய பன்றி அநேக ஜனங்களைக் கொன்றுவிட்டு இங்கேயும் எங்கிருந்தோ ஓடி வருகின்றது. அதைக் கொல்லவேண்டும்." என்றான். உடனே சக்திதேவன் பரபரப்புடன் எழுந்து, சக்தி யென்னுமொரு ஆயுதத்தை யெடுத்துக்கொண்டு அதை யடித்தான். அப்பன்றி இங்குமங்குமாக வளைந்து வளைந்து வெகு தூரமோடிக் கடைசியில் ஆங்கிருந்த ஒரு பிலத்துவாரத்துட் புகுந்தோடிற்று. சக்திதேவனும் தைரியமாய் அத்துவாரத்திற்குள் பிரவேசித்து அதனைத் துரத்திச்சென்றான். அங்குச்சென்ற பன்றி இவன் கண்ணுக்குத் தென்படாமல் எங்கேயோ மறைந்து விட்டது. சக்திதேவன் அத்துவாரத்துள் நாலா பக்கமுமலைந்து பார்க்கையில் ஒரு நந்தவனத்தைக்கண்டு அதற்குள் பிரவேசித்தான். ஆங்கோர் அழகான பூஞ்சோலையின் மத்தியில் ஒரு பெண்மணி யிருக்கக் கண்டான். அவளுடைய அற்புதமான ஆகிருதியைக்கண்டு அதியாச்சரியமடைந்து நின்றான். அப்பெண், வனதேவதை பிரத்தி

யட்சமாகி வருவதுபோல் சக்திதேவனை நோக்கிவந்தாள். சக்திதேவன், "ஏ சுந்தரி! ஏன் அஞ்சுகின்றாய்? நீ யார்?" என்று கேட்டான். தென்றிசை யரசனாகிய சண்டவிக்ரமனுடைய புதல்வி நான். நான் கன்னிகை. பிந்துரேகையென்பது என்நாமம். ஜ்வலிக்கும் நேத்திரமுடைய ஒரு அரக்கன் என்னை என் தந்தையின் வீட்டிலிருந்து இங்குக்கொண்டு வந்து சிறைப்படுத்தியிருக்கின்றான். அவ்வசுரன் இறைச்சியை விரும்பிப் பன்றியுருக்கொண்டு வெளியே சென்றிருந்தான். யாரோ ஒரு வீரன் சக்தி யென்னும் ஆயுதங்கொண்டு அப்பன்றியை அடித்தனன். அங்கு அடியுண்ட அவ்வரக்கன் இப்பிலத்துள் நுழைந்து இங்கேமரணமடைந்தான். அவனால் யாதொரு தீமையும் பெறாத நான் இந்த நந்தவனத்திற்கு இப்போது தான் ஓடி வந்தேன்" என்றாள். சக்திதேவன், "இராஜகுமாரி, நீ அஞ்சவேண்டாம். அவ்வரக்கனை சக்தியாயுதத்தால் கொன்றவன் நானே. நீ சிறிதும் கவலைப்படவேண்டாம்" என்றான். பிந்துரேகை, அங்ஙனமாயின் உமது வரலாற்றை யறிய விரும்புகின்றேன்" என்றனள். சக்திதேவன், "நான் ஒரு வேதியன். என் பெயர் சக்திதேவன்" என்றான். பிந்துரேகை, தாங்கள்தான் என்னை மணந்து என்னைக் காப்பாற்றவேண்டும். நான் வேறு திக்கில்லாதவளா யிருக்கின்றேன் இச்சமயம். தாங்களே என் குறைமுடிக்க வந்த குலதெய்வம்! ஏழைக்கிரங்கி ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று பிரார்த்தித்தாள். சக்திதேவன் "அணங்கே! அவ்வாறே செய்கின்றேன். நீசிறிதும் பயப்படவேண்டாம்" என்று கூறி அவளை யழைத்துக்கொண்டு அப்பிலத்துவாரத்திலிருந்து வெளிப்பட்டுத் தன்வீடுவந்து தன் மனைவி பிந்துமதியினிடம் நடந்ததைத் தெரிவித்தான். அப்பால் பிந்துமதியின் அநுமதிப்படி அந்தப் பிந்துரேகையைமணஞ் செய்துகொண்டு இரண்டு மனைவிமாருடன் சுகமாக இருந்துவந்தான் சக்திதேவன்.

இவ்வாறிருக்கையில் பிந்துரேகை கர்ப்பந்தரித்து எட்டாவது மாதமடைந்தாள். அப்பொழுது பிந்துமதிசக்திதேவனிடம் சென்று நாதா! தாங்கள் முன்னொரு பிரதிக்ஞை செய்திருக்கின்றீர்கள். அது நினைவிலிருக்கின்றதா? அதன்பிரகாரம் உமது இரண்டாவது மனைவியின் கர்ப்பத்தை அவள் வயிற்றைக் கிழித்து வெளிப்படுத்தவேண்டிய காலமிதுவே யாகுமன்றோ? ஆகையால்



உமது பிரதிக்ஞை வீணாகாதவாறு தயையின்றி இக்காரியத்தைச் செய்யும் என்றாள்" சக்திதேவன், நட்பினாலும் கருணையாலும் வியாகுலமடைந்து, பிரதிக்ஞைக்குப் பரதந்திரனாகி ஒரு கணப்பொழுது எதுவும் பதிற்சொல்லாமலிருந்தான். பின்னர் மனவருத்தத்துடன் பிரதிக்ஞையை நிறைவேற்றுகின்றேன் என்று கூறிப் பிந்துரேகையினிடஞ் சென்று நின்றான். பிந்துரேகை தன் நாயகனைக் கண்டதும் வந்தனஞ் செய்துபசரித்து, "நாதா! தாங்கள் மனவருத்தத்துடனிருக்கிறீர்களல்லவா? அதற்குக் காரணம் யானறிவேன். பிந்துமதி, என்வயிற்றைப் பிளந்து கர்ப்பத்தை வெளிப்படுத்துவதற்காக உம்மையனுப்பி யிருக்கின்றாள். தாங்கள் தடையின்றி அவ்வாறே செய்யவேண்டும். தயைகாட்டக்கூடாது. அதிற் காரியமிருக்கின்றது. இதை யநுசரித்த சரிதமொன்றிருக்கின்றது; அதனைக்கேளுங்கள் என்று கூறுகிறாள்.

கம்புகம் என்னுமொரு நகரத்தில் ஹரிதத்தன்என்னுமொரு வேதியனிருந்தான். அவனுக்கு ஏராளமான பொருளிருந்தது. தேவதத்தன் என்னும் ஒரு புதல்வன் ஒருவனிருந்தான் அவனுக்கு. அவன் சிறுவயது முதற்கொண்டு சூதாட்டத்தில் மிகுதியும் தன் காலத்தைக் கழித்துவந்தான். அவன் ஒரு சமயம் பந்தயத்தில் தன் வஸ்திர முதலியவற்றைப் பறிகொடுத்துத் தன் தந்தையின் வீட்டில் நுழைவதற் கஞ்சினவனாகத் திரிந்தான். அப்பொழுது அவன் பாழடைந்த ஓர் ஆலயத்தைக்கண்டு அதற்குள் பிரவேசித்தான். அங்கு ஜாலபாதர் என்னும் வ்ருதி யொருவர் தனியே யுட்கார்ந்து ஜபஞ்செய்துகொண்டிருக்கக் கண்டான். தேவதத்தன் உடனே அவரிடஞ் சென்று வந்தனம் புரிந்து நின்றான். ஜாலபாதர் என்னும் அம்முனிவர் தன் மௌனத்தை விட்டுத் தேவதத்தனுக்கு நல்வரவுகூறி உபசரித்தனர். தேவதத்தன் ஒரு க்ஷணப்பொழுது எதுவும் பேசாமலிருந்தான். ஜாலபாதர் "தேவதத்த! நீ யேன் கவலைப்படுகின்றாய்?" என்று வினவினர். தேவதத்தன் "சுவாமி! என்று வந்தனஞ்செய்து நின்று, தான் சூதாடிப் பொருளையிழந்ததைக் கூறி விசனப்பட்டான். ஜாலபாதர் சூதாடுகிறவனுக்கு எவ்வளவு பொருளிருந்தாலும் போதாது. நீ நல்ல நிலைமையை யடைய விரும்புவாயாயின் நான் சொல்லுகிறபடி செய்யவேண்டும். நீ வித்தியாதரத் தன்மையடைய முயற்சித்து அதையடைய

வேண்டும். அதற்கேற்ற சாதகங்களை நான் உனக்குக் கூறுகின்றேன். அந்தச்சாதகங்களை நீ என்னுடனிருந்து செய்யவேண்டிய தவசியம்! என்னுத்தரவைப் பரிபாலிக்கவேண்டும். தவறக்கூடாது," என்றார். தேவதத்தன், "கட்டளைப்படி நடக்கின்றேன்" என்று ஒப்புக்கொண்டான். ஜாலபாதர், "நல்லது; என்னுடனிருந்து வா" என, அவ்வாறே தேவதத்தன் அவரருகேயிருந்து அவருத்தரவுப்படியே எதையும் செய்து வந்தான்.

ஒரு நாள் ஜாலபாதர், மயானத்திற்குச் சென்று ஆங்கோர் ஆலமரத்தடியில் இரவில் பூஜை யேற்படுத்தி அதில் அன்ன முதலியன நிவேதித்துத் திசைகளுக்குப் பலிகொடுத்து "வேதியனே! நீ யிவ்வாறு நாடோறும் பூஜை புரிதல் வேண்டும். ஓ வித்யுத் ப்ரபே! இந்த என் பூஜையைக் கிரகித்துக் கொள்ளென்று கூறவேண்டும். பின்னர் நமது காரியம் சித்தியாவது திண்ணம்" என்று கூறினர். தேவதத்தன், "அவ்வாறே தவறாது செய்கின்றேன் சுவாமி" என்று கூற இருவரும் வீடு சென்றனர்.

மறு நாள் முதற்கொண்டு தேவதத்தன் இடுகாடு சென்று தன் ஆசான் விதித்தபடி பூஜை புரிந்து வந்தான். இங்ஙனம் பூஜை தவறாதியற்றி வருகையில் ஒருநாள் அவணிருந்த ஒரு மரத்திலிருந்து ஒருதேவஸ்திரி திடீரென்று எதிர்ப்பட்டு "தேவதத்த! புறப்படு எமது யஜமானி உம்மை அழைத்துவரச் சொன்னாள்" என்று கூறி அவனைத் தான் எந்த மரத்திலிருந்து வெளிப் பட்டாளோ அம்மரத்திற் காணப்பட்ட ஒரு இடைவெளி வழியே யழைத்துச் சென்றாள். அங்குச் சென்ற தேவதத்தன், ஒரு ரத்தின மயமான வீட்டைக் கண்டு அதற்குள் தைரியமாய்ப் பிரவேசித்தான். ஆங்கோர் அறையில் ஒரு படுக்கையில் ஒருவனிதை சயனித்துக் கொண்டிருக்கக் கண்டான். அப்பொழுது அவன் நமதுகாரியசித்தி இங்குருவெடுத்துப் பிரத்தியட்சமா யிருக்கின்றதென்று கருதி மகிழ்ந்து, அவளருகே சென்றான். அம்மாது அதிதியை நல்வரவு கூறி விசாரிப்பது போல் தன் கால் தண்டை, சிலம்புகள் ஒலியிடச் சரேலென்றெழுந்து, தன் படுக்கையில் அவனை உட்கார வைத்துக் கொண்டாள். தேவதத்தன் உட்கார்ந்ததும் அம்மாது அவனை, நோக்கி, "மகா பாக்யசாலியே! யக்ஷராஜனாகிய ரத்னவரசனுடைய குமாரி நான்.



என் பெயர் வித்யுத்பிரபை. விரதசீலராகிய இந்த ஜாலபாதர் என்னையே பூஜித்தார். நான் அவருடைய காரியம் சித்திபெறச் செய்பவள். தாங்கள் என் பிராணனுக்குப் பிரபுவாகியவர். ஆகையால் தங்களிடம் அன்பு பாராட்டும் என்னை மணஞ்செய்து கொள்ளவேண்டும்" என்றாள். தேவதத்தன் அவ்வாறே செய்துகொள்ளுகின்றேன் என்று கூறி அப்பெண்மணியை மணஞ்செய்து கொண்டு அங்குச் சிலநாளிருந்து சுகமநுபவித்து வந்தான். அப்பால் அந்த வித்யுத்பிரபை கர்ப்பந் தரித்தாள். தேவதத்தனுக்கு அப்பொழுது ஜாலபாதரிடம் போகவேண்டுமென்னும் எண்ணமுண்டாயிற்று; அவனவ்வனிதையிடம் விடைபெற்றுக் கொண்டு ஜாலபாதரிடம் வந்து கைகட்டி வாய்பொத்தி நின்று நடந்ததைக் கூறினான். ஜாலபாதர் கேட்டு மகிழ்வுற்று "தேவதத்த! நல்ல காரியஞ் செய்தாய்; ஆயினும் நீ பொரு காரியம் செய்யவேண்டும்; நீ முன் எனக்குச் செய்திருந்த பிரதிக்ஞைப்படி என் வார்த்தையை மீறி நடக்கக்கூடாதல்லவா? ஆகையால் இக்கணமே வித்யுத் பிரபையிடஞ் சென்று அவள் வயிற்றைப் பிளந்து கர்ப்பத்தை யிழுத்து எடுத்துக்கொண்டு என்னிடம் வந்து சேர்வாய்" என்றுரைத்தனர். தேவதத்தன் மிகுந்த துக்கத்துடன் தன் இஷ்டநாயகியிடஞ் சென்று முகவாட்டத்துடன் நின்றான். வித்யுத்பிரபை, "நாதா! நீர் இப்போது துக்கத்துடன் வந்திருக்கிறீர். அந்தத் துக்கத்திற்குக் காரணத்தை யானறிவேன். என் வயிற்றைக் கிழித்துக் கர்ப்பத்தை யிழுத்துவரும்படி ஜாலபாதர் உத்தரவுசெய்தனுப்பியிருக்கின்றாரல்லவா? ஆகையால்அவர்விருப்பத்தின் பிரகாரம் என்வயிற்றைப் பிளந்து கர்ப்பத்தை யிழுத்துக்கொண்டு போகலாம். சிறிதுந் தயைகாட்ட வேண்டாம். என்று கூறினள். தேவதத்தன் அக்காரியஞ் செய்ய அஞ்சினன். வித்யுத்பிரபை, தானே தன் வயிற்றைபிளந்து கர்ப்பத்தை வெளிப்படுத்தி தேவதத்தன் முன்னேவைத்து, "ஆர்யபுத்ர! இது தான் வித்யாதரத் தன்மையை யடையக் காரணமாயிருப்பது; நீர் இதை யெடுத்துக்கொண்டு செல்லலாம். நான் முன் வித்தியாதர ஸ்திரீயாகவிருந்து சாபத்தால் யக்ஷஸ்திரீயாகப் பிறந்தேன். இதுவே என் சாபத்திற்கு முடிவானகாலம். பூர்வஜன்ம நினைவு எனக்குண்டு. நான் இப்பொழுது என்னிருப்பிடஞ் செல்லுகின்றேன். நம்மிருவருக்கும் மீண்டும் சேர்க்கை அங்கேதான் ஏ

படும்." என்று கூறி உடனே மறைந்துவிட்டாள். தேவதத்தன் வருத்தத்துடன் அந்தக் கர்ப்பத்தை யெடுத்துக்கொண்டு ஜாலபாதரிடம் வந்து அதனை அவர்முன்னிலையில் வைத்தான். சாதுக்கள் தங்களுக்குக் கிடைத்தற்கரியவஸ்து கிடைப்பினும் அதனைப் புசித்துத் தங்கள்வயிற்றை நிரப்பிக்கொள்ள மாட்டார்களன்றோ?

ஜாலபாதர் தம்மிடம் கொண்டு வந்து வைத்த அந்தக் கர்ப்பத்தைச் சமைத்துத் தம் முன்னிலையில் வைத்துவிட்டுப் பைரவர் பூஜைக்காக மயானஞ் செல்லத் தேவதத்தனுக்குத்தரவிட்டார். தேவதத்தன் அவ்வாறே அந்தக் கர்ப்பத்தைத் தயார்செய்து வைத்துவிட்டுப் பைரவ பூஜைக்குச்சென்று சிறிது நேரத்திற் கெல்லாம் திரும்பினன். அதற்குள் ஜாலபாதர் அந்தக் கர்ப்பத்தைச் சிறிதும் மிச்சம் வைக்காமல் புசித்துவிட்டு உட்கார்ந்திருக்கக் கண்டான் தேவதத்தன். உடனே அவரை நோக்கி, "குருவே! எங்கே கர்ப்பமாமிசம்?" என்று கேட்டான். அக்கணமே ஜாலபாதர் வித்தியாதரத் தன்மையையடைந்து ஆகாயத்திற் கிளம்பி ஆகாயம் போன்ற கத்தியுடனும் ஹாரகேயூரங்களுடனும் விளங்கினர்.

இக்காட்சியைக்கண்ட தேவதத்தன், 'அந்தோ! இந்த ஜாலபாதனல் இவ்வாறு மோசம்போனேன். அதிக உண்மையுடனிருந்தால் யார் தான் அவமதிப்படையார்? இருக்கட்டும்; இவனுக்கு நான் எவ்வாறு பதிற்செய்து என் மனச்சங்கடத்தைத் தீர்த்துக்கொள்வேன். நான் இவனை எவ்வாறு இனிக்கண்டுபிடிப்பேன்" என்று சிறிது நேரம் யோசித்தவாறிருந்து, இதற்கு வேதாள வசியம் இன்றியமையாததாகும்; அதை எவ்வாறேனும் அடைகின்றேன். முற்சியுடையார் இகழ்ச்சியடையாரன்றோ?—என்று கருதி அன்றிரவே மயானஞ் சென்று ஆங்கோர் மரத்தடியில்உட்கார்ந்து ஜபித்து ஒரு மானிடசரீரத்தில் வேதாளத்தை ஆவாகனஞ்செய்து பூஜித்தான். அதற்கு நரமாமிச பலியையும் தர்ப்பணத்தையும் செய்தான். அதனல் வேதாளம் திருப்திபடையவில்லை. அது கண்ட தேவத்தன் தன் மாமிசத்தைச் சேதித்துக் கொடுத்து அதனைத் திருப்தி செய்விக்கத் துணிந்தான். அப்பொழுது வேதாளம், "தைரியசாலியே! நான் உனது தைரியத்தைக் கண்டுகளிப்படைந்தேன். நீ விரும்பியதை நான் எவ்வாறேனு முடித்துத்தருகின்றேன்" என்று கூறியது. தேவதத்தன், "வேதாளமே! தன்னை நம்பியவனை மோசஞ் செய்த துராத்மாவாகிய ஜாலபாதனிருக்கும் வித்யாதரபதிக்கு என்னையழைத்துச் செல்லவேண்டும். அவனை நான் நிக்ரகிக்கவேண்டும்" என்றான். வேதாளம் அவ்வாறே இதோ அழைத்துச்செல்கின்றேன் என்று கூறி தன் நிஜ சொருபத்தோடு அவன் முன்னின்று அவனைத் தன் தோளின் மீதேற்றிக்கொண்டு ஒரு கணநேரத்தில் வித்யாதரபதிக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தது. அங்குப் பலவிடங்களுக்குச்சென்று தேடி ஜாலபாதரைக் கண்டுபிடித்தான் தேவதத்தன்.



ஜாலபாதர் அப்பொழுது தாம் வித்யாதரத்தன்மை பெற்றிருக்கின்றோமென்னும் கர்வங்கொண்டு அகங்காரமே ஓர் உருவெடுத்து வந்தாற்போறு ஓர் இரத்தினசனத் தமர்ந்திருந்தார். தம்மைச்சிறிதும் விரும்பாத வித்யுத்பிரபையை யடைய விரும்பிப் பலவாறு அவளுடன் இன்பவார்த்தைகளைப் பேசிக்கொண்டிருந்தார். தேவதத்தன் ஜாலபாதரிருக்கும் நிலைமையைக் கண்டதும் சினங்கொண்டு அவரை வேதாளத்தின் மீதிருந்தவாறே துரத்திச்சென்றனன். அப்போது தேவதத்தனைக்கண்டு மகிழ்வுற்ற வித்யுத்பிரபையின் நேத்திரங்களாகிய சகோரபக்ஷிகளிரண்டிற்கும் அமுதம்பொழியும்சந்திரன்போலிருந்தான்அவன். தேவதத்தனுக்குப் பயந்த அந்த ஜாலபாதர் தமதுகையிற்கொண்டிருந்த கத்தியை நழுவவிட்டுப் பிரமித்து நின்றுவிட்டார். தேவதத்தன் அக்கத்தியைத் தான் கைப்பற்றிக்கொண்டான். ஆனல் ஜாலபாதரை யொன்றுஞ் செய்யவில்லை. மேலான மனமுடையவர்கள், தமது பகைவர்கள் தம்மிடத்துப் பயந்தபோது அவர்களிடத்துத் தயை பாராட்டுவார்களே யன்றித் தீமை சிறிதும் செய்பார்களன்றோ? தேவதத்தன் சும்மாவிருந்தது கண்டும் அவனைச் சுமந்து வந்த வேதாளம் ஜாலபாதரைக் கொல்லச் சினங்கொண்டது. அதைத் தேவதத்தன் தடுத்து, "பாஷண்டனும் கிருபணனுமாகிய இவனைக் கொல்வதால் நாமடையும் பலன் யாதாம்? இவனைப் பூலோகத்திற்குக் கொண்டுபோய் இவனிருந்த இடத்திற் சேர்த்துவிடு. இவன்முன்போல காபாலிகனகவிருப்பதே இவனுக்கேற்ற தண்டனை யாகும்" என்று கூறினன்.

அச்சமயம் ஆகாயத்தின் கண் பார்வதி பரமேசுவரர் இருவரும்தோன்றி, "புத்திர! ஒருவருக்குமில்லாத உன் தைரியத்தைக்

கண்டு மகிழ்வுற்றோம். ஆகையால் இங்கு நீ யெப்போதும் வித்தியாதரர்களுக்கு அரசனாகவிருக்கும் தன்மையை யடையக் கடவாய்" என்று கூறி உடனே அந்தர்த்தானமாயினர். வேதாளம் உடனே ஜாலபாதரைத் தூக்கிக்கொண்டு வந்து பூமியிற் சேர்த்துவிட்டது. ஜாலபாதருக்கு இப்போது சித்திகள் குறைந்தன. அதர்மம் எவ்வாறு நிலைநிற்கும்? தேவதத்தன் அப்பால் அந்த வித்தியாதரபதிக்கு அரசனாகி வித்யுத்பிரபையுடன் வாழ்ந்து வந்தான்.

இச்சரித்திரத்தைப் பிந்துரேகை தன் கணவனுக்குச் சொல்லிப் பின்னும் அவனை நோக்கி, இவ்வாறாய காரியமெல்லா மிங்ஙனமே முடிவுபெறுகின்றன. பிந்துமதி கூறியபடி என்னுடைய கர்ப்பத்தைச் சிறிதுந் துக்கமின்றி இழுத்துக்கொள்ளும்" என்று கூறினாள். சக்திதேவன் அதுகேட்டும் ஓகோ இது பாபமான காரியமாயிற்றே; நானெவ்வாறு இதனைச்செய்யத் துணிவது" என்றெண்ணிச் சற்றுத் தயங்கினான். அப்பொழுது "சக்திதேவ! நீ சிறிதும் அஞ்சாது இவள் கர்ப்பத்திலுள்ள சிசுவின் கழுத்திற் கைகொடுத்திழுத்து அதனை வெளிப்படுத்து; அது வெளிப்பட்டவுடன் கத்தியாய் விடும்" என்றோர் அசரீரி வாக்குண்டாயிற்று. உடனே சக்திதேவன் தைரியமடைந்து பிந்துரேகையின் வயிற்றைப் பிளந்து கர்ப்பத்திலுள்ள சிசுவை இழுத்து வெளிப்படுத்தினான். அக்கணமே அந்தக் கர்ப்பம் சக்திதேவனுடைய சித்தியின் கேசம்போல் நீண்டதொரு கத்தியாயிற்று. பிறகு அந்த வேதியன் வித்தியாதரனானான். பிந்துரேகை அக்கணமே மறைந்துவிட்டனள். அப்பால் சக்திதேவன் பிந்துமதியிடம் வந்து எல்லாவற்றையுந் தெரிவித்தான். பிந்துமதி "நாத! நாங்கள் வித்தியாதரபதியின் புத்திரிகள். நாங்கள் நால்வர் சகோதரிகள். சாபத்தின் காரணமாகக் கனகபுரியினின்று இங்கு வந்தவர்கள். எங்கள் மூவரில் இன்னொருத்தி தாங்கள் வர்த்தமானபுரியில் பார்த்த கனகரேகையாவள். அவள் சாபவிமோசன மடைந்ததையும் நீர் கண்டீரன்றோ? அவள் இப்போது தன்னுடைய நகரம் சென்றனள். அவளுக்குத் தெய்வச் செயலால் சாபமிவ்வா றேற்பட்டது. நான்தான் மூன்றாமவள். எனக்கு இப்போதுதான் சாபவிமோசன மேற்பட்டது. அன்பனே! அந்தப் பட்டணத்திற்கு நான் இப்போது போகவேண்டும். எங்களுடைய தேகங்கள் அங்கிருக்



கின்றன. சந்திரப் பிரபை எங்களுக்கு மூத்தவள். தாங்களும் அங்கு இக்கத்தியின் மகிமையால் வரலாம். அங்கு எங்கள் தந்தையால் கொடுக்கப்படும் எங்களை மனைவியாகப்பெற்று இன்னும் சில ரூபவதிகளையும் மனைவியாகப் பெற்றுச் சுகமாக அவ்விராஜ்ய பரிபாலனஞ் செய்வீர்" என்று உண்மையைத் தெரிவித்தாள். உடனே இருவரும் ஆகாயமார்க்கமாகக் கனகபுரி சென்றனர். அங்கு முன் தான்கண்ட மூன்று மண்டபங்களிலும் படுத்திருப்பதுபோற் கிடந்த மூன்று சரீரங்களையும் இப்போது தன் மூன்று மனைவியராகக்கண்டான் சக்திதேவன். மங்களங்களைச் செய்பவளும்பிந்துமதிக்கு மூத்தவளும் நான்காமவளுமாகிய சந்திரப்பிரபையையும் பார்த்தான். அந்த விப்ரசிரேஷ்டனுடைய வரவைக் கொண்டாடுவதன் பொருட்டுப் பல பணிவிடைப் பெண்கள் அங்கு வந்தனர்.

அப்பொழுது சந்திரப்ரபை சக்திதேவனை நோக்கி, சுந்தர! இவள்தான் நீர் வர்த்தமானபுரியில் இராஜகுமாரியாகக் கண்ட கனகரேகை. இவள் என்னுடைய சகோதரியாகிய சந்திரரேகை என்பாள். உத்தளத்தீவில் நீர் முதலில் மணந்துகொண்ட வேடராஜன் புத்திரியாகிய பிந்துமதி இவளாகிறாள். இவள் என்னுடைய சகோதரி சசிரேகை. பின்னர், அசுரனால் சிறைவைக்கப்பட்டிருந்த ராஜகுமாரியாகிய பிந்துரேகை உமக்கு மனைவியானாளல்லவா? அவள்தான் இதோ இங்கிருப்பவள். இவள் என் சகோதரி சசிப்ரபை என்பவள். புண்யசாலியே! எங்களுடன் என் தந்தையிடம் வாருங்கள். போகலாம்; அவர் மூலமாக எங்களை மணஞ்செய்து கொள்ளுங்கள்" என்று மன்மதனுடைய ஆக்ஞையைத் தெரிவிப்பது போலக் கூறினாள்.

பின்னர் சக்திதேவன் நான்கு பெண்களுடனும் வனத்திற்குச்சென்று அவர்களின் பிதாவிருக்கு மிடத்திற்குச் சென்றான். அந்தப் பெண்கள் நால்வரும் தந்தையின் பாதங்களிற் பணிந்து விஷயத்தைப் பணிவாய்த்தெரிவித்துக் கொண்டனர். அந்த வித்யாதரச்ரேஷ்டன் மகிழ்வுற்றுச் சக்திதேவனையும் பார்த்து ஆசீர்வதித்து அப்பெண்கள் நால்வரையும் ஏககாலத்தில் பாணிக்கிரகணம் செய்து கொடுத்துத் தன் இராஜ்யத்தையும் சக்திதேவனுக்கேயளித்துத் தனக்குத் தெரிந்த வித்தைகளையும் அவனுக்கு உபதேசித்தான். அவனுக்குச் சக்திவேகன் என்னும் வித்தியாதரப் பெயரையு மளித்தனன். அப்பால் "ஏ சக்திவேக! உன்னைஎவரும்

ஜயிக்கப்போவதில்லை. மகா மகிமைவாய்ந்த உதயன மகாராஜனுடைய புத்திரனாகிய நரவாஹனதத்தனே சக்ரவர்த்தியாவன். அவனே உங்களுக்குப் பிரபு. ஆகையால் நீ அவனுக்கு வந்தனஞ் செலுத்தக்கடவாய்" என்று கூறித் தன் பெண்களையும் மருமகனையும் மனமகிழ்ச்சியுடன் ஆசீர்வதித்துத் தன் நகரத்திற் கனுப்பினன்.

அப்பால் சக்திதேவன் ஸ்வர்ண ரஸனைகளால் பிரகாசிப்பதும் திவ்யமாடமாளிகைகளுடன் கூடியதும் மனோகந்தமாக விளங்குவதுமாகிய கனகபுரிக்கு அரசனாகி அங்குத் தன்பிராணநாயகி நால்வருடனுமிருந்து சுகமாக வாழ்ந்து வந்தான்.

இவ்வாறு அச்சமயம் சக்திவேகன் விசித்திரமான தன் சரித்திரத்தைத் தெரிவித்துப் பின்னும் உதயன மகாராஜனிடம் கூறுகின்றான்.

சந்திரவம்சபூஷண! நான் சக்ரவர்த்தியாகப் போகிறவனாகிய உமது புதல்வனின் இரண்டு பாதகமல தரிசனஞ்செய்யவிரும்பி இப்போது இங்கே வந்தேன். பிரபுவே! நானொரு மானிடனேயெனினும் பரமேசுவரனுடைய அநுக்கிரகத்தால் வித்யாதரர்களுக்குப் பதியாகவிருக்கும் பாக்கியத்தை இவ்வாறடைந்தனன். ராஜனே! இப்போது நான் எனதிருப்பிடஞ் செல்கின்றேன். குறைவில்லா வாழ்வை ஈசன் தமக்குக் கொடுத்தருள்வாராக" என்று கைகூப்பியவாறிருந்து தெரிவித்து, உதயனனிடம் விடைபெற்றுக்கொண்டு உயரக்கிளம்பி ஆகாயவழியேசென்றான்.

உதயனன் தன்னிரு மனைவிமார்களுடனும் அமைச்சர்களுடனும் இந்த ஆச்சரியத்தைக்கண்டு அளவிலா ஆநந்தமடைந்தான்.

மூன்றாவது தரங்கம் முற்றிற்று.

5-வதாகிய சதுர்த்தாரிகா லம்பகம்




ஆறாவது

# மதனமஞ்சுகா லம்பகம்.

## முதலாவது தரங்கம்.

உதயன ராஜனிடம் செல்வமாக வளர்ந்துவரும் நரவாஹனதத்தனுக்கு எட்டுவயதாயிற்று. இப்பொழுது இவன் கல்வி பயின்றும் தன் நண்பர்களுடன் உபவனங்களில் விளையாடியும் வருகின்றான். இராஜ ஸ்திரீயாகிய பத்மாவதியும் வாஸவதத்தையும் நரவாஹனதத்தனிடம் மாறாத அன்புடையவர்களா யிருந்து வருகின்றனர். இவ்வாறிருக்கையில் ஒரு சமயம் ஒருவர் ஒரு கதை கூறினர். அது வருமாறு:—

விதஸ்தை என்னும் நதிக்கரையில் தக்ஷசி யென்னும் ஒரு நகரமுண்டு. அது பல விநோதமான பதுமைகள் நிறைந்த மாளிகைகளுடன் கூடியது. அவ்வாறாகப் பதுமைகள் மாளிகைகளிலமைக்கப்பட்டிருந்த காட்சியானது பாதலத்துப் பதுமைகள் இந்தத் தக்ஷஸி நகரத்தின் எழிலை விதஸ்தை யென்னும் நதியிற் கண்டுகளிக்க வந்தமர்ந்துள்ளனவோ வெனக்காணப்படும். இந்நகரில் களிங்கதத்தன் என்னுமொரு அரசனிருந் தரசு புரிந்து வந்தான். அவன் பௌத்தமதத்தினன். சந்திரனைப்போல் பெருமைபெற்ற ஜினனிடம் அன்புகொண்டவர்களாகிய அநேகம்ஜனங்களையுடையவன். அந்நகரமானது தன்னிடமுள்ள உயர்ந்த கட்டடங்களில் அமைக்கப்பட்டுள்ள இரத்தினங்களால் தனக்கு நிகரான நகரமொன்றில்லை யென்னும் இறுமாப்புடன் விளங்கிற்று. அந்நகர மன்னன் தன் பிரஜைகளைத் தந்தைபோலக் கருணையுடன் பரிபாலித்து வந்தான். ஆசிரியன் போலிருந்து அவர்களுக்கு ஞானோபதேசமுஞ் செய்து வந்தனன்.

இவ்வாறு யாவும் நன்கமையப்பெற்ற இந்நகரத்தில் ஒரு வர்த்தகனிருந்தான். அவன் பெரிய தனவந்தன். அவனை விதஸ்தா தத்தன்என்று அழைப்பார்கள். அவன் துறந்தாரிடத்து அன்புபூண்டு அவர்களை யுபசரிப்பதில் மிகுதியும் கவனஞ்செலுத்திவந்தனன்.

அவ்வர்த்தகனுக்கு ரத்தினதத்த னென்னுமொரு மைந்தனிருந்தான். அவன் அடிக்கடி தன் தந்தையைமகாபாபி யென்று

நிந்தித்து வந்தான். ஒருநாள் தந்தை தன் குமாரனைப்பார்த்து, "என்னை ஏன் அவமதிக்கின்றாய்" என்று கேட்டான். அதற்கவன், வெறுப்புடன் "நீரேன் வேதமார்க்கத்தை விட்டு அதர்மத்தை யநுசரிக்கின்றீர்? தவிர வேதியர்களை யொழித்துப் பௌத்தர்களைப் பூஜிக்கின்றீர். பௌத்தர்கள் ஸ்நானம் முதலிய ஆசார நியமமில்லாதவர்கள்; தங்களுக்கேற்ற காலங்களில் போஜனம் செய்வதிற் பேராவலுள்ளவர்கள்; கோவணத்துடன் திரிபவர்கள்; கீழ்ப்பட்ட ஜாதியினர். அவர்களுடைய நீதியாலாம் பயன் யாதாம்?" என்று கேட்டான். அவன் தந்தையாகிய வஸ்தாதத்தன், "புத்ர! தர்மம் ஒரு ரூபமுடையதன்று. ஒன்று உலக சிரேஷ்டமானது. மற்றொன்று ஜனங்களெல்லோருக்கும் ஏற்றதாகும். ஆசை முதலியவற்றை யொழிப்பதே ஸத்தியமாகும். பிராணிகளிடம் தயை ஜாதிபேதம் இவை அந்தணர்க்குரியதென்று சொல்லுகிறார்கள். எல்லாப் பிராணிகளுக்கு அபயமளிக்கும் இந்தத் தரிசனத்தை நீ அவமதியாதே. உபகாரம் தர்மமாக ஏற்படின் எவனுக்கும் விவாதமிராது. பிராணிகளுக்கு அபயமளிப்பதைவிட மேலான உபகாரமுண்டோ? புத்ர! ஜீவகாருண்யத்தை முக்கியமாகக் கொண்டு முத்தியை யளிப்பதாகிய இச்சாஸ்திரத்தில் எனக்கு முழுநம்பிக்கை யுண்டாயிருக்கும்போது இதில் எனக்கு என்ன குற்றமேற்படும்?" என்று கேட்டான். ரத்தினதத்தன் தந்தையின்பேச்சை யொப்புக்கொள்ளாமல் மீண்டும் அவனைத் தூஷிக்கலானான். அதனால் அவ்வர்த்தகன் வருத்தமுற்று அந்நகர மன்னனாகிய களிங்கதத்தனிடம் போய் நடந்ததைக்கூறி முறையிட்டான்.

அரசன் உடனே அந்த ரத்தினதத்தனை வரவழைத்துச் சபையில் நிறுத்தி, தான் சினங்கொண்ட பாவனையுடனிருந்து, "இவன் பாபம் செய்தவன்; அகாரியம் செய்பவன் யென்று நான் கேள்விப்படுகின்றேன். தேசத்தைத் தூஷிக்கும் இவனை விசாரணையின்றி வதைசெய்வதன்றோ நீதி" என்று கூறிக் காவலாளியை யழைத்து இவனைக் கொலைக்களத்திற்குக் கொண்டுபோவென ஆக்ஞாபித்தான்! அப்பொழுது அங்கிருந்த வர்த்தகன், அரசனை நோக்கி, "தர்மத்தை யுத்தேசித்து இவனை இரண்டுமாதம் வரையில் வதைசெய்யாமலிருக்கவேண்டும்" என்று கேட்டுக்கொண்டான். அரசன் சம்மதித்து ரத்தினதத்தனை அவன் தந்தையிட



மே ஒப்புவித்து இவனை இரண்டுமாதம் வரையில் நீயே வைத்திருந்து பின்னரிச்சபைக் கழைத்துவாவென்று கட்டளையிட்டனுப்பினான். ரத்தினதத்தனுக்குப் பயமும் வியாகுலமுமுண்டாய் "நாம் அரசனுக்கு என்ன அபராதம் செய்தோம்; காரணமில்லாமலே என்முடிவை இரண்டுமாதகாலத்திற் கப்பால் ஏற்படுத்தி யிருக்கின்றானே" என்று யோசித்து வேறு சிந்தையின்றி நாளைக்கழித்து வந்தான்; இரவில் தூக்கமில்லாமலும் பகலில் உணவு கொள்ளாமலும் கவலைகொண்டு பித்தனைப்போலிருந்தான். இரண்டுமாதகாலங் கழிந்தது. அப்பொழுது ரத்தினதத்தனுடைய தேகம்வெளுத்தும் இளைத்தும் போயிருந்தது. அவனை அவன் தந்தை அரசனாக்ஞைப்படி அரசனுடைய சமுகத்திற்கு அழைத்துச் சென்றான்.

அரசன், தன் ஆபத்தை நினைத்து வருத்தமுற்று இளைத்திருக்கும் ரத்தினதத்தனைப் பார்த்து, "ஏன் இவ்வாறு நீ இளைத்திருக்கின்றாய்? நீ உணவு கொள்வதை நான் தடுத்தேனா?" என்று கேட்டான். ரத்தினதத்தன், "மகாராஜாவே! மரணபயத்தால் என்னையே மறந்திருந்தேன். அவ்வாறான நான் ஆகாரங்கொள்வதில் எவ்வாறு விருப்பங்கொள்வேன்? தமது கட்டளையைக் கேட்டது முதல் என் உயிருக்கு யமன் வந்துவிட்டதாகவே நினைத்துவிட்டேன்." என்று கூறி வருத்தமுற்றான்.

அரசன், "ரத்தினதத்த! நான் உனக்கு மரணபயத்தை யுக்தியாகப் போதனை செய்தேன். பிராணிகளுக்கெல்லாம் இவ்வாறு மரணபயமுண்டன்றோ? ஆகவே பிராணிகளைக் காப்பாற்றும் தர்மத்தினும் எந்தத் தர்மம் உயர்ந்ததாகும்? ஆகையால் தர்மத்தையும் முத்தி விருப்பத்தையும் உத்தேசித்து, உனக்கு இந்த இரகசியத்தைக் காட்டினேன். மரணத்தைக் குறித்து பயப்படுகின்றவன் அறிவுள்ளவனாக மாட்டான்; அவன் முத்தியடைய முயற்சி செய்யான். ஆகையால் உயர்ந்த தர்மங்களைக் கைக்கொண்டொழுகும் உன் தந்தையை நீ அவமதிக்காதே" என்றான். ரத்தின தத்தன், நகைத்து, "மகாராஜாவே! இந்தத் தர்மோபதேசம் பெற்றதால் நான் புண்யசாலியானேன்; முத்தியடைய விருப்பமு மேற்பட்டது. பிரபுவே! அந்த முத்திமார்க்கத்தையும் எனக்குபதேசிக்கவேண்டும்." என்றான். அரசன் "அவ்வாறே உனக்கு முத்திமார்க்கத்தை யுபதேசிக்கின்றேன்; சமயம் நேரும்போது தெரிவிக்கின்றேன்" என்று கூறி அனுப்பினான்.

பின்னர் அந்நகரத்தில் ஒருற்சவம் கொண்டாடப்பட்டது. அப்பொழுது அரசன் ரத்தினதத்தனை யழைத்துவர ஆக்ஞாபித்து, அவனிடம் எண்ணெய் நிறைந்த ஒரு குடத்தைக்கொடுத்து, "நீ இதை யெடுத்துக்கொண்டு இந்நகரத்தை வலம்வர வேண்டும்; அப்பொழுது இக்குடத்திலிருக்கும் எண்ணெயில் ஒரு துளியேனும் கீழேதளும்பிச் சேதமாவது கூடாது; ஒருதுளி நிலத்தில் விழுமாயின் அச்சமயம் உன்னைத் தொடர்ந்து வரும் காவலாளிகள் உன்னைச் சிரச்சேதம் செய்துவிடுவார்கள்; இதை மறவாதே; கவனத்துடன் என் ஆக்ஞையை நிறைவேற்று" என்று கூறி அவனுடன் சில வீரர்களையுஞ் சேர்த்தனுப்பினன்.

ரத்தின தத்தன் எண்ணெய்க்குடத்தை யெடுத்துக்கொண்டு மிகுந்த கவனத்துடன் நகரத்தை வலம்வந்து அரசனைத் தரிசித்தான். அரசன் மகிழ்வுற்று, "ரத்தினதத்த! சந்தோஷம்! இந்நகரை வலம்வரும்போது நீ யாவரையேனும் பார்த்ததுண்டா" என்று கேட்டான். ரத்தினதத்தன், "நான் ஒருவரையும் பார்க்கவில்லை; என் செவிப்புலனும் அச்சமயம் செயலற்றுப்போ யிருந்தது. எண்ணெய் சிந்திவிடுமோ என்னும் பயமும் கத்தி சிரசைச் சேதித்துவிடுமோ என்னும் பயமும் வேறொன்றையுங் கவனிக்கவொட்டாது என்னைத் தடுத்துவந்தன. ஆகவே நான் எண்ணெய்க்குடத்திலேயே கவனஞ் செலுத்திக்கொண்டு வலம்வந்து தங்களைத் தரிசித்தேன்" என்றான். அரசன், "ரத்தினதத்த! இவ்வாறான கவனிப்புடன் நீ பரமாத்மாவைத் தியானஞ் செய்தல் வேண்டும். ஏகாக்ர சித்தமுடையவனாகவும், பகிர்முக திருஷ்டி யில்லாதவனாகவும் இருப்பவனே தத்துவத்தைக் காண்கின்றான். தத்துவமுணர்ந்தவன் மீண்டும் கர்மங்களிற் கட்டுப்படமாட்டான். முத்திமார்க்கத்திற்கு இஃதொரு சுருக்கமான உபதேசம்" என்று கூறினன். ரத்தினதத்தன் உடனே அவ்வரசனை யன்போடு பணிந்து விடைபெற்றுத் தன்வீடுபோய்ச் சேர்ந்தான்.

இவ்வாறாகப் பிரஜா பரிபாலனம் செய்து வரும் அந்தக் களிங்கத்தத்த ராஜனுக்குத் தாராதத்தை என்னு மொரு மனைவியிருந்தாள். அவள் நல்ல ஆசாரமும் சிறந்த குணமு முடையவளாக இருந்தாள். பலதிருஷ்டாந்தங் காட்டுவதிற் சிறந்தவனாகிய கவியானவன் கலைமகளருளால் விளங்குவது போல்அந்தக் களிங்கதத்தாராஜன் அவனுடைய உத்தமபத்தினியின் குணவிசேஷங்களாற் சிறப்புற்று விளங்கினன். அமிர்தமயமான சந்திரனுக்கு நிலவைப் போல், பிரகாசமான குணங்களால் விளங்கும் இந்தத்தாராதத்தை தன் கணவனாகிய அரசனுக்குச் சிறிதும் மாறுபடாம லிருந்து வந்தனள். ஸ்வர்க்கத்தில் இந்திரனும் இந்திராணியும்போல் இவர்கள் நீண்ட காலம் வாழ்ந்து வந்தனர்.



இங்கிவ்வாறிருக்க, ஸ்வர்க்கத்தில் இந்திரன் யாதோ ஒரு காரணங்கருதி உற்சவங் கொண்டாடினன். அப்போது அவனது சபைக்கு அப்ஸரஸ்திரீகள் யாவரும் நர்த்தனஞ் செய்ய ஒருங்கு சேர்ந்திருந்தனர். அக்கூட்டத்தில் சுரபிதத்தை யென்னும் அப்ஸரஸ்திரீ மாத்திரம் காணப் படவில்லை. இந்திரன் அதுபற்றி விசாரித்து அவள், நந்தவனம் என்னும் சிங்காரத்தோட்டத்திற்குச் சென்று ஆங்கொருவித்தியாதரனோடுகூடிச் சயனித்திருக்கின்றாளென்று தெரிந்து கொண்டான். உடனே இந்திரன் சினங்கொண்டு, ஆச்சரியம்! இந்த வித்யாதரனும் ஸுரபிதத்தையும் துஷ்டர்கள்; மன்மத வசத்தர்களாகிக் கண்க ளிழந்த அந்தகர்போ லாயினர்; ஸுரபிதத்தை நம்மை மறந்து சுதந்தரைபோல் கர்வங்கொண்டு திரிகின்றாள்; வித்திபாதரனோ தேவலோகத்தில் பிரவேசித்து அநீதியைச் செய்கின்றான்; ஆயினும், இந்த வித்திபாதரனிடம் குற்றத்தைக் காணேன்; இவனோ அற்பன்; இந்த ஸுரபிதத்தையே அவனைத் தன் ஸ்வரூபத்தால் ஸ்வாதீனப்படுத்திக் கொண்டிருக்கின்றாள்; லாவண்ணியமாகிய பிரவாகத்தின் அலைகளுடையவளும் பூரணமான உயர்ந்த ஸ்தனபார முடையவளுமாகிய ஸுரபிதத்தையால் இந்த வித்தியாதரன் மயக்கப் பட்டிருக்கிறான் என்பது நிச்சயம். முன்னர் நான்முகன் உத்தமமான அழகு வாய்ந்தவர்களிட மிருந்து அழகைச் சிறிது சிறிதாகத் திரட்டித் திலோத்தமை யென்னும் பெண்மணியைச் சிருஷ்டித்தான். அவ்வனிதையைப் பரமசிவன் பார்த்து மனங்கலங்க வில்லையா? விசுவாமித்திர முனிவர் மேனகையைக் கண்டு தவத்தை யிழக்க வில்லையா? யயாதி ராஜன் சர்மிஷ்டையினிடம் ஆசைகொண்டு மூப்பினை விடவில்லையா? ஆகையால் யுவனான வித்திபாதரன் அபராதியாகான்; இவளுடைய அழகில் அவன் ஈடுபட்டவனாகின்றான். ஆகவே ஸுரபிதத்தையே பாபியாகின்றாள். குறைவு பெற்றவனிடம் விருப்பங் கொண்டாள்; இவள் தான் அபராதி. இவளோ வித்திபாதரனை நமது தோட்

டத்திற் பிரவேசிக்கச் செய்திருக்கின்றாள். என்று கருதி அந்த அப்ஸரஸ்திரீக்கு—

“பாவி! நீ யிங்கிராதே. போ! மானிடத்தன்மையை யடைந்து தேவகாரியத்தை முடித்துக் கொண்டு மீண்டும் இந்த ஸ்வர்க்கத்தை யடையக் கடவாய்” என்று இந்திரன் சாபங்கொடுத்தான்.

இச்சமயத்தில் களிங்கதத்த ராஜனுடைய மனைவியாகிய தாராதத்தை தக்ஷசிலா நகரில் ருது ஸ்நானத்தை யடைந்தாள். இவளுடைய கர்ப்பத்தில் இந்திரன் சாபமேற்ற ஸுரபிதத்தை வந்து பிரவேசித்தனள். அன்று தாராதத்தை தன்வயிற்றில் ஒரு ஜ்வாலை பிரவேசித்ததென்று கனவுகண்டாள். உடனே வியப்படைந்து அதைத் தன் கணவனிடம் தெரிவித்தாள். அரசன் தன் மனைவியை நோக்கி “தேவர்கள் சாபத்தால் மானிடவயிற்றி லுற்பவிப்பதுண்டு. ஆகையால் தேவர்களைச் சேர்ந்த எவனோ உன்வயிற்றில் பிரவேசித் திருக்கின்றான். பிராணிகள் கர்மங்களிற் கட்டுண்டு நன்மை தீமை யென்னும் பயனையடைய மூவுலகமும் சஞ்சரிக்கின்றனர்” என்று கூறினான். தாராதத்தை “பிராணநாதா! சுபமும் அசுபமுமான கர்மமே வன்மையுடையது. அஃதே அநுபவத்தைக் கொடுப்பதென்பதும் உண்மை. இதுபற்றி ஒரு கதையெனக்கு இச்சமயம் நினைவுக்கு வருகின்றது, கூறுகின்றேன் கேளுங்கள்.

கோஸல தேசத்தில் தர்மதத்தன் என்னுமொரு அரசனிருந்தான். அவனுக்கு நாகச்ரீ யென்னும் ஒரு மனைவியிருந்தாள். அவ்வுத்தமி கணவனையே கடவுளென்று கருதி வழிபடும் இயல்பினள். அவ்வணங்கு பூலோக அருந்ததி யென்று சொல்லத்தக்க கற்பின் பெருமை வாய்ந்தவள். அந்தப் பதிவிரதை வயிற்றில் நான் பெண்ணாகப் பிறந்தேன். நான் சிறுகுழந்தையாக விருக்கும்போது என் அன்னை தன் முன்ஜன்ம வரலாற்றை அகாரணமாக நினைத்துக் கொண்டு தன் கணவனைப் பார்த்து, “பிராணநாதா! முன்ஜன்ம வரலாற்றை இப்போது அகாரணமாக நினைத்துக்கொண்டேன், அதைச் சொல்லாமலிருக்க என்மனம் விரும்பவில்லை. சொல்வேனேயாயின் நிச்சயமாக எனக்கு மரணமுண்டாகும். யார் முன்ஜன்மத்தைப்பற்றிச் சிந்தித்து அதை வெளியிடுகின்றார்களோ அவர்களுக்கு உண்மையில் மரணம் சம்பவிக்குமென்று பெரியோரும்



கூறுகின்றனர். ஆகையால் இப்பொழுது எனக்கு மிகவும் வருத்தமாயிருக்கின்றது.” என்று கூறிக் கண்கலங்கினாள். அரசன் இப்போது உன்னால் எனக்கும் என்னுடைய முன்ஜன்ம வரலாறு நினைவுக்கு வந்திருக்கிறது. ஆகையால் நான் உனக்குச் சொல்வதற்குள் நீ அந்த வரலாற்றை எனக்குச் சொல்; வருவது வரட்டும்; வருவதை யாரே விலக்கவல்லவர்? பொருந்துவன போமினென்றாற் போமோ? வீணே நெஞ்சம்புண்ணாக நெடுந்தூரம் நினைந்து வருந்துவதனாற் பயனில்லை” என்று கூறினள். என் அன்னை, உடனே என் தந்தையை நோக்கிக் கூறுகின்றேன்,கேட்கலாம் என்று சொல்லத் தொடங்கினாள்.

நான் முன் ஜன்மத்தில் இத்தேசத்திலேயே ஒருவேதியனுடைய வீட்டில் வேலைக் காரியாக இருந்தேன். நன்னடத்தையினின்று வழுவாத என் கணவன் தேவதாஸன் என்பவனோடு வாழ்ந்து வந்தேன். அவர் பரம சாது. அவரொரு வர்த்தகன் வீட்டில் கணக்கெழுதி வந்தார். நாங்களிருவரும் எங்களுக்குத் தகுந்த ஒரு சிறு வீட்டில் குடியிருந்து வந்தோம். இவ்வளவு ஏழ்மை ஸ்திதியிலிருக்கும் நாங்கள் எங்களா லியன்ற வரையில் யாசகர்க்கு இல்லையென்னாது உதவிசெய்து வந்தோம். எங்களுக்குத் தரித்துக்கொள்ள ஒரு வஸ்திரத்திற்கு மேல் இரண் டிருந்தால் ஒன்றை யாசகர்க்குக் கொடுத்து விடுவோம்.

இவ்வாறிருக்கும் போது இத்தேயத்தில் அப்பொழுது கொடிய பஞ்சமுண்டாயிற்று. அதனால் எங்களுடைய வயிற்றுக்குப் போதுமான உணவுகிடைப்பதும் அரிதாகவிருந்தது. அதனால் நாங்கள் மிகவும் மெலிவுற்று நல்லகாலம் எப்பொழுதுண்டாகுமென்று எதிர்பார்த்தவாறு தெய்வத்தைத் தியானித்துக் கொண்டிருந்தோம். ஒருநாள் எங்களுக்குப் பிராணன் போகும்படியான களைப்புண்டாயிற்று. அச்சமயம் திடீரென்று ஒரு அதிதி வந்து எங்களை ஒரு வேளை ஆகாரம் வேண்டுமென்று யாசித்தார். நாங்கள் இருவரும் மனமொத்து அன்று எங்கள் வீட்டிலிருந்த கொஞ்சம் அன்னத்தையும் அவ்வதிதிக்கு அளித்து நாங்கள் பட்டினியாய்ப் படுத்துக் கொண்டோம். இரவில் என்னாயகருடைய பிராணன் “இவன் நம்மைவிட அதிதிகளிடத்தில் அதிகப் பற்றுத லுடையவனாக விருக்கின்றான்; இனிநாம் இவனிடமிருத்தல் கூடாது” என்றெண்ணிப் பிரிந்தது போல்

பிரிந்து விட்டது. உடனே நான் என்மனத்தைத் திடப்படுத்திக்
கொண்டு சிதையேற் படுத்தி அதில் நானும் என் கணவனுடன்
ஏறினேன். பின்னர் இராஜாவின் கிருகத்தில் நான் பிறந்து
உமக்குப் பட்டமகிஷியாக இருக்கின்றேன். புண்ணியமாகிய
விருக்ஷம் மிகுதியும் பலனையுண்டு பண்ணுகின்றது" என்று கூறி
னாள்.

இதைக் கேட்ட தர்மதத்தராஜன், "பிரியே! முன் ஜன்மத்
தில் உனக்கு நாயகனாக இருந்தவனும் வர்த்தகனிடம் கணக்கெ
ழுதி ஜீவித்துவந்த வனுமாகிய தேவதாசன் என்பவன் நான்
தான். என்னுடைய முன்ஜன்ம வரலாற்றை நானும் எண்ணினே
ன்"என்று கூறி இன்னும் சில விவரங்களையுந் தெரிவித்து துக்க
மும் மகிழ்ச்சியும் ஏககாலத்தி லடைந்து என் அன்னையுடன் தா
மும் சுவர்க்க பதவி யடைந்தார். இவ்வாறு என்தாய் தந்தையர்
இறந்த பின்னர் என் சிறியதாய் என்னை வளர்ப்பதற்குத் தன்னு
டைய வீட்டிற்கு அழைத்துச் சென்றாள். அங்கு நான் கன்னி
கையாக இருக்கும் போது ஒரு முனிவர் அதிதியாகவந்தார். அவ
ருக்குப் பணிவிடைபுரியும் படி என்சிறிய தாய் எனக்கு உத்தரவு
செய்தாள். குந்திதேவி துர்வாஸ முனிவரைப் பூஜித்தது போல
அந்த முனிவருக்கு அவர் மனம் மகிழும்படி பணிவிடை புரிந்து
வந்தேன். பிரபுவே! அந்த மகாமுனிவர் கொடுத்த வரமகிமை
யால் அறநெறிவழுவாத தங்களை எனக்கு நாயகனாகஅடைந்தேன்;
இவ்வாறு தர்மத்தால் நன்மைகள் ஏற்படுகின்றன. ஏனெனில் என்
தாய் தந்தையர்கள் இராஜ்யத்தை யடைந்திருந்தும் முன்ஜன்ம
வரலாற்றை உணரும் சக்திவாய்ந்திருந்தன ரன்றோ?-என்று கூறி
னாள்.

இவ்வாறு தேவியாகிய தாராதத்தை கூற,களிங்கதத்தராஜன்
தர்மத்தில் மிகுதியும் அன்புடையவனாகி மனைவியைப் பார்த்து,
"நீ சொல்லியது உண்மைதான். சிறிதேனும் தர்மத்தை
நன்றாயனுஷ்டித்து வரின், மிகுந்த பலனுண்டாகும். இதற்கொரு
சரித்திர முண்டு, கூறுகின்றேன்.

குண்டின மென்னு மொரு நகரத்தில் ஒருவேதியரிருந்தனர்;
அவருக்கு மாணவர் எழுவரிருந்தனர். அவ்வெழுவருக்கும் ஆசி
ரியராக விருந்த அவ்வேதியர் துர்ப்பிக்ஷம் வந்த ஒரு சமயம் தம்
மாதுலரிடஞ் சென்று தமக்கொரு பசுவைக் கேட்டு வாங்கி வரும்



படி தமது மாணவர் எழுவரையும் அனுப்பினர். அவர்கள் தமது
ஆசிரியரது கட்டளைப் படி வேறு தேயத்தி லிருக்கும் தங்கள்
குருவின் மாதுலரிடஞ் சென்று அவரை வணங்கித் தமது குரு
வின் கட்டளையைத் தெரிவித்தனர். அவர், அவர்களிடம் ஒரு
பசுவைக் கொடுத்தனுப்பினர். ஆனால் அவர் பரம லோபியாகை
யால் தூரதேச மிருந்து வந்த அவர்களுக்கு ஒருவேளை போஜனமு
மளிக்காமல் அனுப்பிவிட்டனர்.

மாணவர்கள் பசுவைக் கொண்டு வரும்போது பாதிவழியில்
பசியால் வருந்திக் களைப்புற்றுச்சோர்ந்து"ஐயோ!நமக்குப்பிராண
பயமான களைப் புண்டாகின்றதே! என்ன செய்யலாம்?நிர்மானுஷ்
யமான கானகத்தில் வந்து அகப்பட்டுக் கொண்டோமே! இங்கு
அன்னந் தண்ணீர் கிடைப்பது துர்லபமாக விருக்கின்றது; இச்
சமயம் நாமென்ன செய்யக் கூடும் ? நாம் ஆபத்துக் குள்ளானது
மன்றி இந்தப்பசுவுமன்றோஆபத்தை யடையும்போலிருக்கின்றது;
நாமுமிறந்து இந்தப் பசுவும் இறக்குமாயின் குருவுக் குண்டாம்
பயன் யாதாம்? ஆகையால் இந்தப் பசுவின் மாம்ச முண்டு நமது
பிராணன் நிலை பெறும்படி செய்து கொண்டு மிகுந்த மாமிசத்தை
நமது குருவுக்களித்து அவரைத் திருப்திசெய்து வைப்போம்"
என்று ஆலோசனை செய்து அந்தப் பசுவைக் கொன்று தேவர்களை
யும் பிதிர்க்களையும் பூஜித்து விதிப்படி அந்த மாமிசத்தைப் புசி
த்து பசிப் பிணி தணித்துக் கொண்டு மிகுந்த மாமிசத்துடன்குரு
விடம் வந்து, தாங்கள் செய்த காரியத்தைக் கூறினர். அப
ராதம் செய்தவர்களேயாயினும் குரு அவர்கள் உண்மை பேசி
யதற்காக அவர்களிடம் சந்தோஷமடைந்தனர். சில நாட்களுக்
குப் பின்னர் அம்மாணவர் எழுவரும் துர்ப்பிக்ஷ தோஷத்தால்
துன்பமடைந்தனர். அப்பால் அவர்கள் தங்கள் குருவினிடம்
உண்மை பேசியதன் காரணமாக பூர்வ ஜன்ம நினைவு பெற்றனர்.

இவ்வாறே, சுத்தமான ஸங்கற்பமாகிய நீர்ப்பாய்ச்சப்பட்ட
புண்ணியமாகிய விதையானது, பயிரிடும் குடியானவர் களுக்கு
பயனைக்கொடுப்பதுபோல, மிகுதியும் அற்பமாயினும் பலிக்கின்
றது. இதற்கொரு காரணமுண்டு, கூறுகின்றேன்; கேள்—

கங்கா நதிக்கரையில் ஒரு புலையனும் ஒருவேதியனும் ஆகார
மின்றி அருந்தவம் புரிந்துவந்தனர். இவ்வாறிருக்கும் இவர்களுள்
வேதியன் பசி தாங்காது வருந்தினன். அப்பொழுது அங்குச் சில

வேடர்கள் ஓரிடத்தில் ஒன்று சேர்ந்து உட்கார்ந்துகொண்டு மீன்
களைப் புசித்துக்கொண்டிருந்தனர். அவர்களைக்கண்ட அவ்விப்பி
ரன், இவர்கள் நல்ல புண்ணியசாலிகள், “இவர்கள் நாடோறும்
நன்றாய் மீனைப் புசித்து வளர்கின்றனர்” என்று எண்ணினான். புலை
யனோ வெனின், “பிராணிகளைக் கொன்று அவற்றைப் புசிக்கும்
இவர்கள், மகாபாபிகள். இவர்களைச் சுடவேண்டும். இவர்களுடைய
முகத்தைப் பார்ப்பதும் மகா பாபமாகும்” என்று எண்ணிக் கண்
களை மூடிக்கொண்டான். இவ்வாறாய தன்மையிலிருக்கும் இவ்
விருவரும் உணவில்லாம லிருந்தமையால் நாளடைவில் மெலிந்து
உயிர் துறந்தனர். வேதியனை நாய்கள் விழுங்கின. புலையன் கங்கா
நதியில் ஜீர்ணமாயினன். பின்னர் மதியீனனாகிய வேதியன் வே
டர் குலத்திற் பிறந்து தீர்த்தவாஸமகிமையால் பூர்வஜன்மஸ்மரண
முடையவனானான். நல்ல புத்தியுடையவனும் தீரனுமாகிய புலை
யன், அந்தக் கங்காநதி தீரத்திலேயே ஓர் அந்தணன் வீட்டிற்
பூர்வஜன்ம நினைவுடன் பிறந்தனன்.

இவ்வாறு பிறந்த அவ்விருவருள், வேடனாகப் பிறந்த அந்த
ணன் பாபகர்மங்களைப் புரிந்து தவித்தனன். விப்பிரனாகப் பிறந்த
புலையன் புண்ணிய கர்மங்களையே செய்துவந்ததுமன்றி அரசனா
கவு மிருந்து சந்துஷ்டியாக விருந்துவந்தான். தர்மமாகிய விரு
க்ஷத்திற்கு வேர்போன்ற மனமானது எவனுக்குச் சுத்தமாகவிரு
க்கிறதோ அவனுக்கு நல்ல பலனும் எவனுக்கு அசுத்தமாகவிருக்
கிறதோ அவனுக்குத் தீயபலனும் இவ்வாறே உண்டாகுமென்
றறிக” என்று கூறினான்.

**மீண்டும்** அவ்வரசன் தன் மனைவியாகிய தாராதத்தையை
நோக்கி, “தேவி! தைரியத்தினால் ஏற்படும் ஒரு காரியமானது எத்
தன்மைத்தோ அதற்குத்தக்க பலனையடைகின்றது. ஏனெனில் ஸம்
பத்துக்கள் தைரியத்தைத் தொடர்ந்துசெல்கின்றன. அதற்கொரு
விசித்ரமான கதை யிருக்கின்றது. அதனைக் கேள்—

அவந்தி தேசத்தில் உலகப் பிரசித்திபெற்ற உச்சயினியென்
னும் ஒரு நகர மிருக்கின்றது. அந்நகரத்தில் மகா காளேசுவரர்
திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கின்றனர். அந்நகரத்தி
லுள்ள மாடமாளிகைகளெல்லாம் மகா காளேசுவரரைச் சேவிக்க
வந்தகைலாச பர்வதத்தின் சிகரங்கள் போல விளங்கும். இந்நகரத்
தின்கண் விக்ரம ஸிம்மன் என்னும் ஒரு அரசனிருந்தான். அந்த



விக்ரமஸிம்மன் முன், பகைவர்களாகிய மிருகங்கள் என்றும் எதி
ர்ப்படுவதில்லை. ஆகவே, அவன் யுத்தமாகிய உற்சவம் கிடைக்கப்
பெறாமல், அஸ்திரங்களிலும் புஜபல பராக்கிரமத்திலும் அவமதிப்
புற்றுத்தாபங்கொண்டிருந்தான். அவ்வரசனுடையஎண்ணமறிந்த
அமரகுப்தன் என்னும் அவனுடைய அமைச்சன், ஒருசமயம் அர
சனைப்பார்த்துக் கூறுகின்றான். “முன்னொருகாலத்தில் புஜபலத்தி
லும் ஆயுதவித்தையிலும் சமர்த்தனான ஒருவன் விஷ்ணுவுடன்
அமர்புரிய விரும்பிப் பரமசிவனைக்குறித்துத் தவஞ்செய்து ஆயிரங்
கரங்களைப் பெற்றுத் தனக்குப் பகைவனென்று கருதிய விஷ்ணு
வுடன் அமர்புரியச்சென்றான். விஷ்ணு அவனுடையகர்வமடங்க ஓர்
அம்பெய்து அவனுடைய கரங்களை யறுத்துத் தள்ளினார். அவன
டைந்த வீண் விருப்பத்தாலல்லவா அவன் தன்னுடைய கரங்களை
யுத்தத்திற் பகைவனுக்குப் பறிகொடுத்தான். ஆகையால் தாங்கள்
யுத்தத்தை விரும்பி வருந்துவது கூடாது. அது தங்களுக்குத் தீங்
கையே தரும். தங்களுடைய புஜபலத்தையும் ஆயுதப் பயிற்சியை
யும் காட்ட விரும்பினால், தக்க வனங்களுக்குச்சென்று வேட்டை
யாடி வரலாம். சரீரத்திற்குச் சிரமம் உண்டுபண்ணுவது முதலிய
வற்றில் அரசர்களுக்கு வேட்டையாடுவது ஏற்றதாகும். வேட்டை
யாடித் துஷ்டமிருகங்களைக் கொல்லுவதால் தேசத்திற்கு நன்மை
யுண்டாம். ஆயினும், மிகுதியும் வேட்டையாடுவது கூடாது. அவ்
வாறு வேட்டையாடியதால் துக்கத்திற்காளாகிப் பாண்டு முதலிய
அரசர்கள் நாசமடைந்திருக்கின்றனர்” என்று கூறினன்.

**புத்திமா**னாகிய அமரகுப்தன் இவ்வாறு கூறியதும் விக்ரம
ஸிம்மன் அவனுடைய போதனையை யேற்றுக்கொண்டு மறுநாளே
குதிரைகள், காலாட்கள், செந்நாய்கள், வலைகள் முதலியவற்றோ
டு, ஆரவாரத்துடன் வேட்டையாடப் புறப்பட்டான். இவ்வாறு
புறப்பட்டு விக்ரமசிம்மன் யானையின்மீது சென்றுகொண்டிருக்
குங்கால் நகரத்திற்கப்பாலிருந்த சூன்யமான ஒரு தேவாலயத்தில்
இரண்டு ஆடவர்கள் சேர்ந்துநின்று சம்பாஷித்துக்கொண்டிருக்
கப் பார்த்தான். அரசன் அவர்களோடு ஒன்றும் பேசாமல் வனத்
திற்குச் சென்று ஆங்காங்கு எதிர்ப்படும் யானை, சிங்கம், புலி,
கரடி முதலிய மிருகங்களைக் கொன்று தன் புஜபலத்தைப் பிர
காசப்படுத்தினான். வனமெங்கும் யானைக் கொம்புகளின் முத்து
கள் சிதறி நிறைந்திருப்பதைக் கண்டு மகிழ்வுற்றான். இவ்வாறு

வெகு நேரம் வேட்டையாடிய பின்னர் அரசன் தன் பரிவாரங்க
ளுடன் நகரத்திற்குத்திரும்பிவந்தான். முன்னர் நகரத்திலிருந்து
புறப்படும்போது நகரத்திற்குப் புறம்பேயிருந்த சூன்யமான கோ
யிலிற்கண்ட ஆடவர்கள் முன்போலவே சம்பாஷித்துக் கொண்
டிருக்கக்கண்டு, "இவ்வளவு நேரம் வரையில் இவர்களிருவரும்
இங்கிருந்து பேசிக்கொண்டிருக்கக் காரணமென்ன? இதனை யறிய
வேண்டும்; ஒருவேளை இவர்கள் சாரர்களாக விருப்பார்கள்" என்று
கருதித் தன்னுடைய தூதரில் இருவரை யனுப்பி அவர்களிரு
வரையும் தன்சபைக்குக் கொண்டுவரும்படி உத்தரவு செய்து அர
ண்மனைக்குச் சென்றான்.

மறுநாள் சபை கூடியது; தூதர்கள் அவ்விருவரையும்
கொண்டுவந்து அரசன் முன்னிலையில் நிறுத்தினர். அரசன் "நீவிர்
யாவர்? கோயிலிலிருந்து வெகு நேரமாக என்ன பேசிக்கொண்
டிருந்தீர்கள்" என்று கேட்டான். அவர்கள் உடனே அரசனை
வணங்கி, அபயம் கேட்டுக்கொண்டனர். அப்பால், அவர்களுள்
ஒருவன் அரசனை வணங்கி, "பிரபுவே! தங்களுடைய நகரத்தில்
கரபகன் என்னுமொரு வேதியனிருந்தான். அவன் தனக்கு வீர
னாகிய ஒரு புத்திரன் பிறக்கவேண்டுமென்று செய்ததவத்தால்
பிறந்தவன் நான். நான் வேதாத்தியயனம் செய்துகொண்டிருக்
கும்போது என் தாய்தந்தையர் இறந்துபோயினர். பின் நான்
நாதனற்றவனானே னாகையால், எனக்குரிய தர்மத்தினின்றுந் தவ
றிச் சூதாடுவதிலும் ஆயுதவித்தை யப்பியஸிப்பதிலும் முயன்று
வந்தேன். குருவின் கட்டளையினின்று நீங்கிய வாலிபம் எவனுக்
குத்தான் தடையற்றதாகாது? என் சிறுவயது இவ்வாறு கழிந்த
பின்னர் ஒரு சமயம் நான் பாணங்களைப் பிரயோகித்து விளையாட
வனம்சென்றேன். அப்பொழுது அங்கு ஒரு ஸ்திரீ நகரத்தி
லிருந்து வெளிப்பட்டு வந்துகொண்டிருந்தாள். அச்சமயம் மதங்
கொண்டு ஓடிவந்த அவ்வனத்து யானை, அந்த ஸ்திரீயைத் துரத்
திக்கொண்டு ஓடியது. அவளை அங்குத் தேடிக்கொண்டு வந்த
அவள் புருஷனும் சுற்றத்தாரும் யானையைக்கண்டு பயந்து ஓடி
விட்டனர். இதைச் சற்றுத் தூரத்திலிருந்து பார்த்திருந்த நான்
"என்ன ஆச்சரியமிது! பயந்து அழுதுகொண்டு ஓடும் இம்மா
தைச் சிறிது மிரக்கமின்றி விட்டுச் செல்கின்றனரே! இவர்கள்
நெஞ்சின் திடத்தை யென்னென்று சொல்வது? திக்கற்ற இந்த
மாதை இச்சமயம் நான் இந்த யானையினின்றுங் காப்பாற்றுகின்



றேன். ஆபத்தடைந்தவர்களை ரக்ஷிப்பதில் திறமையற்ற பிராண
னாலாவது பௌருஷத்தாலாவது என்ன பயன்?" என்று கருதிச்
சத்தமிட்டுக்கொண்டு யானையை நோக்கி ஓடினேன். அந்த யானை
அம்மாதைத் தொடர்வதைவிட்டு என் பக்கம் திரும்பி என்னைத்
துரத்தியது. நான் கொஞ்சதூரம் ஓடி அங்கே ஓடிந்து விழுந்திரு
ந்த ஒரு மரக்கிளையில் மறைந்து அதன் வழியே நடுமரத்திற்குச்
சென்று ஒளிந்துகொண்டேன். யானை அந்தக் கிளையை முறித்துச்
சின்னாபின்னப் படுத்திவிட்டுப் போய்விட்டது. பிறகு நான்
அம்மரத்தினின்று இறங்கித் திரும்பிவந்து அம்மாதைக் கண்
டேன். அம்மாது பயத்தினால் நடுங்கித் தன் நினைவற்றிருந்
தாள். நான் அம்மாதினிடம் வந்து தைரியங்கூறித் தேற்றி
னேன். அந்தமாது என்னைப் பார்த்து நான் குற்சிதனாகிய புரு
ஷனுக்கு மாலையிட்டேன். அப்படிப்பட்ட எனக்கு க்ஷேமம்
எங்கிருந்து கிடைக்கும்? பிரபுவே! இப்படிப்பட்ட சங்கட
காலத்தில் என்புருஷன் என்னைவிட்டுப் போய்விட்டான். என்
னைக் காப்பாற்ற வந்த தாங்கள் யானைக்குத் தப்பியதே என் க்ஷே
மமாகும். இனித் தாங்கள்தான் எனக்கு நாயகன். நீங்கள் தேகத்
தைப் பொருட்படுத்தாது என்னை நமனுடைய வாயினின்றுங்
காப்பாற்றினீரன்றோ? நமது சம்பாஷணை இருக்கட்டும். அதோ
பாருங்கள்; என் புருஷன் தன் பரிவாரங்களுடன் என்னைத்
தேடிக்கொண்டு வருகின்றான். நீங்கள் எங்களை யநுசரித்து
எங்களுடன் வாருங்கள். சமயம் நேரும்போது, எங்கேயாவது
போவோம்" என்றாள்.

இவ்வாறு அம்மாது கூறியதை நான் ஒப்புக் கொண்டேன்.
பின்னர் இவள் நல்ல ரூபவதி; நம்மிடம் தன்மனத்தை அன்போடு
வைத்திருக்கின்றாள்; ஆயினும், "இவள் பிறனுடைய மனைவி.
இவளை எப்படி நாம் அநுசரிப்பது," என்னும் எண்ணம் எனக்
குண்டாயிற்று. சபலபுத்தியினால் நான் அதை உடனே மறந்தேன்.
இதற்குள் அம்மாதின் நாயகன் வந்து சேர்ந்தான். அவன் அம்
மாதைப்புகழ்ந்து அவளையு மழைத்துக்கொண்டு தன் பரிவாரங்க
ளுடன் புறப்பட்டான். நானும் அம்மாது எனக்கு இரகசியமாகத்
தந்தபொருளை வழிச்செலவிற்கு வைத்துக்கொண்டு வேறு மார்க்
கமாக அவர்களொருவருக்குந் தெரியாமல் அம்மாதைத் தொடர்ந்
து சென்றேன்.

அம்மாது, தான் யானையினிடம் பயந்தோடியதால் தேகத்தில் துன்பம் மிகுதியா யிருக்கிற தென்று பொய் வார்த்தை கூறித் தன் நாயகன் தன்னைத் தொடக் கூடாதென்று தடுத்து விட்டாள். அந்தோ! ஆசை கொண்டவனிடம் நோக்கமுள்ள ஸ்திரீ, பெண் ஸர்ப்பம்போல் யாருக்குத்தான் அபகாரஞ் செய்ய அஞ்சுவாள்?

பின்னர், நாங்கள் கிரமமாக லோஹநகரம் வந்து வர்த்தகத் தொழில் செய்யும் அம்மாதின் புருஷன் வீடுபோய்ச்சேர்ந்தோம். நான் மாத்திரம் அவ்வீட்டுக்குச் சற்று தூரமிருந்த ஒரு ஆலயத்தில் தங்கினேன். அங்கே, நண்பாகிய, இந்த வேதியர் வந்து சேர்ந்தார். இவரை நான் புதிதாகப் பார்த்தேனுயினும் இவரிடம் எனக்கு எக்காரணத்தாலோ அன்புண்டாயிற்று. அவ்வாறு இவருக்கும் என்னிடம் அன்புண்டாயிற்று. ஜன்மாந்திரத்தில் ஒருவர்க்கொருவர் அன்பு ஏற்பட்டிருக்கு மாயின் அதை மனமறியும். அப்பால் என்னுடைய ரகஸியத்தை அவரிடம் தெரிவித்தேன். அவர், என்னை நோக்கி, "நீர் வந்த காரியம் முடிவு பெற ஒருபாயமிருக்கின்றது. அஃதென்ன வெனின், இந்த வர்த்தகனுடைய மனைவிக்கு நாத்தனூர் ஒருத்தி யிருக்கிறுள்; அவள் என்னோடு கூடவரத் தயாராக விருக்கிறுள். அவளுடைய உதவியைக்கொண்டு உன் விருப்பத்தை நிறைவேற்றுகின்றேன்" என்று கூறி உடனே அம்மாதிடம் சென்று நடந்த வாலாற்றைத் தெரிவித்தார். அவள் இவருடைய கருத்திற்கிசைந்து, மறுநாள் தன் சகோதரன் மனைவியைக் கண்டு பேசி அவளை அந்தத் தேவாலயத்திற்கு வரும்படி செய்தாள். நாங்கள் நால்வரும் ஓரிடத்தில் கூடினேம். அங்கே என் நண்பாகிய இவ்வந்தணரை விரும்பிய மாது இவரைத் தன் சகோதரனுடைய மனைவிபோல் வேடங் கொள்ளும்படி செய்து தான் என்னைவிரும்பிய அவள் சகோதரன் மனைவியை ஆண்வேடம் பூண்டு கொள்ளும் படிசெய்தாள். பின்னர் அவள் தான் இச்சித்த இவ்வந்தணரோடு தன் கிருகம் சென்றுள். நான் என்னை இச்சித்த மாதுடனே புறப்பட்டு உச்சயினி நகரம் வந்து சேர்ந்தேன். பின்னர் இவ்வந்தணரும் தம்மை விரும்பிய அம்மாதுடன் அன்றிரவே புறப்பட்டு இந்நகரம் வந்து சேர்ந்தார். பின் நாங்கள் நால்வரும் சந்தித்துக் கொண்டோம். இவ்வாறிருக்கும் நாங்கள் யெங்கிருந்தாலும் சந்தேகத்துட னிருக்கின்றோம். தன் விருப்பப் படி சகாயமாக விருந்து துணைபுரிந்த மனம் எவனுக்குத் தான் துணியும்? ஆகையால் நாங்கள் வசிப்பதற்கும் பொருளைச் சம்பாதிப்பதற்கும் வசதி தேடிக் கொள்ளக் கருதிப் பேசிக்கொண் டிருந்தோம். இவ்வாறுன எங்களைத் தாங்கள் சாரர்களென்று எண்ணி யழைத்து வரும்படி செய்து விசாரிக்கின்றீர்கள்! எங்கள் வரலாறு இது தான். இனி மகாராஜா அவர்கள் சித்தம்," என்றுன்.



இவ்வாறு அவன் கூறியதும் விக்ரஸிம்ம ராஜன் அவ்வந்தணரிருவரையும் பார்த்து வேதியர்களே! உங்களிடம் நான் மகிழ்ச்சியடைந்தேன். நீங்கள் அஞ்சவேண்டாம். இந்த நகரத்திலேயே யிருங்கள். உங்களுக்குக் குடியிருக்கவீடும் பொருளும் தருகின்றேன்" என்றுகூறி அவ்விருவருக்கும் தேவையான பொருளையளித்து ஆதரித்தான். ஸாஹஸத்தைப் பொருளாகக் கொண்ட புத்திசாலிகளிடம் அரசர்கள் மகிழ்வுறு கின்றனர். தேவர்கள் அரசர்கள் யாவரும் அவரவர் செய்த கர்மத்திற்குத் தக்கபடி விசித்திரமான போகங்களை யடைகின்றனர். ஆகையால் ஸ்வப்பனத்திற் கண்டவரலாறின் விபாஜமாக ஆகாயத்தினின்று ஜ்வாலை வயிற்றிற் புகுந்ததாகக் கண்டாயல்லவா அது கர்ம வாசத்தால் உன் கர்ப்பத்தை யடைந்த தேவராகி யென்பதில் ஐயமில்லை" என்று கூறினுன்.

தேவியாகிய தாராதத்தை தன்கணவனுகிய களிங்கதத்தனிடம் மகிழ்வுற்றுத் தன்னைப் புனிதவதியாக வெண்ணி ஆநந்தமடைந்தாள்.

முதல்தரங்கம்

முற்றிற்று.



## 2-வது தரங்கம்.



அந்தக் களிங்கதத்த ராஜனுடைய மனைவியாகிய தாராதத்தை கர்ப்ப பாரம் பொறுக்க முடியாமல் சிரமப்பட்டாள்; உதயமாகுந் தருணத்துச் சந்திர ரேகையுடன் கூடிய கிழக்குத்திக்கை யொத்தவளாயினள் அவ்வரசன் மனைவி. பின்னர்ப் பிரசவகாலம் நெருங்கியது. அப்பொழுது முகம் வெளுத்தது; அவளுடைய

கருவிழிகள் சலனமடைந்தன. சுபதினமாகிய அன்று தாராதத்
தை ஒரு குமாரத்தியைப் பெற்றாள். அப்பெண் ஒப்புவமை
யற்றவளாக விளங்கினள். பிரமதேவனுக்கு ஸௌந்திரியம் எல்லா
வற்றையும் கற்பிப்பதற்கு அவதரித்தவள் என்று கருதும் படி
யான எழிலமைந்தவளா யிருந்தனள். அவ்வரசன் இவ்வளவு
அழகுடைய பெண்ணை யடைந்தும், இம்மாதிரி யொருபுத்திரன்
பிறந்திலேனே யென்று கிலேசமடைந்தான். ஆயினும், அவன்
அப்பெண்ணைத் தேவகன்னிகை யெனவே கருதி யிருந்தான்.
கன்னிகை சோகத்திற்கு மூலமானவள் என்பதையும், புத்திரன்
சரீரத்துடன் வந்த ஆனந்தம் போன்றவன் என்பதையும் உணர்
ந்தவனாகையால், அவ்வருத்தத்திற் காற்றாது மனதைச் சமாதா
னஞ் செய்து கொள்வதற்காகத் தன் வீட்டி லிருந்து புறப்பட்
டுத் தேசங்கள்தோறும் சென்று, ஜயினர்கள் போன்ற விகார
ரூபிகள் வசிக்கும் ஒரு தேசத்தை யடைந்து ஆங்குச் சில நாள்
தங்கி யிருந்தான்.

அங்கொரு நாள் ஒரு துறவி ஜனங்களின் மத்தியில் நின்று
கொண்டு இவ்வருடத்தில் பிறருக்குப் பொருளைக் கொடுப்பதே
பெருந் தருமமென்று சொல்லப்படுகிறது. ஆகையால் இப்போது
பொருள் கொடுப்பவன் பிராணனைக் கொடுத்தவனுக் கொப்பா
கின்றான்; பொருளில் பிராணன் கலந்திருக்கிறது. கருணை
யுடைய புத்த தேவர் பிறருக்காகத் தமது தேகத்தைத் திருணம்
போல்மதித்துத் தியாகம்செய்திருக்கின்றார்.அங்ஙனமிருக்கப்பொ
ருளொரு பெரிதாமோ? மகாதவசியாகிய அந்தப் புத்தர் ஆசை
யையொழித்துத் திவ்யஞானமடைந்தார். ஆகையால் சரீரமுள்ள
வரையில் விரும்பும் எப்பொருள்களையும் வெறுத்தொழித்து அறி
வை அடைவதன் பொருட்டுப் பிராணிகளுக்கு நன்மையைத்
தேடவேண்டும். கேளுங்கள்—

கிருதன் என்னும் அரசனுக்கு ஏழு பெண்கள் பிறந்தனர்.
அவ்வெழுவரும் சிறுவயதினராக விருக்கும்பொழுதே வைராக்ய
மடைந்து, தந்தையின் கிருகத்தைவிட்டு நீங்கி மயானஞ் சென்ற
னர். அப்பொழுது சிலர் அவ்வாறு செல்வதற்குக் காரணமென்ன
வென்று அவர்களைக் கேட்டனர். அதற்கு அப்பெண்கள், இப்பிர
பஞ்சம் ஸாரமற்றது; சரீரம் அதனினும் ஸாரமற்றது; அதனினும்
இஷ்டர்களின் சேர்க்கை முதலியன ஸ்வப்பன விலாஸம்போன்ற



வை. அவ்வாறான் இந்த ஸம்ஸாரத்தில் ஸாரம் என்று கருதப்படு
வது பிறருக்கு நன்மை புரிவதேயாம். ஆகையால் நாம் இந்
தத் தேகத்தால் பிராணிகளுக்கு இதஞ் செய்யக் கருதி வெளிப்
படுகின்றோம். இந்தத் தேகம் உயிருடன்கூடியதே யெனினும்
மயானத்தில் மாம்சங்களை யுண்ணும் பூதங்களுக்கு இரையாக்கு
கின்றோம். இதனால் நாம் அடையும் பயன் யாதாம்.'' என்று
கூறினர். இவ்வாறே முன்னர் ஒரு அரசகுமாரன் வைராக்கிய
முடையவனாக இருந்தான். அவன் நல்ல ரூபவானா யிருந்தும்
பாலியத்திலேயே துறவியாயினன். அவன் ஒரு சமயம் பிக்ஷை
யை உத்தேசித்து ஒரு வர்த்தகனுடைய கிருகம் சென்றான். தாம
ரைத் தளம்போன்ற நேத்திரமுடைய அந்த வாலிப ஸன்னியாசி
யை அவ்வர்த்தகனுடைய மனைவி கண்டாள். அவள் அவனுடைய
அழகில் மயங்கி, அவனைப்பார்த்து இந்தக் கஷ்டமான விரதத்தை
நீரேன் மேற்கொண்டீர்? உமது திருக்கண்ணால் நீ ரெந்தப்பெண்
ணைப் பார்க்கின்றீரோ அவள் கிருதார்த்தையாவள்'' என்றாள்.
இவ்வாறு கூறியவுடன் அந்த வாலிப ஸந்நியாஸி தன் ஒரு கண்
ணைப்பிடுங்கிக் கையில்வைத்துக்கொண்டு "தாயே! இந்த நேத்தி
ரத்தைப்பார்; இது ரத்தம் மாமிசம் இவைகளுடன் கூடியது;
நிந்திக்கத்தக்கது; விருப்பமிருந்தால், எடுத்துக்கொள்ளலாம்;
இன்னொரு நேத்திரமும் இத்தன்மைத்தே. இவற்றில் அழகு
என்ன இருக்கிறது.'' என்றான்.

வர்த்தகன் மனைவி உடனே பெருந்துயரமுற்று, ஆ! துஷ்டை
யாகிய நான் மகா பாபத்தைச் செய்துவிட்டேன். ஐயோ! உமது
கண்களைப் பிடுங்குவதற்கு நான் காரணமாயினனன்றோ?'' என்று
கண்கலங்கினாள். ஸந்நியாஸி, "அம்மா! நீயேன் துக்கப்பட
வேண்டும். நீ இவ்வாறு செய்தது எனக்குப் பெரிய உபகாரமாகி
ன்றது. அதற்கொரு திருஷ்டாந்தங்கேள்.

காமினியே! முன்னொருகாலத்தில் கங்கைக்கரையில் ஓர்
உபவனத்தில் ஒரு துறவி வசித்துவந்தார். வைராக்கியங்களைச்
சோதிக்கவேண்டுமென்னும் கருத்துடன் அவர் தவம்புரிந்து வந்
தனர். அவர் அவ்வாறிருக்கும்பொழுது தெய்வச் செயலாக ஆங்
கொரு அரசன் தன் அந்தப்புர ஸ்திரீகளுடன் விளை
யாடுவதற்காக வந்து, இச்சைப்படி விளையாடிக் கங்கையில் நீராடி
ந்தி ஒரு மரத்தினடியிற் படுத்தான். படுத்த சிறிது நேரத்திற்

கெல்லாம் நித்திரை போய்விட்டான். அச்சமயம் ராஜ ஸ்திரீகள் அரசனைவிட்டு விலகிச் சென்று அங்குள்ள உபவனத்தைச் சுற்றி யலைந்துகொண்டிருந்தனர். அப்பொழுது அந்த உபவனத்தில் சமாதியிலிருக்கும் முனிவரைக் கண்டு அதிசயமுற்று அவரைச் சூழ்ந்து நின்று வேடிக்கை பார்த்துக்கொண்டு தாமதித்துவிட்டனர். அச்சமயம் அரசன் விழித்துக்கொண்டு தன் பிராண நாயகிகளைக் காணுமல், திடுக்கிட்டெழுந்து நான்கு பக்கமுஞ் சென்று பார்த்துக்கொண்டேபோய்ச் சிறிது நேரத்திற்கெல்லாம் தன் மனைவி முனிவரைச் சூழ நின்றுகொண்டிருப்பதைக் கண்டு அவர் மேல் சினங்கொண்டு கத்தியை யுருவி அவரை வெட்டினுன். அந்தோ! ஐசுவரியம், பொருமை, தயவின்மை, மந்தகுணம், அறிவின்மை இவை எதைத்தான் செய்ய அஞ்சும்? ஐந்தும் அக்னி போல் ஜ்வலிக்கின் கேட்கவேண்டுமா?

அப்பால் யோசனையில்லா அவ்வரசன், தன்வழியே மனைவிகளைப்பார்த்து முணுமுணுத்துக்கொண்டே சென்றுன். தமது அவயவங்கள் அறுபட்டும் அம்முனிவர் கோபங்கொள்ளாமல் பொறுமையுடன் தம்நிலையிலேயே யிருந்தார். அப்பொழுது அவர் முன்னிலையில் ஒரு தேவதை பிரத்தியட்சமாகி, “மகாத்துமாவே! பாவியாகிய அரசன் உம் மீது கோபங்கொண்டு இவ்வாறு செய்தான்; அவனைநான் என் சக்தியால் இதோ இப்போதே வதைக்கின்றேன்; உமக்கு ஸம்மதமா?” என்று கேட்டது. முனிவர், தேவி! இவ்வாறு உத்தரவிடக் கூடாது. அவ்வரசன் என் தர்மத்திற்குச் சகாயஞ் செய்தவனுகின்றுன். எனக்கு விருப்பமில்லாதவற்றைச் செய்தவனன்று. பகவதியே! அவனுடைய அநுக்கிரகத்தால் பொறுமை யென்னுந் தர்மத்தை நானடைந்தேன். தேவி! அவன் இவ்வாறு செய்யாதொழியின் அடியேன், யார்க்குப் பொறுப்பேன்? சிறந்த மனமுடையவன் விருப்பு, வெறுப்புகளில் சமமான எண்ணங்கொள்வான். ஆதலால் அவன் அநித்தியமான இந்தத் தேகத்தைப் பற்றிக் கோபிப்பானே? பொறுமை யென்பது பிரஹ்மத்தின் ஸ்தானம் என்று கூறினர்.

இவ்வாறு முனிவர் கூறவே, அந்தத் தேவதை அவருடைய தவத்திற்கு மகிழ்ச்சியடைந்து வெட்டுண்ட அவர் அவயவங்களை முன்போலுண்டாக்கி மறைந்தது. முனிவருக்கு அவ்வரசன் உபகாரியானது போல் என் கண்ணை யிழக்கும் படி செய்து என்



தவத்திற்கு விரக்தியை யுண்டாக்கிய காரணத்தால் தாங்களும் எனக்கு உபசாரஞ் செய்தவராகின்றீர்கள் என்று ஜிதேந்திரியராகிய அந்த வாலிப சந்நியாஸி வர்த்தகன் மனைவிக்குக் கூறித் தமது தேகத்தைவெறுத்து முத்தியைக் கருதிச்சென்றுர். ஆகையால் நாசமடையக்கூடிய இச்சரீரம் இளமையெனினும், அழகுள்ளதெனினும் அதனைத் தம்முடையதென்று கருதி அபிமானிப்பரோ அறிவுடையோர்? பிராணிகளுக்கு உபகாரம் புரிவதே முக்கியமான தர்மம்; அதுவே அறிவுடையவர்க்கு ஏற்றதாகும். ஆகையால் சுபாவ சுகத்திற்குக் கிருகம்போன்ற மயானத்துப் பிராணிகளுக்காக இச்சரீரத்தை யொழிக்கின்றேம்” என்று தங்களைத் தடுத்தவர்களுக்கு அவ்வேழு ராஜகுமாரத்திகளும் மறுமொழிபகர்ந்து, மயானம் சென்று தாங்கள் கருதியவாறே கருமத்தை முடித்து நற்கதியை யடைந்தனர். நல்ல அறிவாளிகள் தேகத்தில் நானென்னும் அபிமானத்தை யெப்பொழுதும் வைக்க மாட்டார்கள். மைந்தர் மனைவிமார் முதலியவர்களிடத்து அவர்கட்கு எங்ஙனம் அபிமானம் ஏற்படும்?” என்று பௌத்தமத போதகர் கூறியதைக்கேட்ட களிங்கதத்தராஜன் அன்று அந்நகரத்திலேயேயிருந்து மறுநாள் தன் தேசத்தை நோக்கிப் புறப்பட்டுக் கிரமமாக அரண்மனை வந்து சேர்ந்தான்.

பின்னர், ஒருநாள், அவ்வரசனிடம் ஒரு வேதியர் வந்து பிரபுவே! சிரேஷ்டமான கன்னிகை பிறந்ததைக்குறித்துத் தாங்களேன் தாபமடைகின்றீர்கள். கன்னிகைகள் புத்திரர்களைவிட உத்தமர்கள்; இகபரமிரண்டிலும் மங்களமானவர்கள். இராஜ்ஜியத்திற் பேராசைகொள்ளும் பிள்ளையினிடம் அரசர்களுக்கு ஏன் விருப்பமுண்டாக வேண்டும்? அந்த மைந்தர்கள் சமயம் வாய்த்த போது தங்கள் தந்தையையே கொன்றுவிடுகின்றனர். ஆச்சரியம்! குந்திபோஜன் முதலிய அரசர்கள் குந்தி முதலிய புத்திரிகளின் குணங்களால், துர்வாசர் முதலியவர்களுடைய அவமதிப்பைக் கடந்தார்கள். கன்னிகையைத் தானஞ்செய்வதா லேற்படும் பலன் புத்திரனுல் எவ்வாறுண்டாகும்? பலன் பரலோகத்திலேயாம். அதற்கொரு சரித்திர மிருக்கிறது, கூறுகின்றேன்.

திரிகூடம் என்னும் பர்வதத்தின்கண் ஸுஷேணன் என்னுமொரு அரசனிருந்து அரசுபுரிந்து வந்தான். நல்ல யௌவனமும் அதற்கேற்ற அழகும் அமைந்தவன். பரமசிவனிடம்

கொண்ட பொறாமையினால் பிரமனால் சிருஷ்டிக்கப்பட்ட மன்
மதன்போன்றவன். அவன் அம்மலைக்கருகே, தேவர்களுக்குரிய
உபவன மொன்றை உண்டாக்கினான். அந்த உபவனம், தேவ
லோகத்து நந்தவனத்தினும் சிறந்ததென்று சொல்லும்படி விளங்
கியது. அதன் மத்தியில் ஒரு குளம் வெட்டியிருந்தான். அதன்
கண் அநேக தாமரைகள் முளைத்து மலர்ந்து பிரகாசிக்கும். அத
னால் அது லட்சுமிதேவியின் லீலைக்காக ஏற்பட்ட கமலங்களுக்கு
இருப்பிடம்போல் விளங்கியது; சிறந்த சந்திரகாந்தக் கற்களால்
அமைந்த படிக்கட்டுகளுடன் கூடிய அக்குளக்கரைக்கு அவ்வர
சன் அடிக்கடி வந்து விநோதமாகப் பொழுது போக்குவ
துண்டு.

இவ்வாறிருக்கையில், அந்தக் குளத்திற்குத் தேவலோகத்தி
லிருந்து ரம்பை யென்னும் அப்ஸரஸ்திரீ தற்செயலாக வந்தாள்.
மலர்ந்த மலர்களுடைய அவ்வனத்தின் நடுவே பிரத்தியக்ஷமாக
வந்த வஸந்தனை யொத்து உலாவிவரும் அரசனைக்கண்டாள்.
கண்டதும், ஆகா! இவன் ஆகாயத்திலிருந்து இக்குளத்
துத் தாமரைமலரை விரும்பிப் பிரவேசித்த லட்சுமிதேவியைத்
தொடர்ந்து பிரவேசித்த சந்திரனோ? அங்ஙனமன்று. இவனைவிட்டு
ஸ்ரீ என்பவள் பிரியாதவளல்லவா? புஷ்பங்களைப் பாணமாகக்
கொண்ட மன்மதன் இந்த நந்தவனத்து மலர்களை கொய்யவந்
திருக்கின்றான் போலும்! இது நிச்சயம்! ஆயின் இவனுடன் சஞ்
சரிக்கும் ரதியெங்கே காணோம் என்று பலவாறு யோசித்துக்
கொண்டுநின்று உடனே மானிடவுருவந் தாங்கி அவ்வரசனிடம்
சென்றாள். தன்னருகே வரும் அந்த ரம்பையை அரசன் நோக்கி,
"ஆச்சரியம், இவள் யார்? அதிபற்புத சிருஷ்டியாகக் காணப்
படுகின்றாள். இவள் மானிட ஸ்திரீயல்ல; நேத்திரங்கள் இமை
யாதனவாக விருக்கின்றன. ஆகையால் இவள் தேவ ஸ்திரீ
யென்பதிலையமில்லை. இவளை நான்யாரென்று விசாரிக்கின் ஒருசம
யம் பயந்து ஓடிவிடுவாள்" என்று எண்ணி மௌனமாயிருந்தான்.

இவன் இவ்வாறெண்ணிக் கொண்டிருக்க ரம்பையும் அவ
னருகே சென்றாள். இருவருக்கும் சம்பாஷணை யுண்டாயிற்று.
அந்தக் கிரமமாகவே அதேதருணத்தில் இருவருக்கும் ஆலிங்கன
மும் நடந்தது; பின்னர், ஸுஷேண ராஜன் அந்த அப்ஸர ஸ்திரீ
யுடன் அநேக நாள் சுகம் அநுபவித்துக்கொண்டிருந்தான்.



அந்த ரம்பை அவ்வளவு நாளும் தன் லோகமாகிய ஸ்வர்க்கத்
தைப்பற்றிச் சிந்திக்காமலே யிருந்தாள்; ஜன்மபூமியிலும் போ
கத்தையே ரம்யமாக நினைத்தாள். இவ்வாறிருக்கும்போது அந்த
ரம்பையின் தோழியாகிய யக்ஷஸ்திரீ ஏராளமான ஸ்வர்ணங்களைக்
கொண்டுவந்து குவித்து, அவ்வரசனுடைய பூமியை மேருசிகரங்
களால் அலங்கரிக்கப்பெற்ற ஆகாயம்போல நிறையும்படி செய்
தாள். அப்பால் சிலகாலஞ் சென்ற பிறகு அந்த ரம்பை கர்ப்
பந்தரித்து ஒப்புயர்வற்ற அழகுவாய்ந்த ஒரு புதல்வியைப்
பெற்றாள். உடனே அந்த ரம்பை யென்னும் தேவமாது, "என்
மீது அன்புடைய தங்களைத் தரிசித்த மாத்திரத்தில் நான் கர்ப்ப
மடைந்து புதல்வியையுமீன்றேன்; இனி நான் இங்கிருக்க முடி
யாது; இந்தக் கன்னிகையைக் காப்பாற்றுங்கள்; இந்தக் கன்
னிகையின் விவாகத்தால் ஸ்வர்க்கத்தில் நம்மிருவருக்கும் மீண்
டும் சேர்க்கை உண்டாகப்போகின்றது" என்று தெரிவித்து அக்
கணமே மறைந்தாள். அவள் பிரிவையாற்றாத அம்மன்னன் தன்
பிராணனை விடத் தீர்மானித்தான். அதையறிந்த அவ்வரச
னுடைய அமைச்சர்கள், "பிரபுவே! மேனகை யென்னுந்தேவ
மாது சகுந்தலையைப்பெற்றதும் விசுவாமித்திரரை விட்டுப்பிரிந்
தாள்; அப்பொழுது விசுவாமித்திரர் துக்கித்தாரா? உயிரை விட்
டாரா? என்றுகூறி இன்னும் சில நியாயங்களைக் காட்டி அவன்
தீர்மானித்தை மாற்றினார்கள். அரசன், விஷயங்களை யுணர்ந்து
துக்கத்தைவிட்டுத் தைர்யமடைந் திருந்தான்.

பின்னர் தனக்குப்பிறந்த அந்தப் பெண் குழந்தையைச் செல்
வமாக வளர்த்து வந்தான். அவளுக்கு நேத்திர சௌந்தரியம்
மிகுந்திருந்தமையால் ஸுலோசனாவென்று பெயரிட்டழைத்து
வந்தான்.

அந்தப்பெண்மணி பூர்வபக்ஷத்துச் சந்திரன்போல வளர்ந்து
வந்து மங்கைப்பருவ மடைந்தனள். அப்பொழுது ஒரு நாள்
அந்த ஸுலோசனை உத்தியானவனத்திற்குச்சென்று அங்கே சஞ்
சரித்துக்கொண்டிருந்தாள். அங்குத் தற்செயலாய் காசிப வம்சத்
திற் பிறந்தவராகிய ஒரு வாலிபமுனிவர் வந்து ஸுலோசனை
யைக் கண்டனர். தவம்பலகூடி இவ்வாறு முனிவர் உருவங் கொ
ண்டுள்ளது வென்று எவரும் புகழத்தக்க தேஜஸுடையவரா
யிருந்தும், அம்முனிவர், ஸுலோசனையைக்கண்டதும் அவள்

மீது காதல்கொண்டனர். ஆச்சரியம்! இவளுடைய இந்த ரூபம் அதியற்புதமானது; மனோகரமானது; இவளை யான் மனைவியாகப்பெறுவிடின் என் தவத்தின் பலன் யாதாம்? என்று தமக்குள் யோசித்தவாறு தயங்கி நின்றனர். அச்சமயம் ஸுலோசனை புகையென்பது சிறிதுமில்லாத அக்னிபோல் விளங்கும் அம்முனிவரைக் கண்டாள். உடனே மனதில் என்றுமடையாத ஆநந்தமடைந்து, இவர்கையில் கமண்டலமும் ஜபமாலையும் கொண்டிருக்கின்றனர். யாரோ மகான் என்பதில் ஐயமில்லை. முகம் இவரது பரமசாந்தகுணத்தை நன்கு விளக்குகின்றது. இவரை யாரென்று கேட்டுத் தெரிந்துகொள்வோம் என்று யோசித்து அக்கணமே அம்முனிவர் முன்வந்து அவருக்கு மணமாலை சூட்டியதற்கொப்ப அவருடைய தேகத்தில் தன் கண்களாகிய கருநெய்தல் மாலையைவீசினாள். தேவர்களாலும் அசுரர்களாலும் ஆக்ரமிக்க முடியாத மன்மதனுடைய ஆக்ஞையின் வசமான அம்முனிவர் ஸுலோசனையை நோக்கி, “பெண்ணே நீ கணவனை யடைவாயாக” என்று ஆசீர்வதித்தனர். அசாதாரணமான அம்முனிவருடைய சௌந்தரியத்தில் ஈடுபட்டு ஆசைகொண்ட அந்த ஸுலோசனை வெட்கமுற்று தலைகுனிந்தவாறு நின்று, “தேவ! தங்களுக்கு விவாகஞ்செய்து கொள்ள விருப்பமிருக்குமாயின், இந்நாட்டு மன்னனாகிய என் தந்தையிடம் சென்று அவரநுமதி பெற்று என்னை மணஞ்செய்து கொள்ளலாம்” என்றாள். முனிவர், “அவ்வாறே செய்கின்றேன்” என்றுகூறி ஸுஷேண ராஜனிடம் சென்று தமது விருப்பத்தைத் தெரிவித்தார். அரசன் தவத்தாலும் சரீரத்தாலும் உயர்வைபடைந்த முனிவரை உபசரித்து “சுவாமி! இக்கன்னிகை ரம்பை யென்னும் அப்ஸர ஸ்திரீயினிடம் எனக்குப் பிறந்தவள்; இந்தப் பெண்ணுக்கு மணஞ்செய்விப்பின், மீண்டும் அந்த ரம்பையோடு எனக்கு ஸ்வர்க்கத்தில் சேர்க்கையுண்டாகும்; அந்த ரம்பை என்னைவிட்டுப் பிரியும் தருணத்தில் இவ்வாறு தெரிவித்துச் சென்றாள். மகா பாக்கியசாலியாகிய தபோதனரே! அப்படிப்பட்ட சம்பந்தம் எனக்கு எவ்வாறுண்டாமென்பது பற்றித் தாங்கள் ஆலோசித்து நிரூபணம் செய்தல் வேண்டும் என்று கேட்டான். முனிவர்



இதைக்கேட்டு க்ஷணப்பொழுது ஆலோசனையிலிருந்து, அரசனே! முன் மேனகையிடம் உண்டான பரமத்வரையைப் பாம்பு தீண்டியபோது ருரு என்னும் முனிவர் தம்முடைய ஆயுளிற் பாதியை யளித்து அந்த ரம்பையை மனைவியாக வடையவில்லையா? விசுவாமித்ர முனிவர் புலையனாகிய திரிசங்குவை ஸொர்க்கத்திற் கழைத்துச் செல்லவில்லையா? ஆகையால் நானேன் என் தபோ பலத்தினால் அச்செய்கையை நிறைவேற்றக் கூடாது? இது எனக்குப் பெரிதல்ல,—என்று கூறி உபரப்பார்த்து, “தேவதைகளே! இந்தச் சுஷேணராஜன் என்னுடைய தவவன்மையால் இச்சரீரத்துடன் ஸொர்க்கம் சென்று ரம்பையினிடம் போகமனுபவிக்கட்டும்” என்று கூறினர். அக்கணமே ராஜசபையிலுள்ள எல்லோருடைய செவியிற்படுமாறு “அவ்வாறே யாகுக” என்று தேவவாக்குண்டாயிற்று. பின்னர் அவ்வரசன் மனமுவந்து தன்குமாரி ஸுலோசனையை அம்முனிவருக்கு மணஞ்செய்து கொடுத்து ஸொர்க்கஞ் சென்றான். அங்கே அவ்வரசன் தெய்வத்தன்மை யடைந்து இந்திரனனுமதிப்படி தன்னிடம் வந்த ரம்பையுடன் போகங்களை யனுபவித்திருந்தான்.

தேவ! இவ்வாறு ஸுஷேண ராஜன் தன் புதல்வியால் கிருதார்த்தனானான். தங்களைப் போன்றவர்களுடைய கிருகங்களில் இப்படிப்பட்ட கன்னிகைகள் பிறக்கின்றனர். ஆகையால் இவள் தேவகன்னிகை யாவள்; ஏதோ சாபத்தின் காரணமாகத் தங்களிடம் பிறந்திருக்கிறாள். பிரபுவே! தாங்கள் இனித் துக்கிக்க வேண்டாம்—என்று அரண்மனைப் பண்டிதர் கதைகூறி களிங்கதத்தராஜன் மனமுவந்து, கவலை யொழிந்து நேத்திரோற்சவமாக விளங்குபவளும் சந்திரகலை போன்றவளும் பாலையுமாகிய அந்தக் குமாரத்திக்குக் களிங்கஸேனை யென்னும் பெயர் புனைந்து நாம் கிருதார்த்தனானோமென் றிருந்தான்.

அப்பால் ராஜகுமாரியாகிய அந்தக் களிங்கசேனை தந்தையின் கிருகத்தில் குறைவற்ற செல்வத்தோடு வளர்ந்து வந்தாள். க்ரீடையாகிய நீர் நிறைந்த பால்யமாகிய கடலின் ப்ரவாகம்போன்ற

களிங்கஸேனை உப்பரிகைகளிலும் வனங்களிலும் கிருஹங்களிலும் விளையாடி வந்தாள். இவ்வாறிருக்கையில் ஒரு நாள் அந்தக் களிங்கஸேனை உப்பரிகையின் மீது விளையாடிக்கொண்டிருக்கையில் ஆகாயமார்க்கமாகச் சென்ற மயன் என்னுமொரு அசுரனுடைய குமாரியாகிய சோமப் பிரபை இவளைக் கண்டாள். முனிவர்களின் மனத்திற்கும் மோகமூட்டும் அழகினையுடைய களிங்கஸேனையைக் கண்டதும் அந்த ஸோமப்பிரபை "இவள் யார்? சந்திரகலையோ? சந்திரகலையாயின் இந்தப் பகல்வேளைக்கு அதற்குக் காந்தியெப்படி யேற்படும்? ரதியாயிருக்கலாமெனின் காமனைக் காணோமே! ஆகையால் இவள் யாரோ ஒரு மானிடகன்னிகையாயிருக்கவேண்டும்; இல்லாவிட்டால் தேவஸ்திரீ சாபத்தினுல் இவ்வாறு புவியை யடைந்திருக்க வேண்டும் முன்ஜன்மத்தில் எனக்கு இவளுடன் சினேகமுண்டாயிருக்க வேண்டுமென்பது நிச்சயம். இதை என்மனமே தெரிவிக்கின்றது. ஆகையால் இவளை என் சுயம்வரத்திற்குற்ற தோழியாகக் கொள்கின்றேன்—என்று யோசித்துக்கொண்டு தன்னைக்கண்டு அந்தக் களிங்கஸேனை அஞ்சுவளோவென்னும் ஐயமுற்று ஆகாயத்திலிருந்து தன்னையாரும் காணுதபடி கீழே யிறங்கினுள். உடனே அந்த ஸோமப்பிரபை மானிடவுருவ மெடுத்துக்கொண்டு களிங்கஸேனையை நோக்கி மெதுவாக நடந்துவந்தாள். அவளைக்கண்ட களிங்கஸேனை, ஆ! இவள் யார்! அதிஅற்புதமான ஆகிருதியுடையவளாக விருக்கின்றுள். அவளைப்பார்த்தால் ஒரு ராஜகன்னிகைபோ விருக்கின்றுள்; இவள் எனக்கேற்ற தோழியாவாள்போ விருக்கின்றது என்றெண்ணி, எதிர்கொண்டு புன்முறுவலுடன் "வாரும் அம்மா" என்று அன்போடழைத்து வரவேற்று ஆசனத்துட்காரவைத்து வரலாறும் பெயரும் விசாரித்தாள். ஸோமப்பிரபை களிங்கஸேனையை நோக்கி, அம்மணீ! என்னருகில் உட்காரு; கூறுகின்றேன் என்று சொல்லுகின்றுள்.

அம்மா நீயோ ஒரு ராஜகுமாரத்தி; ராஜகுமாரர்களுடைய நட்பைப் பிரயாசத்தின்மீது காப்பாற்ற வேண்டியதாக யிருக்கின்



றது. அவர்கள் அற்பமான அபராதத்திற்கும் கோபங் கொள்ளுகின்றனர். இது சம்பந்தமாக ஒரு கதை யெனக்குத் தெரியும்; அதைக் கூறுகின்றேன், பொறுமையுடன் கேட்பாயாக.

புஷ்காரவதி யென்னுமொரு பட்டணத்தில் கூட ஸேனன் என்னுமொரு அரசனிருந்தான். அவ்வரசனுக்கு ஒரு மைந்தனிருந்தான். தனக்கு அந்த மைந்தனையன்றி வேறு சந்ததியில்லாமையால் அவ்வரசன், அவன் கர்வங்கொண்டு நன்மைதீமைகளெவற்றைச்செயினும் கோபங்கொள்ளாமல் மனம் பொறுத்திருப்பான்.

இவ்வாறு செல்வமாயிருக்கும் அவ்வரச குமாரன் ஒருநாள் ஒரு நந்தவனத்தில் உலாவிக்கொண்டிருக்கும்போது ஒரு வர்த்தக குமாரனைக்கண்டான். அவனும் அவன் தந்தைக்கு ஏகபுத்திரன். அவன் பெயர் பிர்மதத்தன். அவனுக்கு இந்த அரசகுமாரனுக்குச் சமானமான ஐசுவரியமுண்டு; ஆகிருதியில் அரசகுமாரனைப்போலவே யிருப்பான். அவனைக்கண்டதும் அரசகுமாரனுக்கு அவனிடம் பிரியமுண்டாகி அவனேடு சம்பாஷித்துச் சினேகங்கொண்டான்.

அன்று முதல் அவர்களிருவரும் ஒரு நாளேனும் ஒருவரையொருவர் பார்க்காம லிருப்பதில்லை. நாடோறும் சந்தித்துச் சம்பாஷணை செய்து விரும்பியவாறு விளையாடி மகிழ்வார்கள். முன் ஜன்மத்தில் ஏற்பட்ட அநுசம்பந்தமானது பிரியமுடியாத அன்பை யுண்டாக்கு மல்லவா? ராஜகுமாரன் அவ்வர்த்தக குமாரனுக்குத் தான் உண்ணும் தின்பண்டங்களையும் பகிர்ந்து கொடுத்த பின்னரே புசிப்பான். இவ்வாருக விருக்கும் பொழுது ஒருநாள் அவ்வரசகுமாரன் தன் நண்பனுகிய வர்த்தககுமாரனுக்குத் தான் விவாகம் செய்து கொள்வதன் முன்னர் விவாகஞ்செய்விக்கக்கருதி அஹிச்சந்திரமென்னும் நகரத்திற்குப் பிரயாணமானுன். வர்த்தக குமாரனும் அவனேடு யானையின் மீது ஏறிச் சென்றுன். சைன்னியங்களும் கூடச்சென்றன. இவ்வாறு சென்ற இவர்கள் இக்ஷுமதி யென்னும் நதியையடைந்தார்கள்.

அச்சமயம் அருணனும் அஸ்தமனமாயினன். அப்பொழுது அங்குத்தங்கி மதுவும் உணவும் உண்டு சயனித்துக்கொண்டார்கள். அவ்வரசகுமாரனுடைய இளையதாயாரும் அவர்களுடன் வந்திருந்தாள். அவள் தன் குமாரனைப்பார்த்து ‘அப்பா! ஒரு கதை சொல்லுவாயாயின் மனத்திற்குச் சந்தோஷமா யிருக்குமென்று கூறினள். அரசகுமாரன் உடனே ஒருகதை சொல்லத்தொடங்கிப் பின் சிறிது நேரத்திற்கெல்லாம் அதை முடிப்பதற்குள் நித்திரை போய்விட்டான். அவன் சிறிய தாயாரும் பின் சற்று நேரத்திற்கெல்லாம் நித்திரை போயினள். வர்த்தக குமாரன் மாத்திரம், தூங்காமல் விழித்துக்கொண்டே படுத்துக்கொண்டிருந்தான். மற்றும் எல்லோரும் நித்திரை போய்விட்டனர். அச்சமயம் ஆகாயத்தில் சில ஸ்திரீகள் பின்வருமாறு சம்பாஷித்துக் கொண்டனர்.

இவ்வரசகுமாரன் கதைசொல்லத் தொடங்கி அதை முடிப்பதற்குள் நித்திரை போய்விட்டான்; ஆகையால் இவன் பாபியாகின்றான். இவனை நான் சபிக்கின்றேன்; இவன் தூங்கி விழித்தவுடன் ஒரு ஹாரத்தைப் பார்ப்பான். அதைக் கையிலெடுப்பானாயின் அக்கணமே மரணமடைவான்—என்று ஒருஸ்திரீ கூறினாள். மற்றொரு ஸ்திரீ, அதிலிருந்து இவன் தப்புவானாயின், ஒரு மாமரத்தைக் காண்பான், அதிலிருக்கும் கனிகளைப் பறிக்க நினைப்பானாயின் ப்ராணவியோகத்தை அக்கணமே பெறுவான் என்று சாபங் கொடுத்தாள். வேறொரு ஸ்திரீ அந்தச் சாபத்திற்குத் தப்புவானாயின், விவாகத்தின் பொருட்டு கிருகத்தில் பிரவேசிக்கும்போது இவன் தலையில் அந்தக்கிருக மிடிந்துவிழும்; மரணமடைவன் அக்கணமே என்றாள். பின்னுமொரு ஸ்திரீ, இவன் அதற்குத் தப்புவானாயின், சயனகிருகத்தில் பிரவேசித்தவுடன் நூறு முறை தும்முவான். அந்த நூறுதடவைகளிலும் “நீவாழ்வாயாக” என்று எவனேனும் இவனருகேயிருந்து சொல்லாவிடின் மரணமேற்படுவது நிச்சயம். இவற்றை எவனாவது கேட்டுக்கொண்டிருந்து இவ்வரசகுமாரனைக் காப்பாற்றுவதற்காக இவனிடம்



சொல்வானாயின், சொன்னவனுக்கும் மரணமுண்டாம் என்று கூறி மௌனமாயிருந்தான். இடிபோல் செவியில் விழுந்த இச் சம்பாஷணையைக்கேட்ட வர்த்தக குமாரன் அந்த அரசகுமாரனிடத்துச்சிநேகமுள்ளவனாகையால் வருத்த முற்றுத் தனக்குள் ஆலோசிக்கின்றான்.

நான் கதைசொல்ல ஆரம்பித்துத் தொடங்கிய கதையை முடிக்காதுவிட்டமையின், கதைகேட்கும் ஆவலோடிருந்த இந்தத் தேவதைகள் மறைந்திருந்து சாபங்கொடுத்தனர். இவர்களைச் சுடவேண்டும். என் நண்பனாகிய இந்த இராஜகுமாரன் மரணமடைவானாயின் நான் உலகிலிருந் தென்னபயன்? எந்த யுக்தி செய்தாவது உயிருக்குயிராகிய என்னுடைய நண்பனை நான்காப்பாற்றவேண்டுவதவசியம்; இந்த இரகசியத்தை இவனுக்குத்தெரிவிக்காமலே காரியம் சித்திபெறவேண்டும் என்று ஆலோசித்துக்கொண்டிருக்கையில், அன்றைப்பொழுது விடிந்தது. அருணன் கீழ்த்திசையில் உதயமாயினன். பின்னரிருவரும் அவ்விடம் விட்டுப் புறப்பட்டுச் சென்றார்கள். சிறிதுதூரம் சென்றதும், வழியில் ஹாரமொன்று கிடக்கக் கண்டனர். அதை இராஜகுமாரன் கையிலெடுக்கப்போனான். அப்பொழுது வர்த்தக குமாரன், “நண்ப! இந்த ஹாரம் மாயை; இதையெடுக்காதே; இஃதிங்கிருந்திருக்குமாயின் இங்குள்ள சேனைகள் இதை எவ்வாறு பாராமலிருந்திருத்தல்கூடும்? அரசகுமாரன், “அப்படியா! என்ன ஆச்சரியமிது” என்று கூறி வியப்புற்று அதை யெடுக்காமல் அப்பாற் செல்லும்போது, ஆங்கோர் மாமரத்தைக் கண்டான். அதில் கனிகள் நிறைந்திருந்தன. அக்கனிகளைப் பறித்துண்ண விரும்பினான் ராஜகுமாரன். வர்த்தககுமாரன் “நீ இம்மரத்தின் கனியைப்புசிக்க விரும்பாதே” என்றுகூறி அவனைத் தடுத்தான். அரசகுமாரன் எனிவ்வாறு எதையும் தடுத்து வருகின்றான்; ஏதேனும் விசேஷமிருக்கும்; அதனாலேதான் இவ்வாறு செய்கின்றான் என்று நினைத்து வர்த்தககுமாரன் கூறியபடி அம்மரத்தின் கனிகளிற் கொண்ட ஆவலை விட்டு அப்பால் நடந்தான். வர்த்தககுமாரனுக்கோ மனதிற் சொல்லமுடியாத வருத்தம்; இவனை இவ்விரண்டுவிபத்தினின்றும் தப்புவித்தேன்; இனிவரவிருக்கும் விபத்துக்களினின்றுந் தப்புவித்தாலன்றோ நான் எனது பிரதிக்ஞையை

முடித்தவனாவேன் என்று யோசித்தவாறே நடந்தான். இருவரும் மறுநாள் மாமனுடைய வீட்டிற்குச் சென்று விவாகத்தை யுத்தேசித்து வர்த்தகனுடைய வீட்டிற்குள் பிரவேசிக்கும்போது வர்த்தககுமாரன் அங்கு வாயிற்படியி லிருந்து ராஜகுமாரனைத் தடுத்தான். உடனே அவ்வீடு இடிந்துவிழுந்தது. பின்னர் இருவரும் அங்கிருந்த பெண்ணை யழைத்துக்கொண்டு வேறொரு வீட்டிற் கேகினர். அவ்வீட்டிற்துட் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் வர்த்தககுமாரன் தான் எங்கேயோ ஒரு வேலையாகப் போவது போல் இராஜகுமாரனை விட்டுப் பிரிந்து அவனை யறியாமல் அவ்வீட்டிற்குள்ளேயே மறைந்திருந்தான். பிறகு இராஜகுமாரன் அந்தப் பெண்ணுடன் படுக்கையில் சயனித்துக்கொண்டு பலபல பேச்சுக்கள் பேசிக்கொண்டிருந்தான். அச்சமயம் அவ்வரசிளங்குமாரன், அடுத்தடுத்து நூறு தடவை தும்மினான். அவன் தும்மும்பொழுதெல்லாம் அவனை யறியாமல் மறைந்திருந்த வர்த்தககுமாரன் "நீ வாழ்வாயாக! நீ வாழ்வாயாக!" என்று நூறுமுறையுந் தவறாமல் மெதுவாகக் கூறி உடனே வெளிப்பட்டு அப்பாற் சென்றான். அப்பொழுது அவனை அரசகுமாரன் பார்த்து "இவன் இந்நேரம்வரையில் இங்கு ஒளிந்திருந்து நாமிந்தப் பெண்ணுடன் பேசியபேச்சுக்களை யெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தான்; வெளியேபோய்வருவதாகப்பொய் வார்த்தை கூறினான்" என்றெண்ணிச் சினங்கொண்டு தான் அவனிடம்கொண்டிருந்த அன்பையும் நம்பிக்கையையும் மறந்து, அவ்வறையைவிட்டெழுந்து வெளியேவந்து வாயிற் காப்பவர்களை நோக்கி, "இவ்வர்த்தக குமாரன் கெட்ட எண்ணத்துடன் நானும் மனைவியும் சயனித்துக்கொண்டிருக்கும்போது என் னரண்மனை புகுந்து மறைந்திருந்து வெளிப்படுகின்றான். இவனைக் கொலை செய்யவேண்டும். இவனை விடாமற் பிடித்துக் கட்டிவையுங்கள்" என்று ஆக்ஞை செய்தான். அவ்வாறே காவலாளிகள் வர்த்தககுமாரனைப் பிடித்து அன்றிரவு முழுவதும் கட்டி வைத்திருந்தனர். பொழுது விடிந்ததும் அவனைக் கொலைக்களத்திற்கு அழைத்துச் சென்றனர். அப்பொழுது வர்த்தககுமாரன் கொலையாளிகளை நோக்கி, "நான் இராஜகுமாரனைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லவேண்டும்; ஆகையால் நான் கொலை செய்யப்படுவதற்கு முன் என்னை அவனிடம் அழைத்துச் செல்லுங்கள்; அப்பால் என்னை நீங்கள் கொலை



செய்யலாம்" என்று பிரார்த்தித்துக்கொண்டான். அவன் பிரார்த்தனைக் கிணங்கிய அக்கொலையாளிகள் அவனை இராஜகுமாரனிடம் அழைத்துவந்து நிறுத்தினர். அப்பொழுது வர்த்தககுமாரன், இராஜகுமாரனிடம் முன் நடந்த வரலாற்றையும் தான் அதற்கேற்ற உபாயஞ் செய்ததையும் கூறினான். அதைக் கேட்ட அரசகுமாரன் தன்னுடைய மூடத்தனத்திற்கு வருத்தமுற்று, வர்த்தககுமாரனை மன்னிப்புக் கேட்டுக்கொண்டான்.

பின்னர் அடுத்த நாள் அரசகுமாரன் அப்பெண்ணை விவாக முறைப்படி மணந்துகொண்டான். வர்த்தக குமாரனுக்கும், அங்கொருவர் அவன் குணாதிசயங்களுக் குகந்து தமது பெண்ணைக் கொடுத்து விவாகத்தை முடித்தனர்.

தடையற்றனவும், மதங்கொண்ட விடத்துத் தங்கள் யஜமானனைக் கொல்ல முயல்வனவுமாகிய யானைகளைப்போல், தடையற்றவர்களாகிய சில இராஜகுமாரர்கள் இவ்வாறு தங்களுக்கு நன்மை செய்பவர்களைக் கொல்ல மூடத்தனத்தால் யத்தனிக்கின்றனர். தாங்கள் அடைந்த நன்மையை நினைப்பதில்லை. அப்படிப்பட்டவர்கள் வேதாளங்களுக்குச் சமானமானவர்கள். சிரித்துக்கொண்டே பிராணனைக் கொள்ளை கொள்பவர்கள். ஆகையால் ஏ ராஜபுத்திரியே! எப்போதும் சிநேகம் வேண்டாம் என்று கூறினாள் ஸோமப்பிரபை.

இவ்வாறாகிய இக்கதையைக் கேட்ட களிங்கஸேனை, ஸோமப்பிரபையை நோக்கி, "தோழி! இவர்கள் இராஜகுமாரர்களல்லர். பிசாசங்கள். பிசாசங்களை வசப்படுத்துவது வெகு சிரமமான காரியம். அதற்கொரு கதையுண்டு; கேள்—

முன்னொருகாலத்தில் யஞ்ஞஸ்தலம் என்னுமொரு அக்கிரகாரத்தில் அந்தணனொருவ னிருந்தான் அவன் நல்குரவென்னும் பேயின் வாய்ப்பட்டு வருந்திக்கொண்டிருந்தான். ஒரு சமயம் அவன் விறகுகொண்டுவர அடுத்த வனத்திற்குச் சென்று கோடரிகொண்டு ஒரு மரத்தைப் பிளந்தான். அப்பொழுது கோடரி தவறி அவனுடைய கணுக்காலில் விழுந்தது; அதனால் காயமுண்டாகி இரத்தம் பெருகிற்று. அந்தக் காயத்துள் ஒரு மரத்துண்டும் சென்றுவிட்டது. அதனால் அவ்வந்தணன் வருத்த

மடைந்து தன் விதியை நினைத்து அழுதுகொண் டிருந்தான்; அவ்வழியே சென்ற ஒருவன் அவனருகே சென்று அவன் கால் காயத்தில் ஏறியிருந்த மரத் துண்டைப் பிடுங்கியெடுத்து அவனைத்தேற்றித் தன்னுடன் மெதுவாக அழைத்துக் கொண்டுபோய் அவனுடைய வீட்டில் சேர்த்து விட்டுத் தன் வழியே சென்றான். தன் புருஷனுக்கு நேர்ந்த விபத்தைக் கண்டு மனஞ்சகியாத அவ்வேதியன் மனைவி அவனுடைய காயம் ஆறுவதற்கு வேண்டிய சிகிச்சைகளைத் தக்கவாறு சிறிதுந் தாமதியாமற் செய்தாள்; எவ்விதமான சிகிச்சையாலும் அது குணப்படவில்லை. அது நாளுக்கு நாள் அதிகமாகிக் கடைசியில் நரம்பில் பற்றிக்கொண்டது. வர வர வேதியன் மெலிந்து மாண மடையுந் தசையை யடைந்தான்.

அச்சமயம் அவ்வேதியனுடைய பழைய நண்பனொருவன் அங்கு வந்து அவனைநோக்கி, "நண்ப! யக்ஞதத்தனென்னும் ஒரு நண்பர் எனககிருக்கிறார்; அவர் பிசாசங்களைச் சாதகப் படுத்திக்கொண்டு பலவாறான நன்மைகளை யடைந்துவருகின்றார்; அவரிடமிருந்து நானும் பிசாசங்களைச் சாதகப்படுத்தும் வழியைக்கற்றுக்கொண்டிருக்கின்றேன். நான் அதை உனக்குச்சொல்லி வைக்கின்றேன். நீயும் பிசாசங்களைச் சாதகப்படுத்திக்கொள்; அப்பொழுது இப்புண் ஆறிவிடும்" என்று கூறி ஒரு மந்திரத்தை உபதேசித்து, "நண்ப! இரவில் கடைசி ஜாமத்திலெழுந்திருந்து தலைவிரிகோலமாய் நிர்வாணியாக விருந்து ஆசமனம் செய்யாமல் இரண்டு கை அரிசியுடன் இம்மந்திரத்தை ஜபித்துக்கொண்டே நாற்சந்திக்குச் செல்லவேண்டும்; அங்கே நீ கொண்டுபோகும் இரண்டு கை அரிசியையும் வைத்துவிட்டு மௌனமாகவே திரும்பிவிடவேண்டும்; வரும்போது அப்பக்கம் திரும்பிப் பார்க்கவே கூடாது. பிசாசம் பிரத்தியட்சமாகும் வரையில் இவ்வாறு செய்தல்வேண்டும். சிலநாளையில் பிசாசு பிரத்தியட்சமாகி "நான் உன் வியாதியை நீக்கி விடுகின்றேன்" என்று கூறும். பின்னர் அப்பிசாசை நீ சந்தோஷப் படுத்தவேண்டும். உனது வியாதி கட்டாயம் இவ்வுபாயத்தால் நீங்கும். சந்தேகமே கிடையாது" என்றான். இவ்வாறு தன் நண்பன் கூறக் கேட்டதும் அவ்வேதியனுக்குச் சிறிதுயிர் வந்தது. நாம் பிழைப்போ



மென்னும் நம்பிக்கை கொண்டான். மறுநாள் முதல் அவ்வுபாயத்தை யநுசரிக்கத் தொடங்கினான். சிலநாளையில் பிசாசு அவன் வசமாயிற்று. அது உடனே இமயமலையிலிருந்து தக்க மூலிகை கொண்டு வந்து அப்புண்ணை யாற்றிற்று. அதனால் அவ்வேதியன் மனமகிழ்ச்சியடைந்து தனக்கு உபதேசித்த தன் நண்பனையும் வாழ்த்தினான். பிசாசு அவ்வேதியனை மற்றொரு சமயம் பார்த்து, "யாருக்கேனும் இம்மாதிரி வியாதி யிருந்தால் தெரிவிக்கலாம்; அதையும் சொஸ்தப்படுத்துகின்றேன்; இல்லாவிட்டால் நான் உமக்குத் தீங்குண்டாக்குவேன்; அல்லது உம்மைக் கொன்றுவிடுவேன்" என்றது.

இதைக்கேட்டதும் வேதியன் முன் அடைந்த மகிழ்ச்சியினும் பதின்மடங் கதிகமான வருத்தமுற்றுப் பயந்து, "பிசாசே! இன்னும் ஏழு நாட்களில் உனக்குப் புண்ணைக் காட்டுகின்றேன்" என்று கூறி அன்று தப்பித்துக்கொண்டான். அப்பால் வேதியன் இனி நாம் இப்பிசாசுக்குத் தப்பிப் பிழைக்கப் போவதில்லையென்று தீர்மானித்து விட்டான்.

இவ்வாறு களிங்கசேனை கதை சொல்லி வரும்போது, நாம் அமங்களமானதைச்சொல்லக்கூடாதென்று வெட்கமுற்றுச்சிறிது நேரம் மௌனமாக விருந்து மீண்டும் ஸோமப் பிரபையை நோக்கி, "தோழி! கேள்: அவ்வேதியன் இவ்வாறு வருந்திக் கொண்டிருக்கையில் அவன் மகள் அவனுடைய வருத்தத்திற்குக் காரணங் கேட்டுத் தெரிந்துகொண்டு "தாங்கள் இதற்காகக் கவலைப்படவேண்டாம். நான் அந்தப் பிசாசை வஞ்சிக்கின்றேன். மறுபடி அப்பிசாசு உம்மிடம் வரும்போது நீர் அதைப் பார்த்து 'என் பெண்ணுக்கு நரம்புப் புண்ணிருக்கின்றது; அதைச் சொஸ்தப்படுத்தவேண்டும்' என்று தெரிவியுங்கள்; நான் அதை வசப்படுத்தி வஞ்சிக்கின்றேன்" என்றாள். அதைக் கேட்ட வேதியன் மகிழ்வுற்று, பிசாசின் வருகைக் கெதிர்பார்த்திருந்து அது வந்ததும் தன் புத்திரியிடம் போகும்படி சொன்னான். பிசாசு அவ்வாறே அவளிடம் சென்று, "எங்கே உனக்குப் புண்ணிருக்கிறது" என்று கேட்டது. அப்பெண் தன்னுடைய இரகசிய ஸ்தானத்தைக் காட்டிப் புண் இங்குத்தானிருக்கிறது என்று கூறினாள். பிசாசு அதைப் புண்ணென நம்பித் தன்னாலியன்றவரையில் தனக்

குத் தெரிந்த மூலிகைகளை யெல்லாம் கொண்டுவந்து சிகிச்சை
செய்து பார்த்தும் அஃது அவ்வாறேயிருந்தமையின் வருத்தமு
ற்று, ஏன் இப்புண் ஆறவில்லை யென்று சோதிக்கையில் அபானத்
வாரத்தைக்கண்டு மற்றொரு புண் உண்டாயிருக்கிறதே;நாம் சிகிச்
சை செய்ததற்கு அடையாளமாவிது என்று வியப்பும் வருத்தமு
மடைந்து சங்கடகாலத்தில் அநர்த்தங்கள் மிகுதியாகும் என்னும்
உலகவசனம் உண்மையாயிற்று ; உலகங்கள் உண்டாகின்றன;
அவை லயமுமடைகின்றன; இந்த ஸம்ஸார மார்க்கத்தை யாவரே
மறைக்கச் சக்தியுள்ளவர் என்று ஆலோசித்து, ஒரு புண்ணுக்கு
வைத்தியஞ் செய்ய வந்தவன் இன்னொரு புண்ணையும் உண்டாக்கி
விட்டான் பாதகன் என்று நம்மைக் கட்டிப்பிடித்து அடித்து
உயிரை வாங்கிவிடுவார்கள் ; நாமிங்கிருக்கக் கூடாதினி யென்று
பயந்து உடனே ஓடிப்போய்விட்டது.

பிசாசுகள் இவ்வாறான செய்கையுடையன. மூடர்களாகிய
இராஜகுமாரர்கள் இவைகளுக் கொப்பானவர்களே யாவர். அவர்
கள் செய்கைள் அநர்த்தமாகவே முடிகின்றன. தோழி! புத்தி
யுடையவர்கள் கவனித்தல் வேண்டும். நல்ல குலத்திற் பிறந்த
ராஜகுமாரத்திகள், இவ்வாறிருந்ததாகக் கேள்விப்பட்டதில்லை.
தோழி! என் நட்பைப்பற்றி நீ வேறுவிதமாக எண்ணாதே" என்று
கூறினாள்.

இவ்வாறு ஹாஸ்யமும் விசித்திரமும் மதுரமுமான கதை
யைக் கேட்டு மகிழ்வுற்ற ஸோமப் பிரபை, "தோழி! இங்கிருந்து
அறுபது யோசனை தூரத்திற்கப்பால் என் கிருகமிருக்கின்றது.
நாட்கள் கழிகின்றன. வெகுநாளிருந்துவிட்டேன். நான் போய்
வருகின்றேன்" என்றாள். அப்பொழுது அருணன் அஸ்தமனகிரி
யை யடைந்தான். தன்னிடம் விடைபெற்றுச் செல்லும் ஸோமப்
பிரபையைக் களிங்கஸேனை பார்த்து, "என் அன்புள்ள தோழி!
நீ என்னை மறவாமல் வந்து போகவேண்டும்" என்று கேட்டுக்
கொண்டாள். ஸோமப்பிரபை அவ்வாறே செய்கின்றேன் என்று
அன்போடு பதிலளித்து உடனே கிளம்பி ஆகாய வழியே தன்
கிருகம் சென்றாள். இந்த ஆச்சரியத்தைக் கண்ட களிங்கசேனை
"ஆச்சரியம்! என் தோழியாகிய இவள் ஸித்த ஸ்திரீயோ அல்
லது வித்தியாதர ஸ்திரீயோ தெரியவில்லை. இவள் ஆகாய மார்க்



கத்தில் சஞ்சரிக்கும் தேவஸ்திரீயாக இருக்கவேண்டும். தேவ
ஸ்திரீகள் நிகரற்ற நட்பின் நன்மைக்கு வசப்பட்டு மானிடர்க
ளுடன் பழகுகின்றார்கள். பிருது மகாராஜாவின் குமாரியுடன் அருந்
ததி ஸ்நேகமடையவில்லையா? அந்தப் பிருது மகாராஜன் காம
தேனுவை ஸ்வர்க்கத்திலிருந்து இந்தப் புவிக்குக் கொண்டுவர
வில்லையா? அந்தப் பிருதுராஜன் பிரஷ்டனேயாயினும் அப்பசு
வின் பாலைக்குடித்துப் பரிசுத்தத் தன்மை பெறவில்லையா? எனக்
குண்டாகப்போகும் நன்மையின் பொருட்டே இந்தத் தேவஸ்திரீ
எனக்குச் சிநேகமாயினள். நான் கிருதார்த்தையானேன். அடுத்த
சமயம் என் தோழி வரும்போது அவள் வம்ச வரலாற்றை நன்
றாய் விசாரிக்கின்றேன்—என்றிவ்வாறு யோசனை செய்துகொண்
டே அன்றிரவைக்கழித்தாள். ஸோமப்பிரபையும் தன் கிருகத்தை
யடைந்து மறுபடியும் நாம் நமது தோழியாகிய ராஜகுமாரத்தி
யைப் பார்க்கவேண்டுமென்னும் ஆவலுடனே அன்றிரவைக்
கழித்தாள்.

இரண்டாவது தரங்கம்

முற்றிற்று.



## மூன்றாவது தரங்கம்.



பின்னர் ஒருநாட் காலையில் ஸோமப்பிரபை, விநோதத்தை
யுண்டாக்குவதும், மாயாமயமான அநேக யந்திரங்களுடன்கூடிய
தும், மரத்தால் செய்யப்பட்டதுமான ஒரு பெட்டியுடன் ஆகாய
வழியே களிங்கஸேனையினிடம் வந்தாள். அவளைக்கண்டதும்,
களிங்கசேனை மனமுவந்து பரபரப்புடன் எழுந்து கட்
டித் தழுவி ஆசனத்தில் வீற்றிருக்கும்படி உபசரித்துத் தானும்
ஆசனத்தமர்ந்து, "ஸகி! உன்னுடைய முகமாகிய பூர்ணசந்திர
னுடைய தரிசனமின்றி இருள்மயமான இந்த இரவு நூறு யாம
முடையதுபோலக் கழிந்தது. எனக்கு முன் ஜன்மத்தில் எவ்வாறு
சம்பந்தமேற்பட்டிருக்கும்? இந்தப் பரிபக்குவம் எதனுடையது?
தேவி! அறிந்திருந்தால் தெரிவிக்கவேண்டுகின்றேன்" என்று
கேட்டாள். ஸோமப்பிரபை, "ஸகி! எனக்கு முன் ஜன்ம வர

லாற்றைத்தெரிந்து கொள்ளத்தக்க உணர்வு கிடையாது; முன்ஜன்மத்தையும் நான் நினைப்பதில்லை; முனிவர்களும் இதை யறியார்கள். ஆனால் சிலர் அறிந்து சொல்வார்கள். அவர்களின் புண்ய விசேஷமது. அப்படிப்பட்டவர்களை பரதத்துவத்தை யறிந்தவர்களென்று சொல்லப்படுகின்றார்கள்" என்று கூறினாள்.

இவ்வாறு மனோஞ்ஞமாகப்பேசிய ஸோமப்பிரபை மறுபடியும் ராஜ குமாரியைப்பார்த்து, "ஸகியே! நீ பிறந்ததால் தேவாம்சமாகச்சொல்லப்படும் எவருடைய வம்சம் அலங்காரத்தைப் பெற்றது? நேத்திராநந்தமான சொரூபமுடையவளே! உலகத்தவருடைய செவிகளுக்கு அமுதம் போன்றதான உன் பெயரென்ன? இப்பேழை எதன் பொருட்டேற்பட்டது? இதில் என்ன வஸ்து இருக்கிறது?" என்று கேட்டாள். ஸோமப்பிரபை, 'ஸகியே! கேள்; மூவுலகங்களிலும் தன் கீர்த்திப் பிரதாபம் விளங்கப் பெருமையுடன் வாழ்ந்து வந்த மயன் என்னும் ஓர் அசுரன் அசுரத்தன்மையை யொழித்துவிட்டு நாராயணனைச் சரணமடைந்து பக்தி செய்துவந்தான். அதனால் அசுரர்கள், இந்த மயன் தேவர்களுடைய சார்பிலிருக்கின்றான் என்றெண்ணிச் சினமடைந்து அவனைத் துன்புறுத்தத் தலைப்பட்டனர். அதனால் மயன் அசுரர்களுக்குப் பயந்து விந்தியமலைக்குச்சென்று தன் மாயையால் அங்கொரு பள்ளமேற்படுத்திக்கொண்டு அதில் வாசஞ்செய்து வந்தான். அந்தப்பள்ளமானது ஒரு கிருகம் போன்றிருந்தது; அது அசுரர்கள் ஒருவரும் பிரவேசிப்பதற்கு முடியாதவாறமைந்திருந்தது. பார்ப்பதற் காச்சரியமாக விளங்கியது. அவ்வாறு அந்தக் கிருகத்தில் வசித்து வந்த அவ்வசுரனுக்கு இரண்டு புத்திரிகளிருந்தார்கள். அவர்களுள் மூத்தவள் நான்; என் சகோதரி ஸ்வயம்பிரபையென்னும் பெயருடையவள். அவள் அந்தக்கிருகத்திலேயே யிருக்கின்றாள். என்னை என் தந்தை குபேரனுடைய குமாரனாகிய நளகூபரனுக்கு விவாகஞ் செய்து கொடுத்தார். பற்பல விதமான மாயா யந்திரங்களைச்செய்து உபயோகிக்க என் தந்தை எனக்குக் கற்பித்திருக்கின்றனர். அவ்விதமான யந்திரமொன்றமைந்த பெட்டியிது. நான் உன்னிடம் கொண்ட அன்பினால் இதை உனக்குக்கொண்டு வந்தேன்—என்றுகூறி அப்பெட்டியைத் திறந்து அதனுள்ளிருந்த யந்திரப் பதுமைகளை யெடுத்



துக் காண்பித்தாள். பின்னர் அந்த யந்திரத்திலொன்றைத் தட்டினாள். உடனே ஒரு பெண் வெளிக்கிளம்பி ஆகாயவழியே சென்று ஸோமப்பிரபையின் ஆக்ஞைப்படி ஓர் அழகான பூமாலையைக் கொண்டுவந்தாள். பின்னொரு யந்திரத்திலிருந்து ஒரு பெண் கிளம்பி அவ்வாறே ஒரு திவ்யமான குடத்தில் பரிசுத்தமான ஜலம் கொண்டுவந்தாள். இன்னொரு யந்திரத்திலிருந்து இன்னொரு பெண் வெளிவந்து ஆநந்தமாக நடித்தாள். மற்றுமொரு பெண் மற்றொரு யந்திரத்திலிருந்து வெளிப்பட்டு, சாதுக்கினிமையான கதைகளைச் சொல்லத் தொடங்கினாள். இவ்வாறான ஆச்சரிய சம்பவங்களால் சிறிது நேரங் களிங்கசேனைக்குச் சந்தோஷமுண்டாக்கிப் பின் அவளிடம் அன்பொடு விடைபெற்றுக்கொண்டு கணவனுக் கடங்கி நடக்கும் உத்தமியான அந்த ஸோமப்பிரபை ஆகாய வழியே தன் வீடுசென்றாள். களிங்கசேனையும் தான் என்றுங் காணாத ஆச்சரிய சம்பவங்களைக் கண்டதால் பசி நீங்கியவளாகி அன்று முழுதும் என்றுமடையாத ஆநந்தத்துடனிருந்தாள்.

இதைக் கண்ட அவள் தாய், நமது குமாரிக்கு ஏதோ நோய் கண்டிருக்கிறது போலும்! அதனாற்றான் அவள் போஜனஞ் செய்வதை மறந்திருக்கிறாள் என்று கருதி ஆநந்தன் என்னும் அவ்வூர் வைத்தியனை யழைப்பித்துத் தன் குமாரத்தியைப் பார்க்கும்படி செய்தாள். வைத்தியன் களிங்கசேனையினுடைய கையைப் பிடித்துப்பார்த்து, "இவளுக்கு வியாதி யொன்றுமில்லை; சந்தோஷ மிகுதியினால் இவள் தன் பசியையும் மறந்திருக்கிறாள்; இதற்கு மலர்ச்சியுடன் கூடிய இவளுடைய கண்களும் முகமுமே சாட்சியாக விளங்குகின்றன" என்று கூறினான். வைத்தியன் இவ்வாறு கூறியதும் தாயாகிய தாராதத்தை, தன் குமாரத்தியைப் பார்த்து "பெண்ணே! அவ்வளவு பெரிய சந்தோஷமுண்டாகக் காரணமென்ன?" என்று கேட்டாள்.

களிங்கசேனை நடந்த வரலாற்றை அன்னையாரிடம் தெரிவித்தாள். அந்தச் சமாசாரத்தைக் கேட்ட தாயார் மிகவும் மகிழ்வுற்றுத் தன் குமாரத்திக்கு உசிதமான உணவைக் கொடுத்தாள். மறுநாள் ஸோமப்பிரபை முன்போலவே வந்து விஷயங்களையறிந்துகொண்டு களிங்கசேனையை நோக்கி, "ஸகியே! உன்னுடன் நான் சேர்ந்திருக்கிறேன் என்பதை என் கணவன்

தெரிந்துகொண்டான். இனி நாடோறும் நான் இவ்விடம் வந்து உன்னுடன் சம்பாஷிப்பதற்கு உத்தரவு கொடுத்திருக்கிறான். ஆகையால் உன் பெற்றோர்களிடம் அனுமதி பெற்றுக்கொண்டு உன்னிஷ்டப்படி என்னுடன் சஞ்சரிக்கலாம்" என்று கூறினாள். உடனே களிங்கஸேனை அந்த ஸோமப்பிரபையை அழைத்துக் கொண்டு தன் பெற்றோர்களிடம் சென்று அவர்களிடம் ஸோமப் பிரபையின் வம்சத்தையும் அவளுடைய தாய் தந்தையரின்னாரென்பதையும் கூறினாள். இவ்விஷயத்தைத் தாய் தந்தையர்கள் கேட்டுச் சந்தோஷமெய்தினர். ஸோமப் பிரபையையும் தங்கள் பெண்ணிடம் கொண்ட அன்பால் தகுந்தவாறுபசரித்தார்கள்.

அப்பால், அவர்கள் ஸோமப்பிரபையைப்பார்த்து, 'இந்தக் களிங்கஸேனையை உன்னிடம் கொடுத்தோம்; நீங்களிருவரும் இணைபிரியா நண்பர்களாயிருந்து உங்களிஷ்டம் போல் விளையாடுங்கள்" என்று கூறினர். இதைக்கேட்ட ஸோமப்பிரபையும் களிங்கஸேனையும் சந்தோஷித்தனர். உடனே அங்கிருந்து புறப்பட்டு விளையாடுவதன் பொருட்டுஅரசனால் ஏற்படுத்தப்பட்டிருந்த வனத்திற்குச் சென்றார்கள். மாயையால் அமைந்த அந்தப் பெட்டியையும் அவர்கள் அங்கே எடுப்பித்துக்கொண்டு போயிருந்தார்கள். ஸோமப்பிரபை யந்திரமயனாகிய யக்ஷனைக்கிரஹித்துத் தன்னுடைய பிரயோகத்தால் புத்ததேவனைப் பூஜிப்பதற்காக அனுப்பினாள். அந்த யக்ஷன் ஆகாயமார்க்கமாக வெகு தூரம் வரையிற் சென்று, முத்துக்கள், உயர்ந்த இரத்தினங்கள் ஸ்வர்ணத் தாமரை முதலியன கொண்டு வந்தான். எல்லோருக்கும் ஆச்ரயத்தை யளிக்கவல்ல அந்த யக்ஷனைக்கொண்டு புத்தரைப் பூஜித்துக் கிருகங்களையும் மற்றுமுள்ள வஸ்துக்களையும் பிரகாசிக்கும்படி செய்தாள். இதனையறிந்து வியப்புற்ற அரசன்தன் மனைவியுடன் நந்தவனம் வந்து இஃதென்ன வென்று வினவினான். ஸோமப்பிரபை, "அரசனே! இது யந்திரத்தின் செய்கை! இந்த மாயா யந்திரங்களையும் சிற்பங்களையும் பலவாறாக என் தந்தை சிருஷ்டித்தார். இந்த உலகமாகிய யந்திரம் எவ்வாறு ஐந்து பூத வடிவமானதோ அவ்வாறே இந்த யந்திரங்களுமமைந்திருக்கின்றன. இவைகளைப் பற்றிக் கூறுகின்றேன் கேளுங்கள்—

பூமியை ப்ரதானமாகக்கொண்ட இந்த யந்திரம் எதுவோ அதைத் துவாரம் மூடிக்கொள்கின்றது. அதனால் மூடப்பட்டதை



ஒருவராலும் திறப்பதற்கு முடியாது. ஜல யந்திரத்திலிருந்துண்டான ஆகிருதியானது ஜீவனுடையதுபோற் காணப்படுகின்றது. தேஜோ மயமான யந்திரமானது ஜ்வாலைகளைக் கக்குகிறது. வாயு யந்திரமானது அசைதல், போதல், வருதல் இவற்றைச் செய்கின்றது. ஆகாய யந்திரமானது சம்பாஷணையைப் பிரகாசபப்டுத்துகிறது. இந்த யந்திரங்களை நான் என் தந்தையிடமிருந்து பெற்றேன். அமுதத்தையுங் காப்பாற்றத் தக்கதொரு யந்திரத்தையும் என் தந்தையறிவார். வேறொருவரும் இதை யறியார்" என்று கூறினாள்.

இவ்வாறு கூறிய அந்த ஸோமப்பிரபையின் வார்த்தைக்குத் திருஷ்டாந்தமாக அச்சமயம் சங்கத்வனி யுண்டானது. அதுகேட்டு, எல்லோரும் அதிசயமெய்தினர். அப்பால் ஸோமப்பிரபை அவ்வரசனிடம் விடைபெற்று, யந்திரத்தினாலேற்பட்ட விமானமீது பரிவாரங்களுடன் களிங்கஸேனையையும் வைத்துக்கொண்டு ஆகாயமார்க்கமாகப் புறப்பட்டுத் தன் தமக்கை யிருந்துவரும் விந்திய மலைக்கு க்ஷணப் பொழுதிற்போய்ச் சேர்ந்தாள். அங்கே, ஜடை முடியுடன், கண்டிகை புனைந்து வெண்மையான வஸ்திரமுடுத்துக்கொண்டு பிர்ம்ஹத்யானத்தி லிருந்துவரும் ஸ்வயம்பிரபையினிடம் களிங்கசேனையைப் பற்றித் தெரிவித்தாள். களிங்கசேனையும் ஸ்வயம் பிரபையை நமஸ்கரித்தாள். ஸ்வயம்பிரபை சந்தோஷமடைந்து களிங்கஸேனைக்குக்கனிகளும், சிற்றுண்டிகளும் அளித்து உபசரித்தாள். அப்பொழுது ஸோமப் பிரபை ஒரு கனியை யெடுத்துக் களிங்கஸேனையினிடம் கொடுத்து, "இதை நீ புசி, புசித்தால் மூப்பு உண்டாகாது; இந்த ரூபமாறித் திவ்யரூபமுண்டாகும். இதற்காகவே உன்னை இங்கே யழைத்து வந்தேன்" என்று கூறினள். களிங்கஸேனை மனமகிழ்ச்சியுடன் அந்தக் கனியைப் பெற்றுப் புசித்தாள். உடனே அமுத ஸரஸில் மூழ்கியவள்போல் திவ்ய சரீரமும் பெற்றாள். அக்கணமே அவள் உற்சாகத்துடன் நடமாடிக்கொண்டிருக்கும் அந்நகர நந்தவனத்தைக் கண்டாள். அதில் ஸ்வர்ணத் தாமரைகள் நிறைந்த பல வாவிகளிருந்தன. அமுதம்போலினிக்கும் கனிகள் மலிந்த பல தருக்களிருந்தன. அங்கே கூட்டங்கூட்டமாக ஹம்ஸங்களும் பறவைகளும் நிறைந்திருந்தன. அந்தத் தோட்டத்தில் சிறந்த மணிஸ்தம்பங்கள் விலாஸத்துடன் விளங்கின. சூன்யமான

இடத்தைச் சுவருள்ள இடமென்று கொள்ளும்படியாகவும் சுவருள்ள இடத்தைச் சூன்யமான இடமென்று நினைத்து பிரமிக்கும்படியாகவும் விளங்கின அந்த நந்தவனத்துள்ள விசித்திர மண்டபங்கள். நீரில் நிலமென்னும் பிரமிப்பையும் நிலத்தில் நீர் என்னும் பிரமிப்பையும் கொடுக்கக்கூடிய தன்மையுடையதாயிருந்தது அந்தச் சுந்தரமான நந்தவனம். வேறோர் உலகம் போலவும், மயனுடைய அற்புதமான மாயையா லேற்பட்டது போலவும் விளங்கிய அவ்வனம், முன் ஸீதையைத் தேடப்புறப்பட்ட வானரர்கள், இந்த நந்தவனத்தில் தான் தங்கி விளையாடினரோ வென்று எண்ணுந் தன்மைத்தா யிருந்தது.

இவ்வாறான அற்புத நந்தவன மகிமையைக் கண்டு களித்த களிங்கஸேனையும் ஸோமப்பிரபையும் ஸ்வயம்பிரபையினிடம் விடைபெற்றுக் கொண்டு யந்திரத்திலேறிப் புறப்பட்டு ஆகாய வழியே தக்ஷசிலை நகரம் வந்து சேர்ந்தார்கள். களிங்கஸேனை தன் தாய் தந்தையர்களைப் பணிந்து நடந்த வரலாற்றை விவரமாகச் சொல்லி மகிழ்வெய்தியிருந்தாள்.

இவ்வாறாக அவ்விரண்டு பெண்மணிகளும் நேசம் பாராட்டி வருகையில் சிலநாள் கடந்த பின்னர் ஒரு நாள் ஸோமப்பிரபை, அந்தக் களிங்கஸேனையை நோக்கி, "ஸகியே! ஒரு விஷயங் கேள்; உனக்கு விவாகமாகும் வரையில் உன்னுடன் நானிருக்க முடியும், புருஷன் வீடு சேர்ந்த பின் அங்கே எவ்வாறு நான் வருதற்காகும்? தோழியின் புருஷனைப் பார்ப்பதும் அவனை அங்கீகரிப்பதும் கூடாது. செந்நாய் ஆட்டு மாமிசத்தைப் புசிப்பது போல் மாமி மருமகளின் மாமிசத்தைப் புசிக்கின்றாள். அதற்கொரு கதையுண்டு. அதைக் கூறுகின்றேன் கேள்—

பாடலீபுத்ரகம் என்னும் ஒரு நகரத்தில் பொருள் படைத்த சீமான்களுக்குள் முக்கியமானவனும் பொருளைப் பரிபாலிப்பவன் என்னும் உண்மையான பெயருடையவனுமாகிய தனபாலிதன் என்னுமொருவ னிருந்தான். அவனுக்குக் கீர்த்திஸேனை யென்னும் பெயருடைய ஒரு பெண்ணிருந்தாள். அவள் இணையற்றஅழகுடையவளாகவும் தனபாலிதனுக்கு அவன் உயிரிலும் பிரியமுடையவளாகவுமிருந்தாள். அப் பெண்ணரசியை அவன் தந்தை மகததேசத்திற் பெரும்பொருள் படைத்த தேவஸேனனென்னும் வர்த்தகனொருவனுக்கு விவாகஞ் செய்து கொடுத்தான். அந்தத் தேவ



ஸேனனுடைய தந்தை அவனுடைய சிறு வயதிலேயே யிறந்து விட்டான். அவனுடைய அன்னையோ மிகவும் துஷ்டை. அவளே வீட்டிற்கு யஜமானியாக விருந்தாள். அவள் தன் மருமகள் தன் பிள்ளையிடம் மிகுதியும் அன்பு பாராட்டி அவனுக்குகந்த பணிவிடை புரிந்துவந்தது கண்டு பொறாமைகொண்டு அவளை அடிக்கடி பலவாறாக ஹிம்ஸித்து வந்தாள். இவ்வாறு இவள் செய்வது தேவஸேனனுக்குத் தெரியாது. கீர்த்திஸேனையும் தன் மாமியிடம் கொண்ட பயத்தால் தன் கணவனிடம் அவள் செய்கையைத் தெரிவியாமலே யிருந்துவந்தாள். மருமகளொருத்தி வக்ரசுபாவமுடைய மாமிக்குட்பட்டிருப்பது கஷ்டமல்லவா ?

இவ்வாறாக இருக்கும் பொழுது ஒரு நாள், பந்து ஜனங்களின் பிரேரணைப்படி தேவஸேனன் வியாபார நிமித்தம் வளபீ நகரம் செல்லத் தீர்மானித்துப்புறப்பட்டான். அச்சமயம் கீர்த்திஸேனைதன் கணவனை நோக்கி, "ஆர்யபுத்ர! இந்நாள் வரையில் நான் உம்மிடம் இங்கு நடந்தவற்றைச் சொல்லவில்லை. தாங்களிருக்கும் போதே தங்களுடைய தாயார் என்னைப் பலவாறாக ஹிம்ஸித்து வருகின்றார்கள். தாங்கள் வெளியே போய்விட்டால் என்ன செய்வார்களோ அறியேன்" என்று கூறிக்கண்களிலிருந்து முத்துப்போன்ற நீர்த்துளிகளைச் சிந்தினாள். அப்பொழுது தேவஸேனனுடைய மனம் கலங்கிவிட்டது; உடனே அவன் தன் அன்னையிடம் சென்று வந்தனஞ்செய்து, "அம்மா! புறப்பட்டுப்போகின்றேன்; கீர்த்திஸேனையைத் தங்களுடைய கையில் ஒப்புவிக்கின்றேன். அவள் நல்லவம்சத்திற் பிறந்தவள். அவளிடம்வெறுப்பைக் காட்டவேண்டாம்" என்றான். அவன் தாய் உடனே சினங்கொண்டு கண்கள் சுழல விழித்துப்பார்த்துத் தன் மருமகளை யழைத்து அவள்முன்பு தன் புத்திரனை நோக்கி, "நான் இவளுக்கு என்ன செய்கிறேன்; உனக்கு இவ்வாறு உத்தரவிடுகின்றாள். இவள் வீட்டை இரண்டு செய்துவருகிறாள். அது யாருக்குத்தெரியும்? உங்களிருவரையும் ஸமமாகப் பார்க்கவேண்டியவளல்லவா நான்? என்ன அநியாயமான கதையிது?" என்றாள். அதைக்கேட்ட, தேவஸேனன் தாயின் பேச்சில் நம்பிக்கை வைத்துத் தன் மனைவிக்குச்சமாதானஞ் சொல்லிவிட்டு மறுநாள் வளபீ நகரத்திற்குப் புறப்பட்டுப் போனான்.

தேவஸேனன் சென்றதும் அவன் அன்னை,கீர்த்திஸேனையின்
மேல் கொண்ட கோபத்தைச் செலுத்தத் தொடங்கினள். முத
லில் கீர்த்திஸேனையின் தாதிகளை அவளுக்கு வேலை செய்ய
வொட்டாமல் தடுத்தாள். பிறகு இன்னும் பல ஹிம்ஸைகளைச்
செய்யத் தொடங்கி, ஒரு நாள் அவளும் அவளுடைய பணி
விடைக்காரிகளுள் சிலருமாகச் சேர்ந்து, கீர்த்திஸேனையைக் கட்
டிப் பிடித்துக்கொண்டு, "பாவி! என் அருமை மகனைக் கொள்
ளைகொண்டாயா?" என்று கூறி அவள் துகிலை யுருவினள்; கூந்த
லைப் பிடித்து வளைத்துக்கொண்டு கைகளால் குத்திக் கால்களா
லுதைத்து, பற்களாலும் நகங்களாலும் ஹிம்ஸித்து அவ்வீட்டி
னுள் இருட்டான ஓர் அறையிலிருந்த பெரிய பள்ளத்தில்அவளைத்
தள்ளி நிறுத்தினள் பாவி! தினந்தோறும் அரைக் கரண்டி
சோறு போட்டுவந்தாள் அந்தத் துஷ்டை! "இவ்வாறு நாம்
சோறு போட்டுவந்தால் இவள் இறந்துவிடுவாள் சில நாளையில்,
பிறகு நாம் நமது பிள்ளை வந்ததும் கீர்த்திஸேனை எங்கேயோ
ஓடிப்போய்விட்டாள்: நான் தேடித்தேடிப் பார்த்தேன்: காணே
மெங்கும்" என்று கூறிவிடுவோம் என்று தீர்மானித்துக் கொண்
டாள். குழியில் அழுதுகொண்டு கிடக்கும் கீர்த்திஸேனையோவெ
ன்றால், "பர்த்தா நல்லபிரபு,நல்ல வம்சத்தில் பிறந்தவர். ஆசார
சீலர், அவ்வாறிருந்தும் மாமியின் கொடுமையால் இந்த விபத்
திற்குள்ளாகி வருந்துகின்றேன் நான். இதனாலேதான் உலகம்
பெண் ஜன்மத்தை வெறுக்கின்றது! பெண் ஜன்மம் ஒருஜன்மமா?
சீ! எல்லோருடைய தூஷணைக்கும் பாத்திரமாய் நிற்பது இச்
சென்மம்" என்றெண்ணி வருத்தமுற்றுத் தெய்வத்தைத் தியா
னித்தவா றிருந்தாள். அச்சமயம் ஆழமான அந்தக்
குழியில் ஒரு மண் வெட்டி அவளுக்கு அவளுடைய
மனச்சங்கடத்தைப் போக்கப் பிர்மதேவரால் அளிக்கப்பட்டது
போற் கிடைத்தது. அந்தக் கீர்த்திஸேனை அதன் உதவியால்
பூமிக்குள்ளாகவே ஒரு சுரங்கந் தோண்டி அதன் வழியே தான்
எப்போதுமிருந்து வந்த தன் அறைக்கு வந்தாள். அப்பொழுது
இராப்பொழுதா யிருந்தமையால் இதுதான் நல்ல சமயமென்று
கருதித் தன்னுடைய வஸ்திரங்கள், நகைகள் இன்னும் வேண்
டிய பொருள்களை யெல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு அப்
பொழுதே தன் மாமியை யறியாமல் வெளியே புறப்பட்டு நகரத்
திற்கு அப்பால் சென்றாள்.



இங்கே வந்ததும்,"நாம் இவ்வாறு வெளிப் புறப்பட்டு வந்து
தகப்பன் வீட்டுக்குச் செல்வது தகுதியன்று; சென்றேனாயின்,
காரண மென்ன வென்று சொல்வது! ஜனங்கள் என்பேச்சில் எப்
படி நம்பிக்கை கொள்வார்கள்! ஆகையால் தகுந்த யுக்தி செய்து
என் கணவனையடைகின்றேன்; முயற்சித்தாலாகாததுமுண்டோ?
பதிவிரதைகளுக்கு இவ்வுலகிலும் அவ்வுலகிலும் பதியே கதியல்
லது வேறுயாராவர்?"என்றுகருதி அங்கிருந்த தடாகத்தில்மூழ்கி
ஒரு ராஜகுமாரனைப்போல் வேடம் பூண்டு அன்றைபதினம் அவ்
வூர்வர்த்தகன் ஒருவனுடையவீட்டில் தங்கினள். மறுநாள் வளபீ
நகரம் செல்ல விருப்பங் கொண்டு சமுத்திரஸேனன் என்னும்
ஒரு வர்த்தகனுடன் புறப்பட்டாள். அவனிடம் "ஐயா! நான்
என்னுடைய ஞாதிகளால் மிகுதியும் துன்பமடைந்தவன். வளபீ
நகரத்தில் என் உறவினரிருக்கின்றனர்; அவர்களையடையத் தங்க
ளுடன் பிரயாணமானேன்" என்று கூறி அவனை நயந்துகொண்
டாள். அவ்வர்த்தகனும் கீர்த்திஸேனையை யாரோ ராஜகுமா
னென்றெண்ணி, உபசரணையோடு அழைத்துக் கொண்டு இன்
னும் சில வர்த்தகர்களுடன் காட்டுவழியே பிரயாணப்பட்டுச்
சென்றான். கீர்த்திஸேனை அவர்களைத்தொடர்ந்து தன் விதியை
யெண்ணிக்கொண்டே நடந்தாள். இவர்கள் எல்லோரும் அஸ்த
மனமாகுந் தருணத்தில் ஒரு மலையடிவாரத்தில் தங்கினர்கள்.
அப்பொழுது நரிகளும் ஓநாய்களும் யமதூதர்கள் போல் பய
முண்டாகும்படி கத்தின. அதனால் அவ்வர்த்தகர்கள் இங்கே
திருடர்களால் ஏதேனும் தீங்கு நேரிடக்கூடுமென்று கருதி
தங்களுள் வீரர்களான சிலரை அங்கங்கு கையுங் கத்தியுமாக
நின்று காவல் புரியுமாறு திட்டப்படுத்தினர்கள். வர வர இருட்
டானது திருடர்களுக்காக முன்னே செல்லும் சேனைபோல்
பரவிற்று.

இவ்வாறிருக்க, புருஷவேடம் பூண்டு வந்த கீர்த்திசேனை
அவ்வர்த்தகர்கள் செய்யும் ஆரவாரத்தையும் இருட்டையும் வனப்
பிரதேசத்தையும் நோக்கி, மனதில் அச்சங் கொண்டு, "ஆச்சர்
யம்! கெட்ட கர்மமானது விடாமல் தொடர்ந்தே விருத்தியாய்
வருகின்றது. மாமி செய்த தீங்கு இங்கும் பலித்தது; மிருத்யு
போன்ற மாமியின் கோபத்தால் முதலில் விழுங்கப் பட்டேன்.
பிறகு மற்றொரு கர்ப்ப வாஸம்போல் பூமியில் தோண்டப்பட்ட

குழியிற் கிடந்து தவித்தேன். அப்பால் அதிலிருந்து தெய்வச்செயலாகத் தப்பி மறுபிறப்பினை யடைந்தவள்போலானேன். இப்பொழுது இங்கே மறுபடியும் பிராண சந்தேகத்திற்குள்ளாயிருக்கின்றேன். நான் இங்கே இன்று திருடர்கள் வசமகப்பட்டு அவர்கள் என்னை வதைசெய்து விடுவார்களேயாயின், என் பகைவளாகிய என் மாமி, என் கணவனிடம், உன்மனைவி வேறொருவனை விரும்பி எங்கேயோ போய்விட்டாள் என்று சொல்லிவிடுவாளென்பதிற் சந்தேகமேயில்லை. இதன் நடுவில் என்வஸ்திரத்தை எவனேனும் உரிவானேயாயின் என் இரகசியம் வெளிப்பட்டுவிடும்; இவ்வாறான தொல்லைக் காளாவதினும் நான் மரணமடைவதே மேன்மையாம்; சீலத்திற்குப் பங்கம் ஏற்படுவது தகாததாகும்; ஆகையால் நான் என்னை அதிலிருந்தும் காத்துக்கொள்ளுகின்றேன். இந்த வர்த்தகனை நாம் எதிர் பார்க்கக் கூடாது. பாதிவிருத்தியத்தைக் காப்பதே நமக்குக் கடமையாகும்" என்றெண்ணித் தன் உயிரைவிட எது தகுதியான இடமென்று தேடிச் சென்று ஒரு மரத்தைக் கிட்டினாள்; அங்கு அம்மரத்தடியில் ஒரு பள்ளமிருந்தது; அப்பள்ளம் ஒரு வீடுபோல் அழகாக அமைந்திருந்தது. பூமிதேவி கிருபை கூர்ந்து அம்மங்கைக் குதவியதுபோற் காணப்பட்டது அப்பள்ளம். உடனே கீர்த்திஸேனை தான் உயிர்விடுவதாகச் செய்துகொண்ட தீர்மானத்தை விட்டு இங்கே நாமிருந்து நம்முயிரைக் காத்து வந்தால் எப்படியும் புருஷனைக் காணலாமென்று கருதி அதிலிறங்கி யுட்கார்ந்து தன் சரீரத்தைச் சருகு முதலியவற்றால் மூடிக் கொண்டாள்.

இவ்வாறிருக்க, அன்றிரவு நடு ராத்திரியில் திருடர்கள் ஆயுதபாணிகளாகத் திரண்டுவந்து வர்த்தகர்களை மடக்கிக் கொண்டு வர்த்தகருக்குத் தலைவனாகிய அந்த ஸமுத்திரதத்தனுடைய பொருள்களை யபகரித்துக் கொண்டு அவனையும் அவன் பரிவாரங்களையும் கொன்று சென்றுவிட்டனர். அப்பொழுது நடந்த பயங்கரமான கோலாகலத்தைக் கேட்டும் கீர்த்திஸேனை யுயிரிழக்காமலிருந்ததற்கு அவள் விதிதான் காரணமென்று கூறவேண்டியதாயிற்று. அப்பால் அன்றிராப் பொழுது கழிந்தது. ஆதித்தனும் கீழ்த்திசையில் உதயமாயினன். கீர்த்திஸேனையும் தான் ஒளிந்துகொண்டிருந்த பள்ளத்தினின்று சூரிய பகவானை வணங்க வெளிப்பட்டதுபோல் வெளிப்பட்டாள். கணவனிடமே விசேஷ



மான பற்றுதலுடையவர்களாகிய பதிவிரதைகளை ஆபத்துக்காலத்தில் தேவர்களே முன் வந்து காக்கின்றனர்.

நிற்க; இவ்வாறு கீர்த்திஸேனை வெளிக் கிளம்பியதும் அங்கொருபெரிய சிங்கம் கர்ஜித்துக்கொண்டு ஓடுவதைக்கண்டு பயந்து ஒன்றுந்தோன்றாமல் மரம்போல் நின்றாள். அப்போது தெய்வானுகூலமாய் ஒரு தவசி அவள்முன் தோன்றி, அவள் வரலாற்றினைவிசாரித்துத்தமது கமண்டலத்திருந்து பரிசுத்தமான தீர்த்தத்தைக் கொடுத்து ஆசீர்வதித்து, அவள் செல்லவேண்டிய வழியைக்காட்டி மறைந்தார். அந்தத்தபசியின் அமுதம் போன்ற இதமொழிகளைக் கேட்டவுடன் அந்தக் கீர்த்திஸேனைபசியும் தாகமும் நீங்கி அவர் கூறிய வழியே தன் நாயகனைத்தேடிக்கொண்டு பிரயாணமானாள்; நெடுந்தூரம் சென்ற பின்பு ஓரிரவு வரையில் பொறுத்துக்கொண்டிரு என்று தன் கைகளை நீட்டிச்சொல்வது போல் அஸ்தமனகிரியினுச்சியில் சூரியன் தன் கிரணங்களை வீசிக்கொண்டு விளங்கக்கண்டாள் கீர்த்திசேனை; இனி நாம் மேலே செல்வது கூடாது; இங்குத் தங்கித்தான் போகவேண்டுமென்றெண்ணி தங்குவதற்குத்தக்க இடத்தைத் தேடிச் சென்றாள். சிறிது தூரத்திற்கப்பால் ஒரு பெரிய மரமிருந்தது. அதனடியில் செடிகொடிகளடர்ந்த புதரொன்றிருந்தது. அதுவே தங்குவதற்குத் தகுந்த இடமென்று நிச்சயித்து அங்குத் தங்கினாள் கீர்த்திஸேனை; தங்கிய இரண்டு நாழிகைக்கெல்லாம் பயங்கரமான உருவமுடைய ஒரு ராக்ஷஸி அப்புதரிலிருந்து வெளிப்பட்டாள். அவளைச் சூழச் சிறுவர்கள் சிலர் நின்று கொண்டிருந்தனர். அவர்களைக் கண்டவுடன் கீர்த்திஸேனைக்கு நடுக்கமுண்டாயிற்று. என்ன விபத்து நேர்ந்தது அந்தோ வென்று அஞ்சினாள்; என் செய்வேன் ஈசா! என்று கலங்கினாள். இந்த ராக்ஷஸிக்கு இன்று நான் இரையாகத்தான் போகின்றேன். இவள் நிச்சயமாய் என்னை விழுங்கி விடுவாள்; இந்த ஆபத்திலிருந்து நான் எப்படித் தப்பப் போகிறேன்" என்று வருத்தமுற்றுக் கவலைக்கடலுள் மூழ்கினாள். அந்த ராக்ஷஸி அப்பொழுது அப்புதரிலிருந்து வெளிப்பட்டு அங்கிருந்த பெரிய மரத்தின் மீதேறினாள். அந்த அரக்கியைத் தொடர்ந்து சிறுவர்களும் மறத்தின்மீது ஏறினர். அப்பொழுது சிறுவர்கள் அந்த அரக்கியை நோக்கி, "தாயே! வயிறு பசிக்கின்றது; ஏதேனும் உணவு தாரவேண்டும் இச்சமயம்" என்று

கேட்டனர். "புத்திரர்களே! நான் உங்களுடைய ஆகாரத்திற்காக மயானத்திற்குச் சற்றுமுன் சென்றிருந்தேன், அங்கு ஆகாரமொன்றும் சரியாகக் கிடைக்கவில்லை. அங்குள்ள டாகினிகளை யாசித்தேன். அவை எனக்கு ஒன்றும் கொடுக்கவில்லை. அந்த வருத்தத்தினால், நான் பைரவரிடஞ் சென்று முறையிட்டேன். பைரவர் என்னுடைய வம்சத்தையும் பெயரையும் கேட்டு, "நீ நல்ல வம்சத்திற் பிறந்தவள்; கரதூஷணரது வம்சத்திலுதித்தவள்; உனக்கு உணவிருக்குமிடத்தைத் தெரிவிக்கின்றேன்; அங்குச் செல்வாயாக. இந்த வனத்திற்குச் சமீபத்தில் வஸுதத்தபுரமென்னும் நகரமொன்றிருக்கின்றது; அங்கே தர்ம நெறியினின்றுந் தவறாத வஸுதத்தனென்னுமொரு மன்னனிருக்கின்றான். அவன் உத்தமன். அவ்வரசன் இவ்வாரண்யத்தைக் காத்து வருகின்றான்; தானே சுங்க முதலிய வரி வசூலித்து வருகின்றான். திருடர்களை யடக்கித் தண்டிக்கின்றான். அவன் ஒருகால் இவ்வாரண்யத்தில் வேட்டையாடச் சென்று வெகு நேரமானபின் களைப்பினால் ஒரு மரத்தடியில் படுத்து நித்திரை போனான். அச்சமயம், அவன் செவியில் ஒரு மரவெட்டை புகுந்து சிரஸிற்குட் சென்று அங்கேயே வசித்துவருகின்றது. அதனால் அவ்வரசன் நோயினை யடைந்து நாளடைவில் மேலிந்து இப்போது சதைப்பற்றே யில்லாமல் எலும்புக்கூடாயிருக்கின்றான். வைத்தியர்கள் அந்த வியாதியைப்பற்றித்தெரிந்து கொள்ளவில்லை. வேறொருவரும் அதைத் தெரிந்துகொள்ள மாட்டார்கள். கடைசியில் அவனுக்கு அவ்வியாதியே மரணத்திற்குங் காரணமாகும். ஆகையால் நீ உன்மாயையால் அவ்வரசனுடைய இரைச்சியைப் புசித்து ஆறு மாதம் வரையில் பசிப்பிணியொழிந்து சுகமாக விரு என்று பைரவர் கட்டளையிட்டனர். இப்போது நான் என்ன செய்யமுடியும்?" என்று கூறினாள்.

இவ்வாறு அரக்கி கூறியதும் அவளுடைய புத்திரர்கள், 'அம்மா' அந்த வியாதியைக் குணப்படுத்தினால் அரசன் பிழைப்பானா? அந்த ரோகம் மருந்தினால் குணப்படக் கூடிய தன்றோ?" என்று கேட்டனர். அரக்கி, "பிள்ளைகளே! அந்த வியாதிக்குத் தகுந்தஔஷதம் கொடுக்கப்படுமாயின் அவ்வரசன் குணமடைந்து பிழைப்பது நிச்சயம். அதை நிவிர்த்திக்கத்தக்க உபாயங் கூறுகின்றேன் கேளுங்கள்.



முதலில் அவ்வரசனுடைய தலையில் நெய்யைக் காய்ச்சித் தேய்க்கவேண்டும். அப்பால் பகலில் கடுமையான வெயிலில் உட்காரவைத்துக் குளிர்ந்த ஜலம் நிறைந்த குடத்தின் பின்பக்கத்தில் சிறு துவாரம்செய்து அதில் ஒருமூங்கிற் குழாயைப் பொருத்தி அவ்வரசன் செவியில் அக்குழாயின் மற்றொரு பக்கத்தைச் சிறிதளவு நுழைக்கவேண்டும். இவ்வாறு செய்யின் சிறிது நேரத்திற்கெல்லாம் அம்மரவெட்டை வெப்பம் பொறுக்கமாட்டாமல் அங்கிருந்து வெளிப்பட்டுக் குளிர்ச்சியை விரும்பிச் செவிவழியே வந்து மூங்கிற் குழாயிற் பிரவேசித்துத் தண்ணீர்க் குடத்திற்குள் சென்றுவிடும். அப்பால் அம்மன்னன் வியாதியினின்றும் நீங்கிச் சுகமடைவான்" என்று கூறினள். இதனை அங்கிருந்து கேட்டுக்கொண்டிருந்த கீர்த்திஸேனை நான் ஜகதீசன் திருவருளால்இவ்விபத்தினின்றும் தப்புவேனாயின்இவ்வரக்கிகூறியயுக்திப் பிரகாரம் செய்து அவ்வரசனைக் காப்பாற்றுவேன். பிறகு அவ்வரசனுடைய நகரத்தில் என் கணவனுடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்து வருவேன்" என்று பல வாறாக யோசித்துக் கொண்டே அன்றிரவைக் கழித்தாள். பொழுது புலர்ந்ததும் ராக்ஷஸர்கள் மறைந்தனர். கீர்த்திஸேனையும் அப்புதரிலிருந்து வெளிப்பட்டு ஆண்வேடத்துடன் வஸுதத்தபுரம் செல்லக் கருதி அவ்வனத்தில் நடந்தாள். அன்றுபகல் பதினைந்து நாழிகை வேளையில் வழியில் ஒரு இடையனைச் சந்தித்தாள். அவன் கீர்த்தி ஸேனையைக்கண்டதும் இரக்கங்கொண்டு "ஐயா! எங்கே செல்கிறீர்கள் இவ்வேளையில்" என்று கேட்டான்; கீர்த்திஸேனை நான் வஸுதத்தபுரம் செல்கின்றேன்; இந்த வனம் எந்த நகரத்திற்குரியது? என்று கேட்டாள். இடையன் "இவ்வனம் வஸுதத்த புரத்தைச்சார்ந்தது தான். இதோ இருக்கிறது கூப்பிடு தூரத்தில் வஸுதத்தபுரம். இந்நகரத்தரசன் பெரிய வியாதியினால் பீடிக்கப்பட்டு மரணமடையக் கூடிய நிலைமையிலிருக்கின்றான்" என்று கூறினான். கீர்த்திஸேனை, கோபால! எவனேனும் என்னை அவ்வரசனிடம் அழைத்துச்செல்வானாயின் நான் அவனுடைய வியாதியை நிவிர்த்தி செய்கின்றேன்; அந்த உபாயம் எனக்குத்தெரியும் என்றாள். கோபாலன் "ஐயா! நான் அங்கேதான் இப்போது போகின்றேன். நீரும் என்னுடன் வாரும்; அரசனுடைய அரண்மனையிற் கொண்டு போய்ச் சேர்க்கின்றேன்" என்றான். பிறகு இருவரும் நடந்து விரைவாகச்சென்று வஸுதத்தபுர

ம்டைந்து அர்சனுடைய அரண்மனையைக் கிட்டினார்கள். அங்குச்
சென்றதும், கோபாலன் அரண்மனைக்காவலாளிகளை யழைத்து
அவர்களிடம் கீர்த்திஸேனையை ஒப்புவித்து விஷயமும் தெரிவி
த்து விட்டுத் தன் வழியே போய்விட்டான். காவலாளிகள் சந்தோ
ஷத்துடன் கீர்த்திஸேனையின்வரவை அரசனுக் கறிவித்தனர். அர
சன் உடனே கீர்த்திஸேனையை அரண்மனைக்குள் அழைத்து வரும்
படி ஆக்ஞாபித்தான்; காவலாளிகள் கீர்த்திஸேனையை அன்
போடழைத்துச் சென்று அரசன் முன் நிறுத்தினர். வியாதியால்
நொந்து மனமெலிந்து ஈனஸ்திதியி லிருக்கும் அவ்வேந்தன்,
கீர்த்தி சேனையைக் கண்டதும் ஸமாதான மடைந்தான். மன
மே நன்மை தீமைகளை யறியுமல்லவா? தனக்கோர் ஸமாதா
னத்தைத் தந்த அந்தக் கீர்த்தி ஸேனையை அவ்வரசன்
பார்த்து "சுந்தரமான ரூபமுடையவனே! உன்னால் என்
வியாதியை நீக்க முடியுமா? நீக்கி எனக்குச் சௌக்கியத்
தைக் கொடுப்பாயே யாயின் உனக்கு என்னுடைய இந்த
இராஜ்யத்தில் பாதியைத் தருகின்றேன்; சற்று முன் நான்
நித்திரை செய்துகொண்டிருந்தேன். அப்பொழுது என் முது
கில் போர்த்தப்பட்டிருந்த ஒரு கருத்த கம்பளியை யாரோ ஒரு
வன் விலக்கினதாகக் கனவு கண்டேன். அதனால் நீ இந்த வியாதி
யை நீக்குவாயென்று நம்புகின்றேன்" என்றான். கீர்த்தி
ஸேனை "மகாராஜாவே! நீர் அஞ்சவேண்டாம்; இந்த நோயை
நான் நாளையதினம் தக்க சிகிச்சைசெய்து நீக்குகின்றேன்"
என்று கூறினான். அரசனுக்கு இவ்வுரை அமுதவருஷம் போல்
செவியில் விழுந்தது. அதனால் பெருமகிழ் வெய்திக் கீர்த்தி ஸே
னைக்கு இருக்க இடமும் போஜன வசதியும் ஏற்படுத்தினான்.

மறுநாள் அருணோதயமாகுமுன் கீர்த்திஸேனை அரசனை யெழு
ப்பி அவன்சிரசில் பசுவின் நெய்யைத் தேய்த்து ஸ்நானம் செய்
விக்கும்படி செய்து பின்னர் அவ்வரக்கி கூறியபடி வியாதி நீங்கத்
தக்க உபாயத்தைச் சாமர்த்தியமாயும் சாதுரியமாயும் செய்தாள்.
அப்பொழுது அவ்வேந்தனுடைய சிரஸிலிருந்து நூறு மரவெட்
டைகள் வெளிப்பட்டுக் குழாய் வழியே வந்து குடத்திற்சேர்ந்
தன. அவற்றை யரசனுக்குக் காட்டினாள்; அரசன் அவற்றைக்
கண்டு பிரமித்தான்; நடுங்கினான்; வியப்பெய்தினான்; தியானித்
தான் எங்கும் நிறைந்தவனை. தனக்குச் சிகிச்சை செய்ய வந்த



கீர்த்திசேனையைத் தெய்வமென்றே கருதினான். என்று மடை
யாத ஆநந்தமடைந்தான். மறுபடி தான் பூமியில் பிறந்ததாகவே
கருதினான். இவ்வாறு உவகைக் கடலுள் மூழ்கிய அவ்வரசனுக்
குக் கீர்த்திசேனை இன்னும் வேண்டிய சிகிச்சைகளைத் தக்கவாறு
செய்து இரண்டு மூன்று நாட்களில் அவன் சரீரத்தை வியாதி
யென்னும் நமன் வாயினின்று மீட்டாள். அரசன் தான் முதலிற்
கீர்த்திசேனைக்கு வாக்களித்தபடி பாதி ராஜ்யத்தைக்கொடுப்பதற்
கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தான். அதைக் கண்ட கீர்த்தி
சேனை தனக்கு இராஜ்ய ஸம்பத்து வேண்டியதில்லையென்று மறுத்
தாள்; அரசன் அவளுக்கு அநேகங் கிராமங்களையும் யானை குதிரை
முதலிய வாகனங்களையும் பொன் வெள்ளிமுதலியவற்றையும் ஏரா
ளமாகவளித்து உற்சவங் கொண்டாடினான். அத்தேய முழுதும்
கீர்த்திசேனையின் பிரபாவத்தைக் கொண்டாடியது. தெய்வமே
உருவாகி அரசனுக்கிரங்கி வைத்தியம் புரிந்ததென்று எண்ணினர்
எல்லோரும்.

கீர்த்திஸேனை தான் வெகுமானமாகப் பெற்றவைகளை அவ்
வரசனிடமே வைத்திருக்கும்படி கொடுத்துவிட்டு நான் சிலநாள்
இங்குத் தங்கி ஒரு விரதமனுஷ்டிக்கவேண்டுமென்று கூறி ஒரு
தனி விடுதியில் ஆண்வேடத்துட னிருந்து கொண்டு தன் கணவ
னுடைய வரவை எதிர் பார்த்துக்கொண் டிருந்தாள். இரண்டு
மூன்று மாதகாலமாயிற்று. பின்னர் ஒரு நாள் அந்நகரத்து எல்
லைப்புறத்துள்ள சத்திரத்தில் வளபீ நகரஞ் சென்றிருந்த வர்த்த
கர்கள் சிலர் வந்து தங்கியிருக்கின்றனரென்று கேள்விப்பட்டு அங்
குச் சென்று பார்த்தாள். கேள்விப்பட்டபடி வர்த்தகர்கள் வந்து
கூடியிருக்கக் கண்டு பெருமகிழ்வெய்தி அக் கூட்டத்தில் தன்
நாயகனைத்தேடினாள். அங்கே, தன்னை விரும்பித்தவம்புரிபவர்க்குக்
காட்சி கொடுக்கப் பிரத்தியட்சமாகும் தெய்வம்போல் தன் கண
வன் தேவஸேனன் எதிர்ப்படக்கண்டு வெகு நாட்களுக்கப்பால்
நீருண்டமேகத்தைக்கண்டபெண்மயில்போல் கரைகடந்த உவகை
யெய்தி அவன் பாதத்திற்பணிந்தெழுந்து கைகூப்பி நின்றாள். அப்
பொழுது அவள் கண்களினின்றும் ஆநந்த பாஷ்பம் அருவிபோல்
பெருகிற்று. தேவஸேனனும் தன் நாயகியே இவ்வாறு புருஷ
வேஷத்துடனிருக்கின்றாள் என்பதைத் தெரிந்துகொண்டு பகலிற்
கிரணங்களின்றிக் காணப்படும் சந்திரனைக்கண்டதுபோலாயினன்.
இவ்வாறு இவள் வெளிப்படக் காரண மென்னவென்று கருதி

வியப்பும் சினமுங் கொண்டனன். இதைக்கண்ட கீர்த்திஸேனை தன்னை நிரூபித்துக் கொண்டு "நாதா! இன்றுதான் யான்பாக்கியம் பெற்றேன். இன்றுதான் என் அன்னை வயிற்றிலிருந்து மறுபடியும் பிறந்தேன். இன்றுதான் என் ஜன்மம் ஸாபல்லிய மடைந்தது" என்று கூறிக் கண்களிலிருந்து நீர் பெருக்கினுள். இதைக் கண்ட அங்குள்ள வர்த்தகர்கள் எல்லோரும் என்ன ஆச்சரியமிதுவென்று சூழ்ந்து கொண்டனர்; இதற்குள் இச்செய்தி அரசனுக்கெட்டியது. உடனே அரசனும் அங்கு வந்து உட்கார்ந்து நடந்ததென்ன வென்று விசாரித்தான். கீர்த்திஸேனை தன் மாமியால் தனக்கு நேர்ந்த சங்கடங்களை யெல்லாம் தெரிவித்தாள். அதைக்கேட்ட தேவஸேனன், கோபமும் ஆச்சரியமும் ஏககாலத்திலடைந்து, தன் அன்னையை வெறுத்தான். பதிபக்தியென்னும் தேரின் மீதேறியவர்ளும், சீலமாகிய கவசமணிந்தவர்களும், தர்மமாகிய ஸாரதியுடையவர்களும், புத்தியென்னும் ஆயுதமுடையவர்களுமாகிய பதிவிரதைகள் என்றும் ஜயம் பெறுகிறுர்கள்.

கீர்த்திஸேனையின் அற்புதமான இச்சரித்திரத்தைக் கேட்ட யாவரும் ஆநந்தமடைந்தனர். கணவனையடைவதன் பொருட்டு இவ்வளவு கஷ்டமும் சகித்த இந்தக்கீர்த்திஸேனை, ஸ்ரீராமபிரான் விஷயமாகக் கிலேசங்களையடைந்த சீதாதேவியையும் ஜயித்தவளாகின்றுள் என்று அரசனும் புகழ்ந்து பேசினுன். இவ்வணங்கு எனக்கு என்னுடன்பிறந்த பிறப்பாகின்றுள்; என் உயிரைரக்ஷித்த தெய்வமுமாகின்றுள் இவ்வுத்தமி என்று அரசன் எல்லோர்முன்னர் தெரிவித்துத் தேவஸேனனையும் கீர்த்திஸேனையையும் தன் அரண்மனைக்கு அழைத்துச்சென்று பெரியவிருந்து செய்வித்தான். இதுவேயுமன்றி அன்று அந்நகரத்துள்ளார் எல்லோருக்கும் விருந்தளித்து விழாவுங் கொண்டாடினுன் ; பின்னர், கீர்த்திஸேனையின் பிரேரணைப்படி தான் அவளுக்குச் சம்மானஞ்செய்த கிராமங்கள் வாகனங்கள் முதலிய வற்றைத் தேவஸேனனிடம் ஒப்புவித்தான் அரசன்.

தேவஸேனன் தான் வர்த்தகத்தில் தேடிய பொருள்களையும் கீர்த்தி ஸேனையின் மூலமாக வந்த ஏராளமான சொத்துக்களையும் வைத்துக்கொண்டு தன் மனைவியுடன் அந்த வலபீத்த புரத்திலேயே யிருந்து விட்டான். தன் தாயைப்பற்றிய சிந்தனை யற்றவனுயினன். உவமையற்ற தன்னுடைய நல்ல நடக்கையால் தனக்குக் கிடைத்த ஐசுவரியம் சுகம் முதலியவற்றை யநுபவித்துக்கொண்டு கணவனுடைய புண்ணிய பலனின் பெருமையாகிய கொடியானது அவனுடைய தேகத்தில் சுற்றிக் கொண்டதுபோல் வாழ்ந்து வந்தாள்.



இவ்வாறு, நல்ல நடத்தை யென்னும் பொருளைக் காப்பாற்றும் நங்கையர்கள் ஆபத்துக் காலங்களில் தேவாக்ஞையைப் பொறுத்துக்கொண்டிருந்து, அப்பால் தைரியம் என்னும் உயர்ந்த ஐசுவரியத்தினுல் ரக்ஷிக்கப்பட்டுத் தாங்கள் தங்கள் கணவருடன் சுகமடைகின்றனர்; எல்லோருக்குமே நன்மை செய்கின்றனர்.

இராஜ குமாரத்தியே! ஸ்திரீகளுக்கு மாமியாலும் நாத்தியாலும் இவ்வாறுன தொந்தரைகளுண்டாகின்றன. ஆகையால் உனக்குவரும் மாமியும் நாத்தியும் வஞ்சனையற்றவர்களா யிருக்கும்படியான குடும்பத்தில் உனக்கு விவாகமாக வேண்டுமென்பது என் விருப்பம் என்று கூறினுள்.

இவ்வாறு அசுர ராஜனுகிய மயன் குமாரத்தி ஸோமப்பிரபை கூறிய கதையைக் கேட்ட களிங்கஸேனை பரமானந்த மடைந்து அவளைத் தழுவிப் புகழ்ந்து மகிழ்ந்தாள். இது வரையில் கதை கேட்க வந்திருந்தவன் போல் பிரகாசித்த சூரியனும் இப்போது மறைந்தான்.

3-வது தரங்கம் முற்றிற்று.



## 4-வது தரங்கம்.



ஸோமப் பிரபையின் வருகையை யெதிர் பார்த்துக் கொண்டு களிங்கஸேனை ஒரு நாள் தன் வீட்டு உப்பரிகைமீதி உலாவிக்கொண்டிருந்தாள். அச்சமயம் ஆகாயவழியே போய்க்கொண்டிருந்த மதவேகனென்னும் வித்திபாதரன் ஒருவன் இவளைக்கண்டான் ; ரூபலாவண்யத்தால் மூவுலகையும் மோகப்படுத்தத் தக்கவனும் காமனுகிய இந்திர ஜால வித்தைக் காரனுக்கு மயில் தோகை போன்றவளுமாகிய களிங்கஸேனையைக் கண்டவளவில் வித்தியாதரன் மனங் கலங்கினுன். தான்

அநுபவித்தவரும் வித்தியாதர ஸ்திரீகளையும் அப்ஸரஸ்திரீயையும் வெறுத்தான். களிங்கஸேனையின் அழகைப் புகழ்ந்தான். இவளைப் பத்தினியாக வடைந்து இன்பமடையாத இப்பிறவியிருந்தாவதென்ன வென்றும் எண்ணினான். உடனே தன் எண்ணம் நிறைவேறத் தக்கதொரு உபாயத்தைக்கருதி அதற்குச் சாதகமாகும் பிரஞ்ஞப்தி யென்னும் மந்திரத்தை உச்சரித்தான். இந்த மந்திரத்திற்குரிய அதிதேவதை யுடனே பிரத்தியட்சமாக வந்து வித்தியாதரனை நோக்கி, இந்த மாது உண்மையில் மானிடஸ்திரீயல்ல; சாபத்தால் மானிட ஸ்திரீயானவள். இவள் ஓர் அப்ஸரஸ்திரீ. இவள் களிங்கத்தத ராஜனுடைய வீட்டிற் பிறந்திருக்கிறாள்" என்று தெரிவித்தது. தேவதை இவ்வாறு கூறியதும் மதனவேகன் என்னும் வித்தியாதரன் மகிழ்வுற்றுத் தன் வீடு சென்று காமாதுரனாகித் தன்னுடைய வேலைக ளொன்றையும் கவனியாமல் ஓரிடத்துட்கார்ந்து, "இந்தக் களிங்க ஸேனையை நான் பலாத்காரமாக அபகரிக்க எண்ணங்கொள்வது ஒருவாற்றானும் தகுதியுடையதாகாது: அவ்வாறு செய்வேனாயின் எனக்கு அவசியம் முன் சாபப்படி மரணமுண்டாமென்பதிலையமில்லை. ஆகையால் பரமசிவனைப்பூசித்துத் தவம்புரிந்து இவளை யடைகின்றேன். தவத்திற்குச் சகல நன்மைகளும் ஸ்வாதீனமாகுமல்லவா ? இந்த உபாயந் தவிர வேறுகிடையாது" என்று தீர்மானித்து மறுநாளே ரிஷபபர்வதம் சென்று ஆங்கோர் ஆச்ரமமேற்படுத்திக்கொண்டு ஒற்றைக் காலில் நின்று உணவினை யொழித்துத் தவம்புரிந்துவந்தான். அவன் தவத்திற் குவந்து உமாபதி பிரத்தியட்சமாகி, "மதனவே! இந்தக் களிங்கஸேனை புவியில் இணையற்ற அழகுடையவள். இவளை வத்ஸராஜன் என்பவனும் விவாகம் செய்து கொள்ள விரும்புகிறான். ஆனால் அவன் தன் மனைவி வாஸவதத்தையிடம் கொண்ட பயத்தினால் தான் விரும்பிய எண்ணத்தை நிறைவேற்றுவதில் தாமதப்படுகின்றான். களிங்கஸேனையும் ஸோமப்ரபையின் மூலமாக வத்ஸராஜனைத் தெரிந்து கொண்டிருக்கிறாள். ஸ்வயம்வரத்தில் இவளுக்கு விவாகம் நடப்பதற்கு முன், வத்ஸ ராஜனைப்போல் வேஷம் பூண்டு சென்று காந்தர்வவிதிப்படி அவளை விவாகம்செய்து கொள். இவ்வாறுசெய்யின் அந்த வனிதை யுனக்கு மனைவியாவள்" என்று கூறி மறைந்தார். அப்பால் மதனவேகன் பரமசிவனை வணங்கித் துதித்து மனமிகிழ்ச்சியோடு வீடு சென்றான்.



இவ்வாறிருக்க, ஒவ்வொரு நாளும் ஸோமப்பிரபை இராத்திரியில் ஆகாய விமானமேறிக் களிங்கஸேனையின் வீட்டுக்கு வருவதும் போவதுமாக இருந்தாள். அப்பொழுது ஒரு சமயம் களிங்கஸேனை தன் தோழியை நோக்கி, "தோழி! நான் சொல்வதை நீ எவரிடமும் எக்காலத்தும் தெரிவிக்கக்கூடாது. எனக்கு விவாகம் நெருங்கிவிட்டதென்று தெரிகின்றது. அநேக அரசர்கள் என்னை மணஞ் செய்துகொள்ள விரும்பித் தங்கள் தூதர்களை என் தந்தையிடம் அனுப்புகின்றனர். அவர்களை யெல்லாம் என் தந்தை போக்குச் சொல்லி யனுப்பிக்கொண் டிருக்கின்றார். சிராவஸ்தீ நகரத்திலிருந்து பிரஸேனஜித் என்னும் அரசன் அனுப்பிய தூதனை மாத்திரம் நிறுத்திக்கொண் டிருக்கின்றார். அவனுக்கு வேண்டிய உபசாரஞ் செய்து வருகிறார். என் அன்னைபாரும் அவ்விடத்தில் நோக்கங்கொண் டிருக்கிறாரென்று தெரிகின்றது. என் அன்னையும் பிதாவும் அந்தப் பிரஸேனஜித்திராஜனையே அழகிலும் குலத்திலும் மேம்பாடுடையவன் என்று எண்ணியிருக்கின்றனர். பாண்டவர்களுக்கும் குரு வம்சத்தவர்களுக்கும் பிதா மஹர்களாகிய அம்பை அம்பாலிகை முதலியவர்கள் பிறந்த வம்சத்தைச் சார்ந்தவனும் அவ்வரசன். அவ்வரசனுக்குத்தான் என்னைக் கொடுப்பாரென்று தெரிகின்றது" என்றாள். ஸோமப்பிரபை இதைக் கேட்டதும் துக்கமடைந்து ஹாரம்போல் மார்பில் பெருகியோடும்படி கண்ணீருகுத்தாள். அப்பொழுது களிங்க ஸேனை "என் அன்புள்ள தோழி! நீ யேன் கண்ணீர் சொரிந்து விசனிக்கின்றாய்?" என்று கேட்டாள். ஸோமப்பிரபை நான் பூமண்டலமுழுதுஞ்சுற்றிப்பார்த்திருக்கின்றேன். ஒரு மருமகனிடம் வயது, சீலம், குலம், குணம் முதலியவற்றைக் கவனிக்கவேண்டியதவசியம். அவற்றுள் முதலாவது வயது, பின்னர் கவனிக்கத் தக்கவை வம்சம் முதலியன. நான் பிரஸேனஜித்திராஜனைப் பார்த்திருக்கின்றேன். அவன் வயது சென்றவன். அவன் குலத்தால் நமக் காவதென்ன ? அவனை நீ யடைவாயாயின் உன் முகத்தில் சந்தோஷமே யிராது; துக்கத்திற்குப் பாத்திரவதியாவாய். இவற்றை யெல்லாம் சிந்தித்த எனக்கு உன்னைப்பற்றித் துக்கமுண்டாயிற்று. உனக்கு வத்ஸராஜனாகிய உதயனன் கணவனாக வாய்ப்பனாயின் நீ யதிர்ஷ்ட சாலியாவாய். ரூபம், லாவண்யம், ஐசுவரியம், சூரம், வம்சம் இவைகளில் மேம்பாடுடையவன். அவனுக் கொப்பாக

ஒருவனையும் சொல்லமுடியாது. ஆலிலை போன்ற வயிறுடைய என் தோழியே! உனக்குச் சமானமாகிய அவனை நீ சேருவாயாயின் பிர்மதேவன் உன்னிடம் அமைத்த ஸௌந்தரியம் ஸபலமாகும்" என்றனள்.

இவ்வாறு ஸோமப் பிரபை கூறியதும், யந்திரங்களால் பிரேரணை செய்யப்பட்டதுபோல் களிங்க ஸேனையின் மனம் வத்ஸ ராஜனைக் குறித்துச் சென்றது. உடனே ஸோமப்பிரபையை நோக்கி, "தோழி! அவ்வரசனுக்கு வத்ஸராஜ னென்னும் பெயர் எவ்வாறுண்டாயிற்று? உதயனன் என்னும் பெயருடைய அவ்வரசன் எந்த வம்சத்தினன். அவனுக்கு உதய னென்னும் பேர் எவ்வாறு கிடைத்தது? தயை செய்து எனக்குச் சொல்ல வேண்டும்" என்று கேட்டாள். ஸோமப்பிரபை "தோழி! வத்ஸம் என்னுமொரு தேசமிருக்கிறது. அது பூமிக்கு ஆபரணம் போல் பிரகாசிப்பது. அதில் கௌசாம்பி யென்னுமொரு நகரமிருக்கின்றது. அது மற்றொரு அமராவதிபோல் விளங்குவது. அந்தக் கௌசாம்பியிலிருந்து அவ்வரசன் இராஜ்ய பரிபாலனம் செய்து வருகின்றமையால் அவனுக்கு வத்ஸன் என்னும் பெயருண்டாயிற்று. கல்யாணி! அவனுடைய வம்சத்தைக் கூறுகின்றேன் கேள்.

பாண்டு மகாராஜாவின் புதல்வனாகிய அர்ச்சுனனுடைய குமாரன் அபிமன்யுவென்பவ னிருந்தான். அவன், சக்ரயூகத்தை நாசஞ் செய்து கௌரவசேனையை யொழித்த பலசாலி. அவனுக்குப் பரீக்ஷித் தென்னுமொரு புத்திரன் பிறந்தான். அவன் பாரத வம்சத்தை விருத்தியாக்கினான். அவனுக்கு ஜனமேஜயன் குமாரனாகப் பிறந்தான். அவன் ஸர்ப்ப யாகஞ் செய்தான். அவனுக்கு சதானீகன் பிறந்தான். கௌசாம்பி நகரில் வசித்து வந்தான் அவன். ஒரு சமயம் அவ்வரசன் தேவாசுரர்க்குள் நடந்த யுத்தத்தில் அசுரர்களை வதஞ் செய்து ஜயம் பெற்றான். அந்த ஸதாநீகராஜனுக்கு ஸஹஸ்ரானீக ராஜன் பிறந்தான். அவனை உலகம் முழுவதும் புகழ்ந்து கொண்டாடிற்று. இவனுக்கு இந்திரன் அடிக்கடி தன் இரதத்தை யனுப்புவதுண்டு. அதிலேறித் தேவலோகம் போவதும் வருவதுமாக விருந்தான் இவன். அவனுடைய மனைவியாகிய மிருகாவதியென்னும் புண்ணியவதியிடம் உதயனன் பிறந்தான். இவன் சந்திர வம்சத்திற்கே பூஷணம்போல் விளங்குபவன்.



நேத்திரோற்சவமான திருமேனியுடையவன். உதயனனென்னும் பெயருண்டானதற்குக் காரணங் கூறுகின்றேன் கேள்.

மிருகாவதிகர்ப்பமாயிருக்கும்போது இரத்தமடுவில் மூழ்கிக் குளிக்கவிரும்பினாள். அரசன் பாபத்திற் கஞ்சி, செம்பஞ்சுக்குழம்பை ஒருநீர் மடுவிற்கலந்து அதில் ஸ்நானஞ்செய்வித்தான். அந்த மிருகாவதி மூழ்கும்போது கருடனுடைய இனத்தைச் சார்ந்த ஒருபெரியபறவை இரத்தப்பிரவாகத்தில் மாமிசபிண்டமிதக்கின்றதென்று கருதி மிருகாவதியைத் தன் கால்களின் வன்மையால் தூக்கிக்கொண்டு பறந்து சென்று உதயமலையை யடைந்து அங்கு அவளை யொன்றுஞ் செய்யாமற் கிடத்திவிட்டுப் பறந்து போய் விட்டது. அம்மலையில் தவம்புரிந்து கொண்டிருந்த ஜமதக்கினி முனிவர் அவளைக் கண்டு பயந் தெளிப இனிய மொழிகள் கூறி "நீ உன் பதியை விரைவில் அடைவாய்" என்று ஆசீர்வதித்துத் தமது ஆச்சிரமத்திலேயே வைத்துக் கொண்டிருந்தார். ஸஹஸ்ரானீகன் ஒரு சமயம் திலோத்தமையை அவமதித்துப் பேசினான். அவள், "நீ என்னை யவமதித்தமையால் உன் மனைவியை விட்டுச் சிலகாலம் நீ பிரிந்திருந்து வருந்தக் கடவாய்" என்று சாபங் கொடுத்தனள். அச் சாபப்படி மிருகாவதி அவனை விட்டுப் பிரிய நேரிட்டது.

இவ்வாறு புருஷனைப்பிரிந்து முனிவராச்சிரமத்தில் வசித்து வரும் மிருகாவதி சில மாதங்கட்கப்பால் வானமானது சந்திரனைப் பயப்பதுபோல் ஒரு புத்திரனை யீன்றாள். அப்பொழுது ஆகாயத்தில், "இந்த உதயனன் ஸார்வபௌமனும் பூபதியுமாகப்போகின்றான். இவனுக்குப் பிறக்கும் புத்திரன் வித்தியாதரர்களுக்குப் பதியாவான்" என்று ஆகாயவாக்குண்டாயிற்று; அச்சமயம் தேவர்கள் "இவன் உதயபர்வதத்தில் ஜனனமாயினமையின் இவன்பெயர் உதயனன் என்று வழங்கக்கடவது" என்று கூறினர்.

இங்கிவ்வாறிருக்க, ஸஹஸ்ரானீகன் தன் சாபம் எப்பொழுது முடிவாகும், நாம் எப்பொழுது மிருகாவதியை யடைவோமென்னும் கவலையினால் மிகுதியும் வருந்திக்கொண்டிருந்தான். சாபத்தின் முடிவுகாலம் கிட்டியது; உதயகிரியிலிருந்து கௌசாம்பி நகரம் வந்த ஒரு வேடனைச் சந்தித்தான் ஸஹஸ்ரானீகன். அவன் மூலமாக மிருகாவதி உதயமலையிலிருப்பதைத்தெரிந்து கொண்டு அந்த வேடனுடன் அங்குச் சென்றான்.

உதய மலையில் முனிவருடைய ஆச்ரமத்தில தன் மனோரத ஸித்திபோல் விளங்கும் மனைவியையும் தன் மனோராஜ்யம்போல் விளங்கும் புத்திரனையுங்கண்டு கரைகடந்த உவகைகொண்டு முனிவரை வணங்கி அவரிடம் விடைபெற்றுத்தன்மனைவியுடனும் மைந்தனுடனும் கௌசாம்பி நகரம் வந்தான். அப்பால் உதயனன் வாலிபப்பருவமடைந்ததும் அவனிடத்துள்ள நற்குணநற்செய்கைகளைக்கண்டு அவனுக்கு யுவராஜ்யாபிஷேகஞ் செய்வித்தான். யௌகந்தராயணன் முதலிய தன் மந்திரிமார்களுடைய புத்திரர்களையும் தன் மைந்தனிடம் ஒப்புவித்து அவனுக்கு மந்திரிகளாக்கினான். அப்பால் ஸஹஸ்ரானீகன் வெகுகாலம் வரையில் இராஜ்யத்திலிருந்து சுகமனுபவித்துப் பின்னர் தன் குமாரனுக்கு முடிசூட்டுவித்து மனைவியுடனும் மந்திரியுடனும் தீர்த்தயாத்திரை சென்றான்.

இவ்வாறு உதயன ராஜன் இராஜ்ய ஸம்பத்தையடைந்து பூமி முழுவதையும் தன் குடைக் கீழ்க்கொண்டு யௌகந்தராயணனுடன் அரசுபுரிந்து வருகின்றான். சுந்தரசரீரமுடையவளே! வத்ஸ தேசாதிபதியாக விருப்பதால் அவனுக்கு வத்ஸனென்னும் பெயருண்டாயிற்று. பாண்டவ வம்சத்திலுதித்தமையால் அவன் சந்திர வம்சத்தினன். உதய பர்வதத்தில் ஜனித்தமையால் உதயனன் என்னும் பெயர் பெற்றனன். சுந்தரீ! இந்தப் பிரபஞ்சத்தில் அவனுக்கொப்பான அழகு படைத்தவரைக்காண்பதரிது. லாவண்யமே உருவானதற் கொப்ப விளங்குகின்றான் அந்த மன்னன். அவனே உனக்குத் தகுந்த நாயகனவன். அவனும் உன்னையே விரும்புகின்றானென்று கேள்வி. ஆனால் அவனுக்குச் சண்டமஹாஸேனனுடைய குமாரத்தி வாஸவதத்தை யென்பவள் ஏற்கனவே மனைவியாக வாழ்க்கைப்பட்டிருக்கின்றாள். அவள் உஷை, சகுந்தலை இவர்களை யழகில் வெல்லத்தக்கவள். அவளிடம் அவ்வரசனுக்கு நரவாஹனதத்தன் என்னுமொரு புத்திரன் பிறந்திருக்கின்றான். இவன் வித்தியாதரர்கள் யாவருக்கும் அதிபனாகப்போகின்றான். ஆகையால் அவ்வரசன் தன் மனைவி யாகிய வாஸவதத்தையினிடம் பயந்து உன்னிடம் விருப்பமிருந்தும் தன் விருப்பத்தை உன் தந்தைக்குத் தெரிவிக்காமலிருக்கின்றான். அந்த வாஸவதத்தையையும் நான் பார்த்தேன். அவள் உன்னிலும் அழகில் மேம்பட்டவளன்று என்றாள்.



இங்ஙனங் கூறிய ஸோமப்பிரபையை நோக்கி, கலிங்கஸேனை “தோழி! வத்ஸ ராஜனிடம் என் மனம் உற்சாகமடைகின்றது; நான் என்ன செய்வேன். தாய் தந்தையர்களுடைய ஸ்வாதீனத்திருப்பவளல்லவா நான். நீ எல்லாமறிந்தவள். மகிமையுடன் கூடியவள். நீயே எனக்குக் கதியாகின்றாய்?” என்று கை குவித்தாள். ஸோமப்பிரபை, இக்காரியமானது தெய்வ வசத்தால் நேரிடக்கூடியது, அதற்கொரு கதை கூறுகின்றேன்கேள்.

முன் உச்சயினியில் விக்கிரமஸேனன் என்னுமொரு மன்னனிருந்தான். அவ்வரசனுக்குத் தேஜஸ்வதி யென்றொரு கன்னிகை யிருந்தாள். அவள் ஒப்புயர்வில்லாத அழகுடையவள். அவள் மனதிற்கிசைந்த நாயகன் கிடைக்காமலிருந்தான். அவள் ஒருநாள் தன் வீட்டு மேன்மாடியில் உட்கார்ந்து பார்த்துக்கொண்டிருந்தாள். அப்பொழுது தெரு வழியே ஒரு சுந்தர புருஷன் போய்க் கொண்டிருக்கப் பார்த்தாள். அவன்மீது அவளுக்கு ஆசையேற்பட்டது. உடனே தன் அருகே யிருந்த தோழியினிடம் தன் விருப்பத்தைத் தெரிவித்து அவனிடம் போய்த் தெரிவிக்கும்படி யனுப்பினாள். தோழி அவ்வாறே சென்று அவனிடம் இராஜகுமாரத்தியின் கருத்தைத் தெரிவித்தாள். அந்தப் புருஷன் இஃது ஏதோ தந்திரமாகக் காணப்படுகின்றதென்றெண்ணி, அவள் கருத்திற் கிணங்கவில்லை. தோழி, அவனைப் பிரார்த்தித்து இராஜ குமாரத்தியின் கருத்திற் கிணங்கும்படி செய்து அவனை அன்றிரவு அந்நகரத்து எல்லைப்புறத்தே தனித்திருந்த ஒரு ஆலயத்தில் இராஜகுமாரத்தியின் வரவை யெதிர்பார்த்துக் கொண்டிருக்கும்படி கூறிவிட்டுத் தேஜஸ்வதியிடஞ் சென்று நடந்ததைத் தெரிவித்து அன்றிரவு ஆலயத்திற்கேக ஆயத்தமாகும்படி கூறினாள். அவள் அவ்வாறே யாகுக வென்று சூரியனைப் பார்த்துக்கொண்டே யிருந்தாள். அப்பால் சூரியனும் இவளிடம் கருணை கூர்ந்தவன்போல் அஸ்தமனகிரியை யடைந்தான். பிறகு சந்திரன் தன் குளிர்ந்த கிரணங்களுடன் உதயமாயினன். அது கண்ட தேஜஸ்வதியின் மனம் மகிழ்வுற்று அன்றிரவைப் போற்றினாள். அப்பால் நடுராத்திரியில் வீட்டிலிருந்து ஒருவரையு மறியாமல் வெளிப்பட்டாள்.

இங்கிவ்வாறிருக்க, அந்த இடத்திற்கு வருவதாக ஒப்புக்கொண்டு சென்றவன், என்ன நடக்குமோ வென்று பயந்து, ஒப்

புக்கொண்டபடி அங்கே போகாமல் நின்றுவிட்டான். தவளைக்குச் சக்ரவாகப்பேடினிடம் சேரும் பாக்கியமுண்டாமோ? இராஜகுமாரத்தியாகிய தேஜஸ்வதி ஸங்கேத ஸ்தானத்திற்குப் போய்ச் சேர்ந்தாள். இங்கே அந்நகரமன்னனைக் காண்பதன் பொருட்டுப் புறப்பட்டு வந்த ஸோமதத்தன் என்னும் இராஜ குமாரன், தான் நகரத்தை யடைந்தபொழுது அஸ்தமன மாயினமையின் மறுநாட் காலையில் மன்னனைக் காணலாமென்று கருதி அங்குத் தங்கியிருந்தான். அவன் தந்தையை யிழந்தவன்; இராஜ்யத்தையும் தன் ஞாதிகளிடம் பறிகொடுத்தவன். அவனைக் கண்ட தேஜஸ்வதி தான் காதலித்த ஆடவனிவனென்று நினைத்து ஒன்றும்பேசாமல் ஆசையோடு அவனிடஞ் சென்று அவனைத் தழுவிக்கொண்டு தன் சுயம்வரத்திற்கு அவனைப் பதியாக வரித்தாள். புத்திசாலியாகிய அந்த இராஜகுமாரன் ஒன்றும் பேசாமல், என்ன ஆச்சரியமிது வென்று நினைத்து மனமகிழ்ச்சி யுடனிருந்தான். இனி நமக்குக் கிடைக்கப்போகும் இராஜ்ய லக்ஷ்மியை ஸூசிப்பிக்கும் தேவதை யிவள் என்று கருதினன். தேஜஸ்வதியும் இவள் நமது மனமொப்பி நடக்கும் உத்தமனாக விருப்பின் பிர்மதேவன் நம்மை மோசஞ் செய்யாதவனாவன் என்று கருதினாள். பின்னர் அவ்விருவரும் வெகு நேரம் வரையில் சம்பாஷித்துக் கொண்டிருந்து அப்பால் கூடுவதற்கேற்ற ஸங்கேதங்களோடு பிரிந்தனர். இராஜகுமாரத்தி மாத்திரம் தனியே தன் கிருகம் வந்து சேர்ந்தாள்; இராஜகுமாரன் அன்றிரவை யங்கிருந்து கழித்தான்.

மறு நாட் பொழுது புலர்ந்ததும் ஸோமதத்தன் புறப்பட்டு அரசனுடைய அரண்மனை வந்து காவலாளிகளின் மூலமாகத் தன் வரவை அரசனுக்குத் தெரிவித்தான். அரசன் அவனைத் தன்னிருப்பிடம் அழைத்து வரும்படி காவலாளிக் குத்தரவிட அவன் இராஜகுமாரனை அவ்வாறே அரண்மனைக்குள் அழைத்துக்கொண்டு போய் அரசன் முன்னிலையில் நிறுத்தினான். அரசன் அவனை அன்போடு வரவேற் றுபசரித்து வீற்றிருக்கும்படி சொல்ல, இராஜகுமாரன் உட்கார்ந்ததும் தான் தன் தந்தையை யிழந்ததும் தன்னுடைய ஞாதிகள் தன் இராஜ்யத்தையபகரித்துக் கொண்டதும் கூறித்துக்கித்தான். விக்ரமஸேனன், அவன்மீதிரக்கங் கொண்டு "நீ யஞ்சாதே! உன் பகைவர்களை யழிப்பதற்கு நான் உனக்கு வேண்டிய உதவி செய்கின்றேன்" என்று வாக்குக் கொடுத்தான்.



அப்பொழுதே அவனுக்குத் தன் புதல்வியைக் கொடுக்கவும் தீர்மானித்தான். தன் அமைச்சர்களையும் அப்பொழுதே யழைத்துத் தன் தீர்மானத்தைத் தெரிவித்தான். அரசன் மனைவிக்கு இச்சமயம் பார்த்துத் தேஜஸ்வதியின்தோழிகள் அவள் நிலைமையையும் மற்றும் அவள் நடத்தையையும் தெரிவித்தனள். அதைக் கேட்டுப் பட்டமகிஷி வியப்புற்று அரசனிடம் சமயம் பார்த்துத் தெரிவித்தாள். அரசனும் கேட்டு அநிஷ்டமான விஷயம் சித்திபெறாமல், இஷ்டமான விஷயம் ஸித்திபெற விருந்த இந்தக் காகதாலீய நியாயத்தைக்கண்டு ஆச்சரியங்கொண்டான். அப்பொழுதங்கிருந்த மந்திரி, பிரபுவே! நற்குணமுடையோர் தங்கள் காரியம் ஸித்தி பெறுவதிற் கவனஞ் செலுத்தாதிருப்பின் அவர்களுக்குச் சிறந்த † பிருத்தியன்போல் கடவுளே விழித்துக்கொண் டிருக்கின்றார். அதற்கொருகதை கூறுவதுண்டு; சொல்கின்றேன், கேளுங்கள் என்று கூறுகின்றான்.

ஒரு கிராமத்தில் ஹரிசர்மன் என்னுமொரு விப்பிரனிருந்தான். அவன்வறுமையென்னும் பகைவனிட மகப்பட்டுப்பிழைக்க வழிகாணாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தான். யாவரும் வெறுக்கத்தக்க மூர்க்கனாகவு மிருந்தான். தான் முன்செய்த பாபங்களின் பலனைப் இப்பொழுது அநுபவிக்கும் பொருட்டுப் பிறந்தவன்போலிருந்தான். அவனுக்குக் குழந்தைகள் பலவிருந்தன. அவன் நகரந்தோறுஞ் சென்று பிக்ஷையெடுத்துத் தன் குடும்பத்தைப் பாதுகாத்துவந்தான். இவ்வாறிருக்கும் அவ்வந்தணன் ஒரு சமயம் தன் குடும்பத்துடன் ஒரு நகரஞ் சென்று அங்கே ஸ்தூலதத்தன் என்னும் ஒரு தனவந்தனைக் கண்டு அவனிடம் அவனுடைய பசுக்களைப் பரிபாலிக்கும் தொழிலிலமர்ந்தான். அவன் மனைவி அந்தத் தனவந்தன் வீட்டு வேலைக்காரியாக வமர்ந்தாள். இருவரும் அந்தத் தனவந்தனால் கொடுக்கப்பட்ட ஒரு சிறுவீட்டில் வசித்துவந்தனர்.

இவ்வாறிருந்து வருகையில் அந்த ஸ்தூலதத்தனுடைய மகளுக்கு விவாகங்கூடிற்று. அதன் பொருட்டு அவன் வீட்டிற்கு அநேக பந்து ஜனங்கள் வந்திருந்தனர். ஹரிசர்மன் இந்த விவாக காலத்தில் நமக்கு நல்ல உணவு கிடைக்குமென் றெண்ணிக் களிப்புற் றிருந்தான். பின்னர் மணமுடிந்து எல்லோரும் போஜனஞ்செய்தனர். இவ்வந்தணனை ஒருவரும் கவனித்தார்க

† பிருத்தியன் - அடிமை.

ளில்லை. அதனுல் மிகவும் வருத்தமுற்று அன்றிரவு தன் மனைவி
யை நோக்கி, என்னுடைய தரித்திரநிலைமையினுலும் மூர்க்கத்தன்
மையாலும் எனக்குக் கௌரவக்குறைவுண்டாகின்றது. ஒரு யுக்தி
தோன்றுகின்றதெனக்கு; இந்த ஸ்தூலதத்தன் என்னிடம் மிகுந்த
அன்புடையவனுகி என்னைக்கௌரவிக்குமாறு அவனுக்குக் கிருத்
திரமமாக ஒரு ஞான விஷயத்தை உபதேசிக்கின்றேன் சமயம்
வந்ததானுல் "என் கணவன் மகா ஞானி" என்று யாரிடமாவது
பேசி, அது ஸ்தூலதத்தனுக்குக் கேட்குமாறுசெய், அதில் தந்திர
மிருக்கின்றது; நான் வேறு வேலை செய்கின்றேன் என்று பேசி
முடித்துவிட்டு அன்றிரவு எல்லோரும் நித்திரைசெய்யுந் தருணம்
பார்த்து மணமகன் ஊர்வலம் வரும் பொருட்டுக் கொண்டு
வந்து கட்டியிருந்த குதிரையை யபகரித்துக் கொண்டு போய்
நகரத்திற்கப்பால் ஒரு இரகசியமான இடத்தில் கட்டிவிட்டுத் தன்
வீடு வந்து சேர்ந்தான்

பின்னர் ஊர்வலம் வரும் சமயம் குதிரையைக்கொண்டுவரும்
படி ஸ்தூலதத்தன் தன் ஏவலாளையனுப்பினன். குதிரையைக்
காணுமென்று அந்த ஏவலாள் தெரிவிக்க, ஸ்தூலதத்தன், இஃ
தென்ன ஆச்சரியம்! அமங்களமான செய்தியாக விருக்கின்றது
என்றெண்ணி, குதிரையைத் தேடிக் கொண்டுவர நாலாபக்கமும்
ஆட்களையனுப்பினுன். அப்பொழுது ஹரிசர்மன் மனைவி, ஸ்தூல
தத்தனுடைய செவியிற் படும்படி அங்கு நின்றுகொண்டிருந்த
ஒரு பெண்ணினிடம் "என்கணவன் ஞானவான்; அவருக்கு ஜோ
திடவித்தை தெரியும். அவர் குதிரைபோனவிடத்தைக் கணநேர
த்திற்குள் தெரிவிப்பார். அவரிடம் தெரிவித்தால் குதிரை இப்
போதே கிடைக்கும்" என்றுள். இச்சம்பாஷணை ஸ்தூல
தத்தன் செவியில் விழுந்தது. உடனே அவன் ஹரிசர்மனை
வரவழைத்து, "உன்னை மறந்தே விட்டேன். இப்போது
தான் உன் நினைவுண்டாயிற்று. நான் உன்னை மறந்ததுபற்றி
மன்னிக்கவேண்டும். குதிரையைக் கொண்டு போனவன்
எவன்? இதைத் தெரிந்து சொல்ல வேண்டுகின்றேன்"
என்று கேட்டுக்கொண்டான். ஹரிசர்மன் இதோ சொல்லுகின்
றேன் என்று கூறி ஒரு கோடு கிழித்து அதில் நின்றுகொண்டு
இங்கிருந்து நேர்தெற்கே இந்நகர எல்லைக்கடைசியில் ஒரு சோலை
யில் ஒருமரத்தில் குதிரையைத் திருடர்கள் கட்டியிருக்கின்றனர்



அங்கொரு ஆளையனுப்பிக் குதிரையை ஓட்டிவரச் சொல்லுங்கள்;
தாமதிக்கவேண்டாம். இன்னும் ஒரு ஜாமத்திற்கெல்லாம் திருடர்
கள் அங்கிருந்து குதிரையை வேறிடத்திற்குக் கொண்டுபோக
விருக்கின்றனர்" என்றுன். ஸ்தூலதத்தன் உடனே அங்கொரு
வனை யனுப்பிக் குதிரையைக் கொண்டுவரும்படி செய்தான். இத
ணுல் ஹரிசர்மனை எல்லோரும் ஞானியென்றெண்ணிப் புகழ்ந்தார்
கள். ஸ்தூலதத்தனும் ஹரிசர்மனைப் புகழ்ந்து அவனுக்குத் தக்க
வெகுமானமளித்துக் கௌரவப்படுத்தித் தன்னிடத்திலேயே
வைத்துக்கொண்டிருந்தான்.

இஃதிவ்வாறிருக்க, வெகுநாட் சென்றபின் ஒருநாள் அந்
நகர அரசனுடைய அரண்மனையில் திருடர்கள் பிரவேசித்து,
ஸ்வர்ணம், ரத்தினம், ஆபரணம் முதலியவற்றைக் கொண்டு
போய் விட்டனர். அரசன் அத்திருட்டைப்பற்றியறிய எல்லோ
ரும் ஞானியென்று கொண்டாடும் ஹரிசர்மனை வரவழைத்
துக் கேட்டான். ஹரிசர்மன் அரசன் வினவியும் சற்று மௌனமா
யிருந்து "பிரபுவே! நாளையதினங்காலை வந்து தெரிவிக்கின்றேன்.
அதுவரையில் அவகாசங் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்
கொண்டான். அரசன் உடனே அந்த ஹரிசர்மனைக் காவலில்வை
த்து அரண்மனையிலேயே யிருக்கும்படி செய்தான். ஹரிசர்மன் இச்
சமயம் நாம் எப்படித்தப்புவது, நாம் முன் செய்தயுக்தி மூடத்
தனமாகவல்லவா முடிந்தது என்றெண்ணி மிகுந்த வருத்தத்துட
னிருந்தான். அன்றிரவு அந்த ஹரிசர்மனுக்குத் தூக்கம் பிடிக்க
வில்லை, அதனுல் அவன் உட்கார்ந்துகொண்டு "ஏஜிஹ்வே!
(நாவே) சுகத்தில் விருப்பங்கொண்டு ஏன் இந்த மூடத்தனமான
காரியஞ் செய்தாய்; இப்போது ஏற்படும் தண்டனையை அநு
பவி" என்று தன் நாவைத் திட்டிக்கொண்டான். அந்த அரண்
மனையில் ஜிஹ்வை யென்னும் வேலைக்காரிபொருத்தி யிருக்கின்
றுள். அவளும் அவளுடன் கூடப்பிறந்தவனும் சேர்ந்து அரண்
மனையில் திருடினர். அந்த ஜிஹ்வை இச்சமயம் விழித்துக்கொ
ண்டு இந்த ஹரிசர்மன் என்ன செய்கின்றுன் என்று கவனிப்ப
தன் பொருட்டு அவனிருக்குமிடம் ஒருவருமறியாதபடி வந்து
நின்றுகொண்டிருந்தாள். அவன் ஜிஹ்வையை (நாவை)க் குறி
த்துத் திட்டிக்கொண்டிருந்தது அவள் செவியிற் படவே ஓகோ!
நம்மை ஹரிசர்மன் கண்டுகொண்டான் என்றஞ்சி ஒரு யுக்தி

யால் அவனிடஞ் சென்று அவனுடைய பாதங்களிற் பணிந்தெழுந்து கைகுவித்து நின்று, "அந்தணசிரேஷ்டரே! நான்தான் ஜிஹ்வை; அரண்மனையில் திருடியவள் நான்தான்; திருடிய பொருள்களையெல்லாம் இந்த அரண்மனைக்குப் பின்புறத்துள்ள உத்பானவனத்தில் ஒரு மாதுளைமரத்தடியில் புதைத்துவைத்திருக்கின்றேன்; இந்த நகையை நான் உங்களுக்குக் கொடுக்கிறேன்; என்னையெவ்வாறாகவேனும் காப்பாற்றவேண்டும்" என்று கூறித் தன்நகையிலொன்றைக் கழற்றிக்கொடுத்தாள். அந்தணன் அதைப் பெற்றுக்கொண்டு கர்வத்துடன் அவளைநோக்கி, ஜிஹ்வே நீ போகலாம்; நடந்தது நடப்பது நடக்கப்போவது மூன்றையும் நானறிவேன்; உன்னை நான் வெளிக்குக்காட்டாமல் தப்புவிக்கின்றேன்; நீ போவென்றுரைத்தான். ஜிஹ்வை கடவுளின் கிருபையால் தப்பினேம்; இனி இத்தொழிலை மறந்துவிட வேண்டுமென்றெண்ணி ஹரிசர்மனை நோக்கி நான்போய் வருகின்றேன்; என்னைக் காப்பாற்றவேண்டும்; நான் என்றுமிதை மறக்கமாட்டேன் என்று கூறி விடைபெற்றுச் சென்றாள். ஹரிசர்மன், "ஆச்சரியம், தெய்வம் அநுகூலமாக விருந்தால் சாதிக்கக் கூடாத விஷயமும் சாதிக்கக்கூடியதாகின்றது; நான் என் விதியையும் மூடத்தனத்தையும் எண்ணி என்னுடைய ஜிஹ்வையை நிந்தித்துக் கொண்டிருக்க, எனக்கு வரவிருந்த தீமை நன்மையாக மாறியது. இது தெய்வச்செயலே யல்லது நம்முடையதா" என்று கருதி அன்றிரவு முழுதும் சந்தோஷசித்தனாகவே யிருந்தான்.

மறுநாள் அரசன் ஹரிசர்மனை வரவழைத்து விசாரித்தான்: ஹரிசர்மன் "பிரபுவே! திருட்டைக் கண்டுபிடித்துவிட்டேன்; சொத்துக்கள்யாவும் உத்யானவனத்திலிருக்கின்றன" என்று கூறி அரசனை உத்பானவனம் அழைத்துச் சென்று மாதுளையின்கீழிருந்த திருட்டுச் சொத்துக்களையெடுத்துக்கொடுத்தான். அவற்றுள் சில காணாமலிருந்தன. அவற்றைப்பற்றி அரசன்கேட்டான்; ஹரிசர்மன், "பிரபுவே! அவற்றைத் திருடர்கள் எடுத்துக்கொண்டு போய் விட்டனர்" என்றான். அரசன் அன்று முதல் ஹரிசர்மனை ஒருபெரிய ஞானியென்றே நம்பி அவனைப் புகழ்ந்து அவனிடங் கொண்ட சந்தோஷத்தினால் சில கிராமங்களை அவனுக்குச் சன்மானமாவளிக்க யத்தனித்தான். அச்சமயம் அவ்வரசனுடைய மந்திரி, "பிரபுவே! இவ்வறிவானது சாஸ்திரப்பயிற்சியில்லாமலேற்



படக்கூடியது. திருடர்களின் சங்கேதத்தினால் ஏற்பட்டிருக்கும் துஷ்டர்களின் பிழைப்பிதுவென்று நிச்சயிக்கின்றேன். ஆகையால் இவனை இன்னொரு அம்சத்தில் பரீக்ஷித்துப் பார்த்துச் செய்வோம்" என்று செவியில் மெதுவாய்த் தெரிவித்தான்.

இங்ஙனமாக, ஒருநாள் அரசன் ஒரு புதுக்குடத்தை யெடுத்து அதில் மண்டூகத்தை விட்டு மேலே மூடிக்கொண்டு வந்து ஹரிசர்மனை யழைத்து, "ஓய்! இதிலென்னவிருக்கிறதென்றுசொல்வீராயின் உமக்கு இப்பொழுது நல்ல வெகுமதி தருகின்றேன்" என்றான். ஹரிசர்மன், இம்முறை நாம் தப்பப்போவதில்லை என்று பயந்தானாயினும் தெய்வத்தின் பிரேரணையினால் தன்னைத் தன் தந்தை சிறுவயதில் விளையாட்டாகக் கூப்பிட்டு வந்த மண்டூகம் என்னும் பெயரை நினைத்துக்கொண்டு "மண்டூகமே! இக்குடமானது சாதுவும் பராதீனமுமான உன்னை நாசஞ்செய்யக்கூடியது" என்று கூறித் தன்னைத் திட்டிக்கொண்டான். இதைக்கேட்ட அரசன், "ஓய் குடத்திற்குள்ளிருக்கும் தவளையை (மண்டூகத்தை) நீர் எப்படியறிந்தீர்?" என்று கூறி வியப்புற்று அவன் பரமஞானியென்பதில் ஐயமில்லையென்று நம்பி முன் தீர்மானித்தபடி ஹரிசர்மனுக்குக் கிராமங்களையும் கொடைவாகனமுதலியவற்றையும்வெகுமானமாகக்கொடுத்துக் கௌரவப்படுத்தினான்.

நல்லகாரியம் செய்பவனுக்கு இவ்வாறு வேளையும் விஷயமும் வந்து கூடுகின்றன. ஆகையால் "விக்ரம ராஜனே! உமது கன்னிகையாகிய தேஜஸ்வதிக்குத் தகாத புருஷனைத் தெய்வமே தடைசெய்து தகுந்த வரனான ஸோமதத்தனை அடையுமாறுசெய்தது" என்று அமைச்சன் கூறக்கேட்டு அரசன் மகிழ்வெய்தி பூமகள் போன்ற தன் குமாரத்தியை ஒரு சுபதினத்தில்விவாகஞ் செய்துகொடுத்தான். அப்பால் ஸோமதத்தன் விக்ரமஸேனராஜனுடைய சேனையுடன் சென்று தன் ஞாதிகளை ஜயித்துத் தன்இராஜ்யத்தையடைந்து அதில் மனைவியுடனிருந்து வாழ்ந்து வந்தான்.

களிங்கஸேனை "இவையாவும்தெய்வவசத்தால் முடிகின்றன. ஆகையால் உனக்குத் தக்க புருஷனாகிய வத்ஸராஜனை யடைவதற்குத்தெய்வசகாயமின்றிமுடியாது;என்னால் அதற்கு என்னசெய்ய முடியும்?" என்றாள். இக்கதையைக் கேட்ட களிங்கஸேனை தன் எண்ண முழுவதையும் உதயனனிடத்தில் வைத்து எவ்வாறாவது

அவனையே யடையவேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டாள். இப்பொழுது மூவுலகங்களுக்கும் தீபமாகிய சூரியன் அஸ்தமனமாயினான். பிறகு ஸோமப்பிரபை களிங்கஸேனையினிடம் விடைபெற்றுக்கொண்டு ஆகாய வழியே தன் கிருகம் சென்றாள்.

நான்காவது தரங்கம்

முற்றிற்று.



## 5-வது தரங்கம்.



மறு நாள் வழக்கம்போல் ஸோமப்பிரபை களிங்க ஸேனையிடம் வந்து கதைபேசிக் கொண்டிருந்தாள். அப்பொழுது களிங்கஸேனை, ஸோமப் பிரபையைப் பார்த்து, "தோழி! என் பிதா என்னைப் பிரஸேனஜித்திராஜனுக்குக் கொடுக்கப் போகின்றாரென்பது நிச்சயமாய் விட்டது. என் தாயார் எனக்கு இதைத் தெரிவித்தாள். நீயும் இந்தப் பிரஸேனஜித்திராஜனைப் பார்த்திருக்கிறாயன்றோ? அவனோ வயது சென்றவன். வத்ஸராஜன் அழகிற் சிறந்தவனென்று நீயே சொல்லுகிறாய். அவன் என் மனத்தைக் கொள்ளைகொண்டு விட்டான். ஆகையாலென்னைப் பிரஸேனஜித்திராஜனிடம் அழைத்துக் கொண்டுபோய்க் காண்பித்துவிட்டு அப்பால் உதயனனிடம் என்னை அழைத்துக் கொண்டுபோ. என் பெற்றோரால் நான் ஒரு பயனையு மடையப்போகிறதில்லை" என்றாள். ஸோமப்பிரபை, தோழி! அப்படியாயின் நாம் ஆகாயமார்க்கமாகச் செல்லும் யந்திரத்தின் மூலமாகச் செல்லுவோம். நீ உன் ஆடையாபரணாதிகளை யெல்லாம் எடுத்துக் கொள். நீ உதயனனைப் பார்ப்பாயாயின் மீண்டுமிங்குத் திரும்பி வரமுடியாது. மறுபடி உன் பெற்றோரை நீ பார்க்கவு மாட்டாய். நான் வெகுதூரத்தி லிருப்பவளாதலால் கணவனை யடைந்தபின்பு என்னை நீ மறந்துவிடுவாய். அப்பொழுது உன் கணவனுடைய கிருகத்திற்கு நான் வரமாட்டேன்" என்றாள். இதைக் கேட்ட களிங்கஸேனை, கண்கலங்கி வருத்தத்துடன் ஸோமப்பிரபையை நோக்கி, அவ்வாறாயின் அந்த உதயனனை நீயே இங்கு வரவழைத்துக் காட்டு, நான் உன்னைப் பிரிந்து அங்கு ஒரு கணமுமிரேன். சித்திரலேகை அனிருத்தனையுபாயத்தால் அழைத்துவரவில்லையா?



இச் சரித்திரம் உனக்குத் தெரியுமேயாயினும் நான் ஒரு முறை உனக்குக் கூறுகின்றேன் கேள்.

பாணாசுரன் என்னுமொரு அசுரனிருந்தான். அவனுக்கு உஷை என்னுமொரு பெண்ணிருந்தாள். அவள் தக்க கணவனையடையும் பொருட்டு உமையைப் பூசித்தாள். உமாதேவி அவளுக்குப் பிரத்தியட்சமாகி, "நீ உன் கனவில் எந்தப் புருஷனைக் காண்கின்றாயோ அவனையே நீ கணவனாகவடைவாய்" என்றுவரங் கொடுத்து மறைந்தனள். அவ்வாறே உஷை தன் கனவில் ஒரு தேவ குமாரனைக் கண்டாள். அவனை யப்பொழுதே காந்தர்வ விதிப்படி விவாகம் செய்து கொண்டு ஸுகமநுபவித்துக் கொண்டிருந்து விடியற்காலம் விழித்துக் கொண்டாள். தன்னுடனிருந்து ஸுகந் தந்த புருஷனைக் காணாமல், கௌரீ தேவி கொடுத்தவரனையெண்ணி யெண்ணி ஆதங்கம், பயம், ஆச்சரியம் இவைகளை யடைந்தனள். அவ்வாறிருப்பதைப் பார்த்து அவளுடைய தோழி சித்திர லேகை, "ஏன் மனவாட்டமாக இருக்கின்றாய்? காரணமென்ன?" என்று வினவ, உஷை யவளிடம் நடந்ததை யெல்லாம் தெரிவித்தாள். சித்திர லேகை, "இது தேவியினுடைய வரத்தின் மகிமை! எந்த அடையாளமும் உன்னால் தெரிவிக்க முடியவில்லை. அவனை நான் எப்படித் தேடிக் கண்டுபிடிப்பேன்? தேவர், அசுரர், மானுடர் இவர்களுடைய உலகங்களை நான் எழுதிக் காட்டுகின்றேன். அவற்றை நீ பார்த்து நீ கனவிற் கண்ட குமாரனை அங்குக் காட்டு" என்றாள். உஷை அவ்வாறே செய்கிறேன் என்று கூறினள்; சித்திரலேகை, உலகங்களை எழுதிக் கையிற் கொடுத்தாள். உஷை அவற்றைப் பார்த்துத் துவாரகையிலிருந்த அநிருத்தனைக் காட்டினாள். சித்திரலேகை, தோழி! "நீ பாக்கியஞ் செய்தவளாகின்றாய்? உனக்கு ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவினுடைய பேரனாகிய அநிருத்தன் கணவனாக வாய்த்திருக்கின்றான். அவர் இருக்குமிடம் இங்கிருந்து அறுபதினாயிரம் யோஜனை தூரமிருக்கும் என்றாள்.

இதைக் கேட்ட உஷை மிகுந்த சந்தோஷமடைந்து, சித்திரலேகையை நோக்கி, "குளிர்ந்த மனமுடைய அவர் மடிமீது இப்பொழுதே படுத்துச் சம்பாஷியாவிடில், நான் காமத்தீயால் பொசுங்கி மரணமடைவேன்" என்றாள். சித்திரலேகை, உஷையை

ஸமாதானஞ் செய்து, அப்பொழுதே ஆகாயமார்க்கமாகக் கிளம்
பிச் சென்று உன்னதமான கிருகங்களுடன் கூடியதும் கடலின்
நடுவே யிருப்பதும் மந்தர மலையின் சிகரமோ வென்று பிர
மிக்கக் கூடியதுமாகிய துவாரகையைக் கண்டாள். அவள் அந்
நகரை யடையும்போது, நடு ராத்திரியாகையால் அச்சமயம் அநி
ருத்தன் நித்திரை செய்துகொண்டிருந்தான். அவனைச் சித்திர
லேகை யெழுப்பி, உஷை அவனைத் தன் கனவிற் கண்டு அதனால்
அவனிடம் அன்பு கொண்டிருப்பதைத் தெரிவித்தாள். அநிருத்
தன் உஷையின் அழகையும் ஸ்வப்பன வரலாற்றினையும் கேட்டு
மகிழ்வெய்தி ஒரு கணப்பொழுதில் ஸித்தியின் மகிமையால் அங்
கிருந்து சித்திரலேகையுடன் தன் வரவுக் கெதிர் பார்த்திருக்கும்
உஷையினுடைய அந்தப் புரத்தில் ஆகாய வழியேவந்து பிரவே
சித்தான். பிரத்தியக்ஷமாக அநிருத்தன் வந்திருப்பதைக் கண்ட
உஷை, சந்திரனைக் கண்ட ஸமுத்திரம் போல மனம் நிலைகொள்
ளா துவகையடைந்து, சித்திரலேகை கொடுத்த பிராணனெனக்
கருதி அவனுடன் சம்பாஷணை முதலிய லீலைகளைச் செய்து
ஆனந்தமடைந்தாள்.

இதையறிந்த பாணாசுரன் சினங்கொண்டு அநிருத்தனை யெதி
ர்த்து அவனோடு அமர் புரிந்தான். அநிருத்தன் தன் பராக்கிர
மத்தாலும் ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய ஸகாயத்தாலும் இவனை
வென்று உஷையுடன் துவாரகை சென்று பார்வதி பரமேசுவரன்
போல மனமொப்பி வாழ்ந்து வந்தனர். ஓரிரவில் சித்திரலேகை
யினால் இவ்வாறு இம்மணம் நிறைவேறியது. தோழி! அந்தச்
சித்திரலேகையினும் நீ சாமார்த்தியசாலி யென்பதிலையமில்லை.
ஆகையால், நீ மனம் வைத்தால் அந்த உதயனனை எப்படியும்
அழைத்து வரக்கூடும். உன்னை வேண்டிக்கொள்கின்றேன். கால
தாமதஞ் செய்யாமல் சென்று வரவேண்டுகின்றேன் என்றாள்.

சோமப்பிரபை, "தோழி! அந்தச் சித்திரலேகை தேவ
ஸ்திரீயாகையால் அந்த அநிருத்தனை அழைத்து வந்தாள். பிறரை
ஸ்பரிசிக்காத என்போன்ற பெண்களால் என்னசெய்ய முடியும்?
வேண்டுமானால் உன்னை உதயனனிருக்கு மிடத்திற்கு அழைத்துச்
செல்கின்றேன். முதலில் உன்னை விரும்பும் பிரஸேனஜித்தி ராஜ
னிடம்" போவோம், என்றாள். களிங்கஸேனை அவ்வாறே செய்வோ
மென்று கூற, உடனே சோமப் பிரபை தன்னுடைய மாய யந்



திரத்தை வரவழைத்தாள். அதில் இருவரும் ஏறிக்கொண்டனர்.
யந்திரம் சோமப்பிரபையின் பிரேரணைப்படி உடனே ஆகாய
மார்க்கமாகக் கிளம்பிச் சென்றது. ஸ்திரீகள் காமவெறி கொள்
வார்களாயின் முன்னாலிருக்கும் மேடு பள்ளங்களைக் கவனியாது
வேகமாக ஓடும் குதிரையைப் போல ஒன்றையும் நோக்காமல்
தங்களிச்சையை நாடிச் செல்வார்கள். ஆகையால் அவ்வாறே
இவர்களும் எதையுங் கவனியாமல் சென்று சிராவஸ்தி நகர
மடைந்தனர். அச்சமயம் அந்நகரமன்னனாகிய பிரஸேனஜித்
தன், வேட்டையாடப் புறப்பட்டுக் கானகத்தில் வேட்டையாடிக்
கொண்டிருந்தான். மூப்பினால் உடல் மெலிந்து வெளுத்துப்போ
யிருக்கும் அம்மன்னனைக் கண்டனர். அவனுக் கிருமருங்கும்
சாமரைகள் வீசப்பட்டன. அத்தோற்றம் மூப்படைந்த இந்த
வேந்தனை மறந்து வேறுபக்கம் செல்வாயாக என்றுரைப்பது
போல் காணப்பட்டது. சோமப்பிரபை களிங்கஸேனையைப்பார்
த்து, நகைத்து, "பார். இவன்றான் பிரஸேனஜித்தன்; இவனுக்குத்
தான் உன் தந்தை உன்னைக்கொடுக்க நிச்சயித்திருக்கின்றார்" என்
றாள். களிங்கஸேனை, "சீ, இவன் பெருங்கிழவன்; இவனை என்
போன்ற மாதரில் யாவரே விரும்பி மணந்துகொள்வர்; நான் இவ
னைக் கண்ணெடுத்துப் பாரேன். என்னை இக்கணமே தயை
செய்து உதயனனிடம் அழைத்துக்கொண்டுபோய்க் காண்பிப்பா
யாக" என்று கூறினாள். உடனே சோமப்பிரபை தன் யந்திரத்
தைக் கௌசாம்பி நகரஞ் செல்லப் பிரேரபிக்க அவ்வாறே அது
நொடிப் பொழுதில் கௌசாம்பி நகரஞ் சென்றது.

இவர்கள் அந்நகரமடைந்த சமயம் உதயனன் உத்தியான
வனத்தி லிருந்தானாகையால், அவனைத் தேடிக் கண்டுபிடித்
துக் களிங்கஸேனைக்குக் காட்டினாள் சோமப்பிரபை. அவனைக்
கண்ட களிங்கஸேனைச் சகோரப்பேடு சந்திரனைக் கண்டதுபோல்
மகிழ்ந்து ஹிருதயத்திற் கையை வைத்தாள். அவளவ்வாறு ஹிரு
தயத்திற் கையை வைத்துக்கொண்டது இவ்வழியாகத் தான் உத
யனன் என் ஹிருதயத்திற்குள் பிரவேசித்தான் என்று சமிக்
ஞையால் தெரிவிப்பது போலிருந்தது. அப்பால், களிங்கஸேனை,
"தோழி! என்னை இந்த நிமிஷமே இந்தச் சுந்தர ரூபனோடு சேர்த்
துவைக்க வேண்டும். இவரைத் தரிசித்து இனிக் கணமேனும்
தனித்திருக்கச் சகியேன் என்று கூறினாள். சோமப்பிரபை,

‘‘தோழி! இப்போது சில அபசகுனங்கள் காணப்படுகின்றன.
ஆகையால் இன்று பொறுத்துக்கொள்; இன்று முழுதும் இவ்வுத்
யான வனத்திலே நீ யிருந்துகொண்டிரு; நான் மாத்திரம் போய்க்
காலையில் இங்குவந்து உதயனனை நீயடையும் யுக்திசெய்கிறேன்’’
என்று கூறித் தன் கணவனிருக்குமிடம் சென்றாள்.

களிங்கஸேனை மாத்திரம் அந்த உத்யானவனத்திலிருந்
தாள். உதயனன் தன் அரண்மனை சென்று விட்டான். அப்பால்
களிங்கஸேனை, விரும்பிவந்த பொருளைக் கண்ணாற் கண்டும்
அடையப் பாக்கியமில்லாதவளாக விருக்கின்றேனே யென்று வரு
த்தப்பட்டுக் கொண்டிருந்தாள். அப்பொழுது அங்கொரு காவ
லாளி வந்தான். அவனைக் களிங்கஸேனை நயந்துகொண்டு அரசனி
டஞ்சென்று தான் அந்த உத்யான வனத்திற்கு வந்திருப்பதையும்
தன் கருத்தையும் தன்பேர் ஊரையும் தெரிவிக்கும்படி வேண்டிக்
கொண்டாள். அந்தக் காவலாளி அவ்வாறே ஆகட்டுமென்று செ
ன்று அரசனிடம் போய் அவனை வணங்கிக் கைகுவித்து நின்று,
பிரபுவே! தக்ஷசிலைராஜனாகிய களிங்கதத்தனுடைய பெண் களிங்க
ஸேனை யென்பவள், தங்களை மிக்க ரூபவானென்று கேட்டுத் தன்
உறவினரைவிட்டு ஸ்வயம்வரத்தை விரும்பி ஆகாய மார்க்கமாகச்
செல்லும் விமானத்திலேறித் தன் தோழியுடன் இங்கே வந்திருக்
கின்றாள். மயாசுரன் குமாரியும் நளகூபரன் மனைவியுமாகிய
ஸோமப்பிரபை யென்பவள் இவளை இங்கே யழைத்து வந்திருக்
கின்றாள். தங்களிடம் இச்செய்தி தெரிவிக்கும்படி அவ்வழியே
சென்ற எனக்குக் கட்டளையிட்டாள்’’ என்று கூறினான். உதயனன்
இதைக் கேட்டதும் பெருமகிழ்ச்சி யடைந்து அந்தக் காவலாளிக்கு
வஸ்திர முதலியவற்றை வெகுமானமாகத் தந்து, ‘‘கவனிக்கின்
றோம் போ’’ என்றனுப்பிவிட்டான். பின்னர்த்தன் அமைச்சர்களுள்
சிறந்தவனாகிய யௌகந்தராயணனை யழைத்து, ‘‘களிங்கதத்த ராஜ
னுடைய புத்திரியாகிய களிங்கசேனை பூவுலகில் நிகரற்ற அழகுடை
யவளென்பதை நாமறிவோம். அவள் என்னைக் கணவனாகவடைய
விரும்பித் தானே இங்கு வந்திருக்கின்றாள்; வேண்டாமென்று
தள்ளத்தக்கவளல்ல, அவளை நான் மணம்புரிந்து கொள்ள
வேண்டும். அதை எப்பொழுது நிறைவேற்றிக் கொள்ளலாம்’’
என்று கேட்டான்.

இதைக் கேட்ட யௌகந்தராயணன், உதயனனுக்கு வரும்
நன்மையை விரும்பி களிங்கஸேனையோ சிறந்த ரூபமுடையவள்.



அவள் மூவுலகும் புகழத்தக்க ஸ்திரீரத்னம். அவளுக்கு நிகரானவ
ளில்லை யென்பது யாவருமறிந்த விஷயம். அவளைத் தேவர்களும்
விரும்புகின்றனர். அவளை அரசனடைவானாயின் வேறொன்றை
யுங் கவனியாது விட்டுவிடுவான். அதனால் தேவியாகிய வாஸவ
தத்தை உயிரையிழந்து விடுவாள்; குமாரன் நரவாஹனதத்த
னும் பத்மாவதியும் பின்னர் மனம் பொறாமல் வருத்தத்துட
னிறந்துவிடுவார்கள். வாஸவதத்தை பத்மாவதி இவ்விருவருடைய
பெற்றோரும் பிராணனை யிழக்கவோ அல்லது பெரிய வருத்
தத்தையோ அடைவார்கள்.

கடைசியில் எல்லோருக்கும் நாசம் ஏற்படும். இப்போது
அரசனைத் தடைசெய்யவும் கூடாது. தடுப்போமாயின் மிகுதி
யும் வருத்தப்படுவார். ஆகையால் கொஞ்சகாலம் தாமதமாகும்
படி செய்கின்றேன் என்று யோசித்துக்கொண்டு அரசனை நோ
க்கி, ‘‘தாங்கள் கிருதார்த்தரானீர்கள்; தங்களுடைய கிருகந்தேடித்
தானே வந்திருக்கிறாளல்லவா களிங்கஸேனை. அவளுடைய தந்
தையாகிய களிங்கதத்த ராஜனும் நமக்குக் கீழ்படிந்தவனானான்.
ஆகையால் ஜோதிடந் தெரிந்தவர்களைக் கேட்டு நல்ல நாள் பார்
த்து விவாகத்தை நிச்சயித்து முடிப்போம். இக்கன்னிகை பெரிய
அரசனொருவனுடைய புதல்வியல்லவா? அதுவரையில் இந்தப்
பெண் வசித்திருக்கத் தக்க இடத்தையும் தாதியர்களையும் ஏற்படு
த்திவைத்திருப்போம்’’ என்று தெரிவித்தான்; அரசன் அவ்வாறே
செய்வோமென்று சொன்னான். பின் களிங்கஸேனைக்கு வேண்
டிய சௌகரியங்கள் செய்யப்பட்டன. களிங்கஸேனை தன்மனக்
கோரிக்கை நிறைவேறியதென்று எண்ணி மகிழ்ந்து தனக்கென்று
ஏற்படுத்தப்பட்ட கிருகத்திற்குச் சென்றாள். யௌகந்தராயண
னும் பிறகு தன் வீடுவந்து ஓரிடத்தில் உட்கார்ந்து, கெட்ட
காரியத்திற்குப் பெரும்பான்மையும் காலதாமதம் செய்வதே ஏற்ற
தந்திரமாகும். முன்னர் விருத்திராசுரனுக்குப் பகைவனாகிய இந்
திரன், பிர்மஹத்தி தோஷத்தினால் ஓடிப்போனவுடன், நகுஷன்
என்பவன் தேவராஜ்பத்தை யடைந்தான். அவன் இந்திராணி
யை விரும்பினான். இந்திராணி தேவகுருவாகிய பிரஹஸ்பதியி
னிடம் சரணம் புகுந்தாள். அப்பொழுது அவ்வரசன் தன்னிடம்
இந்திராணி வருவாளென்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தான்.
ஆனால் சிறிது நேரத்திற்கெல்லாம் பிராம்மணசாப மேற்பட்டு

அவ்வரசன் நாசமடைந்தான். அப்பால் தேவேந்திரன் முன்
போல் அரசனாய்விட்டான். அவ்வாறு இந்தக் களிங்கஸேனையின்
சம்பந்தத்தில் காலதாமதம் செய்கின்றேன் என்று யோசனை
செய்து, சோதிடர்கள் யாவருக்கும் இரகசியத்தில் சிறிது நாட்க
ளுக் கப்பால் லக்கினம் வைத்துத் தரும்படி சொல்லிவிட்டான்.

இச்செய்தி வாஸவதத்தைக்குத் தெரிந்தது. அவள் யௌ
கந்தராயணனைத் தன் அரண்மனைக்கு வரவழைத்து, அவனை நோ
க்கி, மிகவும் வருத்தத்துடன் “ஆர்ய! தாங்கள் முன்பு என்னி
டம் சொன்னதென்ன? நினைப்பில்லையா? நானிருக்கும் வரையில்
பத்மாவதியைத் தவிர வேறொருவரும் உனக்குச் சக்களத்தியாக
வரமாட்டாளென்று சொன்னீர்களல்லவா? இப்பொழுது மகா
ராஜா களிங்கஸேனை யென்னும் ராஜகுமாரத்தியை விவாகஞ்
செய்துகொள்ளப் போகின்றாராமே! அவள் அதிரூபவதியாக
விருக்கின்றாளென்றுங் கேள்வி. ஆகையால் அவளைத் தான் அர
சன் விரும்புவார் என்பது நிச்சயம். உமது வார்த்தை வீணாய்
விட்டது. இனி நான் மரணமடைந்தவளானேன்” என்று கூறிக்
கண்கலங்கினாள். யௌகந்தராயணன், தேவி! எச்சமயமும் தைரி
யத்தைக் கைவிடலாகாது. நான் உயிருடனிருக்கும்போது இக்
காரியம் எவ்வாறு நிறைவேறும்? தாங்கள் இதற்காக மகாராஜா
வுக்குப் பிரதிகூலமாக விருக்கவேண்டாம். தைரியத்துடன் அநு
கூலமாகவே யிருங்கள். ரோகி வைத்தியன் கூறும் அநுகூலமான
வார்த்தைகளில் சுவாதீனமடைவானா? ஆகையால் மகாராஜா
தங்களிடம் வரும்போது எப்போதும்போ விருந்து உபசாரங்
களைச் செய்துகொண்டிருங்கள் அவர் தாம் களிங்கஸே
னையை விவாகஞ் செய்துகொள்வதைப் பற்றிச் சம்மதங் கேட்
டால், “இப்போதே செய்து கொள்ளுங்கள்; அந்தக் களிங்க
ஸேனையின் தந்தையாகிய களிங்கதத்தனுடைய சகாயமும் ராஜ்
யத்திற்கு ஏற்பட்டு இராஜ்யம் விர்த்தியாகும்” என்று தெரிவியுங்
கள். இவ்வாறு செய்தால், உங்களிடமுள்ள மகிமையை ராஜா
பார்த்து, உங்களிடம் நட்பையும் தாக்ஷிண்யத்தையும் வைப்பார்.
அப்பால், களிங்கஸேனை தன் சுவாதீனமாய் விட்டதாகவெண்ணி
அவளிடம் அதிக உற்சாகங் கொள்ளமாட்டார். விஷயசுக மனுப
விக்கும் ஒருவனைத் தடைசெய்தால் அவனுக்கு அந்த விருப்பம்
விருத்தியாகும். தேவி! இந்த விவரத்தைப் பத்மாவதிக்கும்



ஞாபகப்படுத்தவேண்டும். இவ்வாறிருப்பின் மகாராஜா நான்
செய்துவரும் காலதாமதத்தைச் சகிப்பார். இதற்காக நான்
என்ன செய்யவேண்டுமோ அதையறிவேன். என் யுக்தியின்
வலு எப்படிப்பட்டதென்பதை நீங்களறியலாம். புத்திமான்களைச்
சங்கட காலத்திலும் சூரர்களை யுத்தகாலத்திலும் பரீக்ஷிக்கவேண்
டும். தேவி! தாங்கள் வருத்தப்படவேண்டாம் என்று கூறினான்.
வாஸவதத்தை மந்திரியின் வார்த்தையில் நம்பிக்கை வைத்து மன
வமைதி யடைந்தாள். யௌகந்தராயனன் விடைபெற்றுக்
கொண்டு தன் கிருகம் சென்றான். உதயனன், அன்று பகல் இரவு
இரண்டு காலங்களிலும் வாஸவதத்தையினுடைய அந்தப் புரத்
திற்காவது பத்மாவதியினுடைய அந்தப்புரத்திற்காவது போக
வில்லை. மகிமை பொருந்திய ஸ்வரத்தைக் கருதித் தானேவந்த
களிங்கஸேனையின் மன உற்சாகம்போல் அவளையடைய வேண்டு
மென்னும் உற்சாகத்தில் மூழ்கினவனாக விருந்தான்.

ஐந்தாவது தரங்கம்
முற்றிற்று.



## 6-வது தரங்கம்.



பின்னர் ஒரு நாட் காலையில் தன் வரவை யெதிர் பார்த்துக்
கொண்டிருக்கும் உதயனனிடம் யௌகந்தராயணன் சென்று
பணிந்து அவனுடைய ஆசனத்தமர்ந்து “பிரபுவே! களிங்க
ஸேனைக்கும் தங்களுக்கும் பொருத்தமான லக்கினத்தைப்பார்த்து
விவாகம் நிச்சயிப்பதில் தாமதமேன்? என்று கேட்டான். அரசன்
உடனே காவலாளியை யழைத்து ஜோதிடர்களைத் தருவிக்குமாறு
ஆக்ஞாபித்தான். அவன் அரசனாக்ஞையைச் சிரமேற்கொண்டு
விரைவிற் சென்று சோதிடர்களை யழைத்து வந்தான். சோதிடர்
கள் யாவருக்கும் யௌகந்தராயணன் முன்னமே சொல்லி வைத்தி
ருக்கிறானதலால், யௌகந்தராயணன் லக்கினம் பார்த்துச் சொல்
லும்படி கேட்டதும், அரசனுக்கும் அப்பெண்ணுக்கும் பொருத்
தமான நாள் இன்றைக்கு ஆறாவது மாதத்திலிருக்கிற தென்று
ஏகோபித்துக்கூறினர். யௌகந்தராயணன் இதைக்கேட்டதும்
கோபங்கொண்டவன்போலப் பிரலாபித்து, அரசனை நோக்கி, இந்

தச் சோதிடர்கள் அறியாதவர்கள், இவர்களைச் சுடவேண்டும் என்று வெறுத்துப் பேசி, தங்களிடம் முன் வெகுமான மடைந்த சோதிடரை வரவழைப்போம்; அவர் பரமஞானி; அவர் ஏனோ இங்கிகேவரவில்லை. அவரை வரவழைத்துக் கேட்போம்" என்றான்.

அரசன், இதனால் சஞ்சலமடைந்து யௌகந்தராயணன் குறிப்பிட்ட சோதிடனையும் வரவழைத்துக் கேட்டான். அவனும் யௌகந்தராயணனுடைய தந்திரத்தி லகப்பட்டவனாகையால், தன்னை லக்கினங் கேட்டவுடன் சற்றுநேரம் யோசித்துப் பார்த்து, ஆறாவது மாதக் கடைசியில் லக்கின மிருப்பதாகக் கூறினான். இதைக் கேட்ட யௌகந்தராயணன் வருத்தமுற்றவன்போல அரசனை நோக்கி, "இனிச் செய்யவேண்டிய தென்ன? தயை செய்து தெரிவிக்க வேண்டும்" என்றான். அரசன், சற்றாலோசித்து, இவ்விஷயத்தைப் பற்றிக் களிங்கஸேனையைக் கேட்போம்; அவள் கூறுவதையும் கவனிப்போம்" என்றான்.

யௌகந்தராயணன் இதைக்கேட்டதும் அவ்வாறே செய்கின்றேன் என்று கூறி, இரண்டு ஜோதிடர்களை யழைத்துக்கொண்டு களிங்கஸேனையினிடம் சென்றான். மந்திரியைக் கண்டதும் களிங்கஸேனை மனமகிழ்ச்சியொடு எழுந்துபசரித்து, வரவேற்றாள். மந்திரி அவ்வணங்கின் எழிலைக் கண்டு, இவள் அரசனுக்கு மனைவி யாவாளேயாயின், காமமோகிதனாகி ராஜ்யத்தைக் கவனியாம லிருந்துவிடுவா னென்பதி லையமில்லை என்று எண்ணினான். பிறகு உடனே அந்தக் களிங்கஸேனையை நோக்கி, "அம்மா தங்களுக்கு விவாக முகூர்த்த நாளை நிச்சயிப்பதன் பொருட்டுச் சோதிடர்களை யழைத்து வந்திருக்கிறேன். உங்களுடைய ஜன்ம நக்ஷத்திர மின்ன தென்று தெரிவிக்க வேண்டுகின்றேன் என்றான். அப்பொழுது அவள் மனமுவந்து தன்னுடைய ஜன்ம நக்ஷத்திரத்தைத் தன் அருகே யிருந்த பரிஜனங்கள் மூலமாகத் தெரிவித்தாள். சோதிடர்கள் தங்களுக்கு யௌகந்தராயணன் முன்னரே தெரிவித்திருந்தவாறு இன்னும் ஆறுமாதத்திற் கப்பாலேதான் நல்ல முகூர்த்தமிருக்கின்ற தென்றும் அதற்கு முன் இல்லை யென்றும் கூறிச் சென்றனர். அதனால் களிங்கஸேனை கவலையடைந்து முகம் வாடினள். அப்பொழுது அங்கிருந்த அந்த உத்யான வனத்துக் காவலாளி முன்னரே யோசித்துக் காலத்திற்குத் தக்க



வாறு இந்த ஸ்திரீ புருஷர்களுக்கு அநுகூலமான லக்கினத்தைப் பார்க்கவேண்டும்; தாமதமாகவேனும் விரைவாகவேனும் பார்ப்பதில் என்ன பயன்? இவர்களுக்கு நன்மை யேற்பட வேண்டியதவசியம்." என்றான். இதைக் கேட்ட யாவரும் "நன்றாகக்கூறினாய்; அவ்வாறு தான் செய்தல் வேண்டும்" என்று கூறி அவனைப்புகழ்ந்தனர். கெட்ட லக்கினத்தில் விவாகஞ்செய்தால் களிங்கதத்த மகாராஜன் மிகுந்த வருத்தமடைவார் என்று யௌகந்தராயணன் கூறலும், களிங்கஸேனை வெறுப்புடன் உங்கள் ஸௌகரியம்போல் செய்யலாம் என்று கூறி மௌனமாக விருந்தாள். பிறகு யௌகந்தராயணன் அங்கிருந்து அரசனிடம் வந்து நடந்ததைத் தெரிவித்து அவனுக்கேற்ற சமாதானமுஞ் சொல்லிவிட்டுத் தன் வீடு சென்றான். இவ்வாறு காலதாமத மேற்படவேண்டுமென்பது உறுதியான பின்னர், மற்றும் நடக்கவேண்டிய காரியங்களை யுத்தேசித்து, யோகேச்வரன் என்னும் பிர்ம ராக்ஷஸனை நினைத்தான். ஏற்கனவே அவனிடம் பழக்கமுடைய அந்த யோகேசுவரன், யௌகந்தராயணன் நினைத்த மாத்திரம் அவனிடம் சென்று, அவனை வணங்கி, என்னை ஏன் நினைத்தீர்? என்று வினவினான். யௌகந்தராயணனன் அந்தயக்ஷனிடம் பிரபுவாகிய உதயன ராஜனுக்குத் துக்கத்தைக் கொடுக்கும் களிங்கஸேனையின் வரலாற்றைச் சொல்லி, "நண்ப! நான் இவ் விஷயத்திற்குக் காலதாமதமாகுமாறு செய்திருக்கின்றேன்; அதற்குள் நீ ஒரு யுக்தி செய்து களிங்கஸேனைக்கு அதில் மனஞ் செல்லுமாறு செய்யவேண்டும். வித்தியாதரர் முதலியவர்கள் களிங்கஸேனையை இரகசியமாக விரும்புகின்றனர். ஏனெனில் இவளுக்குச் சமானமான அழகுடையவர்கள் இந்த மூவுலகங்களிலுமில்லை. அவள் வித்தியாதரனுடனாவது ஸித்தனுடனாவது சேர்க்கை யடைந்தால் நீ யதைக் கவனித்தல் வேண்டும். அஃது ஒரு நன்மை பயக்கும். அல்லாமலும் நீ வேறோருருவத்துடன் அவள் முன்பு சென்று காமுகன் போலக் காட்டிக்கொள்ள வேண்டும். அப்பொழுது நாங்கள் களிங்கஸேனைக்குத்தோஷமேதேனு முண்டாக்கக்கூடுமாவென்று கவனிக்கின்றோம். அவ்வாறேற்படின் அரசன் அவளிடம் வெறுப்படைவான். பின்னர் நம்முடைய எண்ணம் நிறைவேறியதாகும்." என்று கூறினான். இதைக்கேட்ட அந்தயக்ஷன், நானேன் இந்தக் களிங்கஸேனையை யுக்தியால் துரத்தக்கூடாது? அல்லது வதைசெய்யக்கூடாது? என்று கேட்டான். யௌகந்த

ராயணன், "நண்ப! அவ்வாறு செய்வது கூடாது. அது பெரிய
அதர்மமாகும். எவன் தர்மவிரோதமின்றித் தன் ஒழுக்கத்தி
லிருக்கின்றானோ அவனே தன் காரிய ஸித்தியின் பொருட்டு வேண்
டிய சகாயங்களை யடைவான். ஆகையால் உன்னால் ஒரு
குற்றமுமேற்படாதவாறு பார்க்கவேண்டும். உன்னுடைய ஸ்நேகத்
தால் நாங்கள் ராஜாவின் கார்யத்தை முடித்தவர்களாவோம்" என்
றான். இவ்வாறு யௌகந்தராயணன் கூறவே, அந்தயக்ஷன் தன்
யோகமாயையால் அவ்விடமிருந்து அக்கணமே மறைந்து, களிங்க
ஸேனையிருக்குமிடம் சென்றான்.

இச்சமயத்தில் மாயாசுரன் புத்திரியாகிய ஸோமப்பிரபை,
தான் முன் கூறியபடி களிங்கஸேனையிடம் வந்தாள்; அவள் வரும்
போதே அங்குள்ளவர்கள் வாயிலாக முதல் நாளிரவு நடந்த வர
லாற்றைத் தெரிந்துகொண்டு களிங்கஸேனையிடம் வந்து, அவளைப்
பார்த்து "தோழி! நான் நேற்றே இங்கே வந்து உன்னைத் தேடி
னேன். கடைசியிலிங்கே கண்டேன். உன்னோடு யௌகந்தராய
ணன் சம்பாஷித்துக் கொண்டிருந்ததை நோக்கி மறைந்திருந்து
கேட்டுக்கொண் டிருந்தேன்; எல்லாம் தெரிந்து கொண்டேன்.
நான் இப்போது யத்தனிக்க வேண்டாம் என்று கூறித் தடுத்துச்
சென்றிருக்க ஏன் அவசரப்பட்டாய்? அபசகுனத்தைப் பொருட்
படுத்தாமற் செய்யும் காரியம் ஏதுவும் தீமையாகவே முடியும்.
அதற்கொரு கதை கூறுகிறேன் கேள்—

அந்தர் வேதியென்னுமொரு நகரமுண்டு. அதில் வசுதத்த
னென்னுமொரு வேதியனிருந்தான். அவனுக்கு விஷ்ணுதத்தன்
என்னுமொரு புத்திரன் இருந்தான். அவனுக்குப் பதினாறுவது
வயது நிறைந்ததும் அவன் கல்விபயில்வதன் பொருட்டு வளபீ
நகரஞ் செல்ல யத்தனித்தான். அவனுடன், அப்பொழுது அவ
னைப்போன்ற ஏழு குமாரர்கள் புறப்பட்டனர். அவர்கள் ஏழு
பேரும் மூடர்கள். விஷ்ணுதத்தன் மாத்திரம் நல்லகுலத்திலுதித்
தவன். இவ்வெண்மரும் சேர்ந்து ஓரிடத்திற் கூடி நாம் எப்பொழு
தும் ஒருவரைவிட்டு ஒருவர் பிரிவதில்லை என்னும் தீர்மானஞ்
செய்துகொண்டு தங்கள் தாய் தந்தையர்களை யறியாமல் புறப்பட்
டுச் சென்றனர். அப்பொழுது ஓர் அபசகுனம் அவர்களுக்கு
முன்புண்டாயிற்று. இதைக்கண்ட விஷ்ணுதத்தன் மற்றவர்களை
நோக்கி, "ஆ! இது கஷ்டம்! நாம் திரும்பி விடுவது உசிதமாகும்;



இன்னொரு நாள் புறப்படுவோம். அப்பொழுது தான் காரியஞ்
சித்தியாகும்" என்று கூறினன். அவர்கள், "சகுனம் நம்மை
என்ன செய்யும்? நாமேன் அதைக்கவனிக்கவேண்டும்? நாங்கள்
அஞ்சோம்; உனக்கு வரப் பயமாயிருந்தால் நீ வராமல் நின்று
விடு. நாங்கள் போகின்றோம்." என்று கூற, தான் அவர்
களுக்கு முன்னரே செய்துகொடுத்த வாக்குத்தத்தை யெண்ணி
அவர்களை விட்டுப்பிரிய அஞ்சிக் குற்றங்களைப் போக்கும் மஹா
விஷ்ணுவைத் தியானித்துக்கொண்டு விஷ்ணுதத்தன் சென்
றான்; சிறிது தூரஞ் சென்றவுடன் ஓர் அபசகுனமுண்டாயிற்று.
அதைப்பார்த்த விஷ்ணுதத்தன், பயந்து, "இன்னொரு அபசகுன
முண்டாகின்றது; இப்போது போகவேண்டாம்" என்று கூறித்
தடுத்தான்; அவர்கள் முன்போலவே, அந்த விஷ்ணுதத்தன்மீது
கோபித்துக்கொண்டு, "காக்கையினிடமும் சந்தேகப்படும் உன்
னை நாங்கள் அழைத்து வந்ததே எங்களுக்கு அபசகுனமாகின்
றது" என்று கூறினர். விஷ்ணுதத்தன் வேறொன்றும் அதற்கு
மேற் பேசாமல் அவர்களுடனே நடந்தான். மூடர்களுக்குபதே
சஞ் செய்தல் கூடாது. அவ்வாறு செய்யின் அது அவமதிப்
பையே தரும். அறிவாளியொருவன் அநேக மூடர்களுக்கிடையே
அகப்பட்டுக்கொண்டபோது, நீரில் அலைகளுக்கிடையே விழுந்
தகப்பட்டுக்கொண்ட கமலமலர் போலாகின்றான். இதிலையமில்லை.
ஆகையால் நாமிவர்களுக்கு இனி நன்மை தீமைகளைச் சொல்வது
கூடாது. மௌனமாகவே செல்லவேண்டும். விதியே நமக்கு
நன்மை புரியட்டும் என்று யோசித்துக்கொண்டே நடந்தான் விஷ்
ணுதத்தன்.

இவ்வாறு இவர்கள் செல்லும்போது வழியிலோரிடத்தில்
அஸ்தமித்தது. அப்பொழுது விஷ்ணுதத்தன் அருகே யிருந்த
ஒரு கிராமத்திற்குள் நுழைந்து அங்கு ஒரு வீட்டிற்குப்போய்
அதிலிருந்த ஒரு மங்கையைக் கண்டு, அன்றிரவு தங்குவதற்
கிடங் கேட்டான். அவள் அவ்வாறே இடங்கொடுத்தாள். அவன்
தன் நண்பர் எழுவருடனும் அவ்விடத்திற் சயனித்துக்கொண்
டான். படுத்த அக்கணமே அவ்வெழுவரும் நித்திரை போய்விட்
டனர். இந்த விஷ்ணுதத்தன் மாத்திரம் விழித்துக் கொண்
டிருந்தான். மூடர்களே இரவில் இப்படிப்பட்ட சமயங்களில் நித்
திரை புரிவார்கள்; விவேக முடையவர்களுக்கு நித்திரை எவ்
வாறு இப்படிப்பட்ட சமயங்களிலுண்டாகும்?

இவ்வாறிருக்கையில், நடுராத்திரியில் அந்த வீட்டிற்கு ஒரு வாலிபன் வந்தான். அவனொடு அந்த மங்கைஇரகஸ்யமாகப்பேசிக் கொண்டிருந்து கிரீடைகளைச் செய்தாள். அப்பால் இருவரும் நித்திரைபோய் விட்டனர். இதைப் பார்த்துக் கொண்டிருந்த விஷ்ணு தத்தன் மிகுந்த வருத்தமடைந்து, "கஷ்டம்! துர்நடத்தையுடையவளுடைய வீட்டிற்கு வந்து தங்கினோம்; இவன் இவளுடைய நாயகனல்லவென்பது நிச்சயம்; இவள் சபல சித்தமுடையவளென்பதை இவளை முதலிற் சந்தித்தபோதே தெரிந்து கொண்டேன்" என்று எண்ணிக் கொண்டிருந்தான். இச்சமயம் தெருவில் ஒரு சத்த முண்டாயிற்று அக்கணமே ஒரு வேடன் கையில் கத்தியுடன் அவ்வீட்டிற்குள் பிரவேசித்தான். அவ்வேடன் இவர்களைப் பார்த்து, நீங்கள் யாவர்? என்று கேட்டான். விஷ்ணு தத்தன் நாங்கள் வழிப்போக்கர்கள் என்று சொல்ல, சரி, அப்படியா வென்று கூறி விட்டு அங்கிருந்து வீட்டிற்குள் போய்ப் பார்த்து, தன் மனைவியாகிய அம்மங்கை சோரனுடன் சயனித்துக் கொண்டிருப்பதை நோக்கி, அடங்காக் கோபங்கொண்டு அந்தச்சோரனுடைய தலையை வெட்டி யெறிந்து விட்டு மனைவியை யெழுப்பாமல் அங்கோரிடத்திற் படுக்கை போட்டுப்படுத்துக் கொண்டான். தன் கைக் கத்தியை வேறோரிடத்தில் வைத்துவிட்டான். விஷ்ணு தத்தன் இந்த விபரீதத்தையும் பார்த்துக்கொண்டே ஒன்றும் பேசாமல் படுத்துக்கொண்டிருந்தான். இவன், பெண்ணைக் களவாடிய சோரனைக் கொன்றதே தகுந்த நியாயமாகின்றது. தன் மனைவி துர்நடத்தையுடையவளாயினும் ஸ்திரீ யென்னும் நியாயங்கொண்டு அவளை ஒன்றுஞ் செய்யவில்லை. இதுவும் தகுந்த நியாயந்தான். தவிர, சகித்தற்கரிய இக்கொலையைச் செய்துவிட்டு இவன் நித்திரை செய்கின்றான். பரமாச்சரியமாக விருக்கின்ற திது! தைரியமுடைய மனமுடையவர்களின் வீரியம் மேலானது தான் என்று விஷ்ணுதத்தன் தனக்குத் தெரிந்தநியாய அநியாயங்களை விவகரித்துக்கொண்டே படுத்துக்கொண் டிருந்தான்.

இவ்வாறிருக்கையில், அம்மங்கை விழித்துக்கொண்டு தன் சோரநாயகன் வெட்டுண்டு கிடப்பதையும் நாயகன் படுத்து நித்திரை புரிவதையும் பார்த்துப் பிரமித்து, உடனே தைரியத்துடன்



எழுந்து ஜாரனது கபந்தத்தினை (முண்டத்தினை) தன் தோளில்
தூக்கிக் கொண்டு, அவன் சிரசையும் அவள் ஒரு கையினால்
எடுத்துக் கொண்டு வெளியில் வந்தாள். வெளியில் வந்து சாம்பல்
குவியலுக்குள் சிரசோடுகூட உடலைச் சீக்கிரம் புதைத்து விட்டு,
அங்கிருந்து இரகசியமாக வந்தனள். விஷ்ணு தத்தனும் போய்
எல்லாவற்றையும் தூரத்தி லிருந்து பார்த்து விட்டு, நித்திரை
செய்கின்ற தோழர்களின் மத்தியில் வந்து முன் போலவே
இருந்தான். அந்தத் துர்ஜநியானவள் வந்து உள்ளே பிரவேசித்து,
நித்திரை செய்கின்ற அவளது பதியின் சிரசை அவன் வைத்தி
ருந்த அந்தக் கத்தியினால் வெட்டினாள். பின் அவள் வெளியில்
வந்து வேலைக்காரர்களுக்குச் சொல்லிச் சப்தஞ் செய்து, "இந்த
வழிப்போக்கர்கள் என் பர்த்தாவை, ஐயோ! கொன்றுவிட்டனர்"
என்று கூவினாள். இதைக் கேட்ட பரிஜநங்கள் ஓடி வந்து
பார்த்தனர். பிரபு மரண மடைந்திருப்பதையும், விஷ்ணு தத்தன்
முதலியவர்கள் சயநித்துக் கொண்டிருப்பதையும் கண்டு, கோபங்
கொண்டு ஆயுதங்களுடன் அவர்களை எதிர்த்தனர். அவர்க
ளெல்லாரும் பயந்து எழுந்து ஓடத் தொடங்கினர். அப்பொழுது
விஷ்ணு தத்தன் அந்தப் பரிஜநங்களைப் பார்த்து, "பிர்மஹத்தி
செய்ய வேண்டாம் நீங்கள். இந்தக் கொலையை நாங்கள் செய்ய
வில்லை இந்த மாதே பரபுருஷனிடம் ஆசை கொண்டு இச் சதி
செய்திருக்கிறாள். நான் கதவின் சந்து வழியாகப் பார்த்திருந்
தேன்" என்று கூறி, நடந்ததை ஆதியோ டந்தமாகத் தெரிவித்
தான். அப்பால், அந்த மாது சாம்பலுக்குள் புதைத்து வைத்தி
ருக்கும் தலையையும், கபந்தத்தையும் காண்பித்தான். அதனால்,
அவள் தன் குற்றத்தை மறைக்க முடியாமல் தயங்கினாள். அவள்
முகம் வாட்ட முற்றது. பின்னர் வேறு பேச வழி யின்றித் தன்
குற்றத்தை எல்லோர் முன்னிலையிலும் ஒப்புக் கொண்டாள். அங்
கிருந்தா ரனைவரும் அவளை வெறுத்து, "காம விகார மடைந்த
இவள் இந்தச் சதி செய்திருக்கின்றா ளென்பதிற் சந்தேக மில்லை.
கத்தியை யொத்த இந்தத் துஷ்டை, யின்னும் யாரைத் தான்
கொல்ல மாட்டாள்! புருஷனையே கொன்று விட்டாளே துணிந்து!
இந்தப் பாவியும் உலகத்தி லேனோ ஜநித்தாள்" என்று கூறி

வருத்த முற்று, விஷ்ணு தத்தனைப் புகழ்ந்து பேசி, அவனையும், அவனைச் சார்ந்தவர்களையும் விட்டு விட்டனர். ஏழு தோழர்களும், விஷ்ணு தத்தனை நோக்கி, "நாங்கள் நித்திரை புரியும் போது, நீ எங்களைக் காக்கும் இரத்திந தீபம் போல் விளங்கினாய்; உன்னுடைய அநுக்கிரகத்தினால், அபசகுநத்தால் நமக்கு நேரிட்ட எமனை ஜயித்தோம்" என்று புகழ்ந்து, அவர்கள் அவன் சொற்களை மீறிப் பேசியதற்கு மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்கள். பிறகு எல்லோரும் தாங்கள் கோரி வந்த காரியத்தை யுத்தேசித்து அங்கிருந்து புறப்பட்டனர்.

தோழி! ஒரு காரியத்தை உத்தேசித்துச் செல்லும் போது அபசகுநம் நேரிடு மாயின், இவ் வாறு கால தாமத முதலியவைக ளேற்பட்டு, முடிவில் துன்ப முண்டாகின்றது. பண்டிதர்கள் கூறுவதை அவமதித்த மூடர்கள் முடிவில் தாப மடைகின்றனர். நீயோ, கெட்ட சகுந மேற்பட்டிருக்க, அதைப்பற்றி யோசியாமல், விவாகம் செய்து கொள்ளக் கருதி, வத்ஸ ராஜனுக்குத் தூதர்களை யனுப்பியிருக்கின்றாய்; நீ செய்தது உசித மன்று. இந்த விவாகத்தை உன் விதி தான் விக்ந மின்றி முடித்து வைக்க வேண்டும். நீ உன் கிருகத்தை விட்டுப் புறப்படும் பொழுது, கெட்ட லக்நத்திற் புறப்பட்டு வந்தாய்; அதனாலே தான் விவாகம் தாமதப்படுகின்றது. தேவர்களும் உன்னை ஆசிக்கின்றனர். இந்த விவாகம் முடிவாகிற வரையில், நாம் ஒன்றும் பிரஸ்தாபிக்காமலே யிருக்க வேண்டும். மந்திரி யௌகந்தராயணனோ நீதியிற் சிறந்தவன். அதைப்பற்றிக் கவனித்தல் வேண்டும். அந்த மந்திரி வத்ஸ ராஜனுக்குக் கெடுதி நேரிடு மென்று கருதி ஏதேனும் விக்நஞ் செய்வான். ஒரு வேளை விவாகம் நிச்சய மாயினும், உனக்கு ஏதேனும் தோஷத்தைக் கற்பிப்பான். அவன் தார்மிகனாக விருந்து தோஷத்தை யுண்டாக்காவிடினும், தோழி! சக்களத்தியைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். இது சம்பந்தமான ஒரு கதை இப்போது என் நினைவுக்கு வருகின்றது; அதனைக் கூறுகின்றேன். கேள்:



தோழி! இக்ஷுமதி யென்றொரு நகர மிருக்கின்றது. அத னருகே இக்ஷு மதி யென்னும் ஒரு நதியு மிருக்கின்றது. இவ் விரண்டும் பூர்வம் விசுவாமித்திர முனிவரால் உண்டாக்கப் பட்டன. அவற்றின் அருகே ஒரு பெரிய வந மிருக்கின்றது. அவ் வநத்தில் மங்கணகர் என்னும் ஒரு முனிவர் இருந்தார். அவர் தவம் புரிந்து கொண் டிருக்கும் ஒரு சமயம் ஆகாய வழியே சென்ற மேநகை யென்னும் தேவ ஸ்திரீயின் வஸ்திரம் அவிழ்ந்து விழ விருந்தது. அதை இந்த முனிவர் கண்டார். எப்பொழுது சமயம் நேரும் என்று காத்துக்கொண் டிருந்த மன்மதன், நல்ல சமயம் கிடைத்த தென்று சந்தோஷ மடைந்து முனிவர் மீது மலர்க் கணை தூவினான். அதனால், முனிவர் மநம் கலங்கினார். அவருடைய வீரியமானது வெளிப்பட்டுப் புதிதான ஒரு வாழை யிலையில் விழுந்தது; அதினின்றும் ஒரு சுந்தர மாது தோன்றினாள். முனிவர்களுடைய வீரியமானது அமோகமாகு மாதலின், அதே க்ஷணத்தில் பலித்தது. வாழை யிலையினின் றுண்டானமையால் அக் கந்நிகைக்கு மங்கணக முனிவர் கதளீ கர்ப்பை என்னும் பெய ரிட்டார். அக் கந்நிகை அந்த ஆசிரமத்திலேயே வளர்ந்து வந்தாள்.

இவ் வாறிருக்க, ஒரு நாள் மத்திய தேசத் தரசனான திருட வர்ம ராஜன் வேட்டை யாடுவதன் பொருட்டுக் குதிரை மீதேறிக் கொண்டு வநத்திற்கு வந்தான். அவனைத் தற்செயலாய் அவன் குதிரை மங்கணக முனிவரின் ஆசிரமத்திற்குக் கொண்டு வந்தது. இங்கு மரவுரி யுடுத்து ரிஷி கந்நிகை யென்பதற் கேற்ற வேஷத்துட னிருந்த கதளீ கர்ப்பையைக் கண்டான். உடனே அவன் மநம் மாறியது. "யார் இந்தக் கந்நிகை? இவளைக் கண்வ முனிவரின் கந்நிகையாகிய சகுந்தலையைத் துஷ்யந்த னடைந்தது போல அடைகின்றேன்" என்றெண்ணிய வாறு, ஆங் கோரிடத்தில் நின்றுகொண் டிருந்தான். இச் சமயம் மங்கணக முனிவர், ஸமித்து, தர்ப்பை இவற்றோடு ஆசிரமத்திற்குள் பிரவேசித்தார். அவரைக் கண்ட அரசன் குதிரையினின் றிறங்கி, முனிவரின் பாதங்களிற் பணிந்து கை

வருத்த முற்று, விஷ்ணு தத்தனைப் புகழ்ந்து பேசி, அவனையும், அவனைச் சார்ந்தவர்களையும் விட்டு விட்டனர். ஏழு தோழர்களும், விஷ்ணு தத்தனை நோக்கி, "நாங்கள் நித்திரை புரியும் போது, நீ எங்களைக் காக்கும் இரத்தின தீபம் போல் விளங்கினாய்; உன்னுடைய அநுக்கிரகத்தினால், அபசகுநத்தால் நமக்கு நேரிட்ட எமனை ஜயித்தோம்" என்று புகழ்ந்து, அவர்கள் அவன் சொற்களை மீறிப் பேசியதற்கு மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்கள். பிறகு எல்லோரும் தாங்கள் கோரி வந்த காரியத்தை யுத்தேசித்து அங்கிருந்து புறப்பட்டனர்.

தோழி! ஒரு காரியத்தை உத்தேசித்துச் செல்லும் போது அபசகுநம் நேரிடு மாயின், இவ் வாறு கால தாமத முதலியவைகளேற்பட்டு, முடிவில் துன்ப முண்டாகின்றது. பண்டிதர்கள் கூறுவதை அவமதித்த மூடர்கள் முடிவில் தாப மடைகின்றனர். நீயோ, கெட்ட சகுந மேற்பட்டிருக்க, அதைப்பற்றி யோசியாமல், விவாகம் செய்து கொள்ளக் கருதி, வத்ஸ ராஜனுக்குத் தூதர்களை யனுப்பியிருக்கின்றாய்; நீ செய்தது உசித மன்று. இந்த விவாகத்தை உன் விதி தான் விக்ந மின்றி முடித்து வைக்க வேண்டும். நீ உன் கிருகத்தை விட்டுப் புறப்படும் பொழுது, கெட்ட லக்நத்திற் புறப்பட்டு வந்தாய்; அதனாலே தான் விவாகம் தாமதப்படுகின்றது. தேவர்களும் உன்னை ஆசிக்கின்றனர். இந்த விவாகம் முடிவாகிற வரையில், நாம் ஒன்றும் பிரஸ்தாபிக்காமலே யிருக்க வேண்டும் மந்திரி யௌகந்தராயணனே நீதியிற் சிறந்தவன். அதைப்பற்றிக் கவனித்தல் வேண்டும். அந்த மந்திரி வத்ஸ ராஜனுக்குக் கெடுதி நேரிடு மென்று கருதி ஏதேனும் விக்நஞ் செய்வான். ஒரு வேளை விவாகம் நிச்சய மாயினும், உனக்கு ஏதேனும் தோஷத்தைக் கற்பிப்பான். அவன் தார்மிகனாக விருந்து தோஷத்தை யுண்டாக்காவிடினும், தோழி! சக்களத்தியைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். இது சம்பந்தமான ஒரு கதை இப்போது என் நினைவுக்கு வருகின்றது; அதனைக் கூறுகின்றேன். கேள்;

தோழி! இக்ஷுமதி யென்றொரு நகர மிருக்கின்றது. அத னருகே இக்ஷுமதி யென்னும் ஒரு நதியு மிருக்கின்றது. இவ் விரண்டும் பூர்வம் விசுவாமித்திர முனிவரால் உண்டாக்கப் பட்டன. அவற்றின் அருகே ஒரு பெரிய வந மிருக்கின்றது. அவ் வநத்தில் மங்கணகர் என்னும் ஒரு முனிவர் இருந்தார். அவர் தவம் புரிந்து கொண் டிருக்கும் ஒரு சமயம் ஆகாய வழியே சென்ற மேநகை யென்னும் தேவ ஸ்திரீயின் வஸ்திரம் அவிழ்ந்து விழ விருந்தது. அதை இந்த முநிவர் கண்டார். எப்பொழுது சமயம் நேரும் என்று காத்துக்கொண் டிருந்த மன்மதன், நல்ல சமயம் கிடைத்த தென்று சந்தோஷ மடைந்து முநிவர் மீது மலர்க் கணை தூவினன். அதனால், முநிவர் மநம் கலங்கினர். அவருடைய வீரியமானது வெளிப்பட்டுப் புதிதான ஒரு வாழை யிலையில் விழுந்தது; அதினின்றும் ஒரு சுந்தர மாது தோன்றினள். முநிவர்களுடைய வீரியமானது அமோக மாகு மாதலின், அதே க்ஷணத்தில் பலித்தது. வாழை யிலையி னின் றுண்டானமையால் அக் கந்நிகைக்கு மங்கணக முநிவர் கதளீ கர்ப்பை என்னும் பெய ரிட்டார். அக் கந்நிகை அந்த ஆசிரமத்திலேயே வளர்ந்து வந்தாள்.

இவ் வாறிருக்க, ஒரு நாள் மத்திய தேசத் தரசனன திருட வர்ம ராஜன் வேட்டை யாடுவதன் பொருட்டுக் குதிரை மீதேறிக் கொண்டு வநத்திற்கு வந்தான். அவனைத் தற் செயலாய் அவன் குதிரை மங்கணக முநிவரின் ஆசிரமத்திற்குக் கொண்டு வந்தது. இங்கு மரவுரி யுடுத்து ரிஷி கந்நிகை யென்பதற் கேற்ற வேஷத்துட னிருந்த கதளீ கர்ப்பையைக் கண்டான். உடனே அவன் மநம் மாறியது. "யார் இந்தக் கந்நிகை? இவளைக் கண்வ முநிவரின் கந்நிகையாகிய சகுந்தலை யைத் துஷ்யந்த னடைந்தது போல அடைகின்றேன்" என் றெண்ணிய வாறு, ஆங் கோரிடத்தில் நின்றுகொண் டிருந்தான். இச் சமயம் மங்கணக முநிவர், ஸமித்து, தர்ப்பை இவற்றொடு ஆசிரமத்திற்குள் பிரவேசித்தார். அவரைக் கண்ட அரசன் குதிரையினின் றிறங்கி, முநிவரின் பாதங்களிற் பணிந்து கை

குவித்து நின்றான். முநிவர் யாரென்று வினவ, தான் இன்னு னென்பதைத் தெரிவித்தான். முநிவர் மகிழ் வெய்தி தமதாசிர மத்திற்குள் அழைத்துச் சென்று, கதளீ கர்ப்பையை யழைத்து, "குழந்தாய்! அதிதியாகிய இவ் வரசனுக்கு நீ அர்க்கமளித்து உரிய உபசரணையைச் செய்வாயாக" என்று கட்டளை யிட்டார். அக் கந்நிகை மந முவந்து அவ் வரசனைத் தக்க வா றுபசரித்தனள். அரசன், முநிவரை நோக்கி, "சுவாமி! தேவரீருக்கு இந்தக் கந்நிகா ரத்நம் எப்படி கிடைத் தனள்?" என்று கேட்டான். முநிவர் அந்தக் கந்நிகை ஜநித்ததையும், அவளுக்குக் கதளீ கர்ப்பை யென்னும் பெயர் கிடைத்ததையுந் தெரிவித்தார். அரசன் அதைக் கேட் டதும் மேநகையினிட மிருந்தன்றோ இவளுக்கு உற்பத்தி யேற்பட்டிருக்கிறது என் றெண்ணி உற்சாக மடைந்து முநிவரை நோக்கி, "சுவாமி! இக் கந்நிகையை நான் மணந்து கொள்ள விரும்புகின்றேன்; என் விருப்பம் நிறைவேறத் திரு வுள மிரங்க வேண்டும்" என்று பிரார்த்தித்தான். முநிவர் அரசன் பிரார்த்தனைக் கிணங்கி, விவாகத்தை நிச்சயித்தார். இதை யறிந்த தேவ ஸ்திரீகள், மேநகையினிடம் கொண்ட அன்பால், அங்கே வந்து மண வினைக் கேற்றபடி அந்தப் பெண் மணிக்கு ஆபரணாதிகள் பூட்டி அலங்கரித்தனர். எல்லோரும் புகழ்ந்து கொண்டாடத் திருமணம் நிறைவேறியது. அப்பால், அரசன் முநிவரிடம் விடை பெற்றுக்கொண்டு, கதளீ கர்ப்பை யுடன் தன் நகரத்திற்குச் செல்லப் பிரயாண மானான். தேவ ஸ்திரீகள், அப்பொழுது கதளீ கர்ப்பையை யழைத்து, "இரகசிய மாக அவளிடம் கொஞ்சம் சர்ஷபம் (கடுகு போன்றது) கொடுத்து, நீ அரசனோடு குதிரையின் மேல் போகும் போது வழி யெங்கும் இதை வாரி யிறைத்துக் கொண்டு போ; அப்படிச் செய்வதால் உனக்கு நன்மை யுண்டு; அரசன் ஒருகால் அவமதித்துத் தள்ளிவிடுவா னாயின், நீ சென்ற வழியை கடுகின் அடையா ளத்தைப் பார்த்துக் கொண்டு இங்கே வந்துவிடக் கூடும்" என்று கூறிப், பின்னும் அவளுக்கு வேண்டிய சில புத்திமதிகளை அன்போ டுரைத் தனுப்பினர்.

அப்பால் கதளீ கர்ப்பை குதிரையின் மே லேறிக் கொண்டாள். அரசனும் அக் குதிரையின்மீ தேறிக் கொண்டு, சேனைகள் சூழப் புறப்பட்டுச் சென்றான். கதளீ கர்ப்பை வழி நெடுகச் சர்ஷபங் (கடுகு போன்றது) களை வாறி யிறைத்துக் கொண்டே சென்றனள்; இருவரும் சந்தோஷமாக நகரம் போய்ச் சேர்ந்தனர். அரசன் தன் அமைச்சர்களுக்குத் தான் கதளீ கர்ப்பையை மணம் புரிந்து கொண்ட வரலாற்றைக் கூறி மகிழ்ந்தனன். அன்று முதல் தன் னுடைய மற்ற மனைவிகளிடம் பற் றின்றி அவர்களை மறந்தவனா யிருந்தான்.

அரச னிவ்வா றிருக்கவே, அவ னுடைய பட்ட மகிஷி தான் ஏற்கனவே, செய்த உபகாரங்களை நினைத்துப் பார்த்து, துக்கத்தோடு மந்திரியினிடஞ் சென்று, அரசன் இப் பொழுது, மணந்து கொண்ட என் சக்களத்தியி னிடம் மிகுதியும் பற்றுத லுடையவரா யிருக்கின்றார்; என்னைச் சிறிதுங் கவனிப்பதே யில்லை. ஆகையால், "இந்தக் கதளீ கர்ப்பையை இந் நகரத்தைவிட் டேகும் படியான உபாயத்தைத் தேட வேண்டும்" என்றாள். மந்திரி, "அவ் வாறு செய்வது கூடாது; பிரபுவை அவருடைய மனைவியை விட்டுப் பிரிப்பதால் என் போன்றவர்கட்குத் துன்பமே உண்டாகும். இவ் விஷயம், ஸந்நியாஸிநிகளுக்கும், வஞ்சனை முதலிய தீய செய்கைக ளுடையவர்களுக்குமே தகுதி யானதாம்; நமக்குச் சிறிதும் இது தகாத விஷயம். ஸந்நியாஸிநிகள் வஞ்சனை யுடையவர்களா யிருப்பார்கள். அவர்கள் எந்தக் கார்யத்தையும் துணிகரமாகச் செய்வார்கள்" என்று கூறினான். அரசன் மனைவி, வெட்க முற்று மந்திரியைப் பார்த்து, "அங்ஙன மாயின் ஸாதுக்களுக்குப் பழிப்பிற் கிடமான இவ் விஷயத்தில் நாம் ஏன் பிரவேசிக்க வேண்டும்? வேண்டாம்" என்று சொல்லி மந்திரியை யனுப்பிவிட்டு, "அவன் கூறியபடியே ஸந்நியாஸிநி எவளையேனுங் கொண்டு நம் எண்ணத்தை நிறை வேற்றிக் கொள்வோம்" என்று தீர்மானித்துக் கொண்டு, தன் பணிவிடைக்காரருள் ஒருத்தியை வரவழைத்து, ஸந்நியாஸிநி யொருத்தியை அழைத்து வரும்படி கட்டளை யிட்டாள். அவள்

சிறிது நேரத்திற் கெல்லாம் ஒரு ஸந்நியாஸிநியை அழைத்துக் கொண்டு வந்தாள். அவளிடம் அரசன் மனைவி, தன் துக்கத்தை யும், தன் எண்ணத்தையும் விவரமாக உரைத்து, காரியம் முடிவாகுமாயின், பெரும் பொருள் தருவதாக வாக்களித்தாள். அந்தத் துஷ்ட ஸந்நியாஸிநி, ராஜன் மனைவியை நோக்கி, "இது பெரிய காரியம்; கஷ்ட சாத்தியமானது; ஆயினும், முடிக் கின்றேன். எனக்கு அநேக விதமான உபாயங்கள் தெரியும்" என்று கூறிச் சமாதாநஞ் செய்து விட்டுத் தன் மடம் சென்று, அங்கு மிகவும் பயந்தவள் போல் ஓரிடத் துட்கார்ந் திருந்து, "ஆச்சரியம்! சுகத்தை யனுபவிக்க வேண்டு மென்னும் ஆசை யானது யாரைத் தான் பரிகசிக்காது. ராஜ பத்நியின் முன் "முடித்துவிடுகிறேன் உன் கோரிக்கையை" யென்று கூறி வந்தேனே அறிவிலி; எனக்கு அக் காரியத்தை முடிக்கத் தக்க சாமர்த்திய மேது? அல்லாமலும், வேறிடங்களில் செய்வதும், அரசன் கிருகத்திலும் வஞ்சனை செய்வது தகுதியாமோ? அகப்பட்டுக் கொண்டால் பெரிய ஆபத் தல்லவா வந்து நேரிடும். என்ன செய்யலா மிதற் குபாயம்" என்று சிறிது யோசித்துப். பின், "எனக்கு இந்தக் காரியத்திற் கேற்ற உபாயங் கூறித் தக்க முயற்சி யெடுத்துக் கொள்ளத் தக்கவன் என் நண்பனாகிய நாவிதனே யாவன்" என்று தீர்மானித்து, அவனிடம் உடனே சென்றாள். அவன் நல் வரவு கூறித் தன்னை வரவேற்றதும், அவனிடம் பொருளை யடையத்தக்க ஹேதுவான இக்காரியத்தைக் கூறித் தன் எண்ணத்தைத் தெரிவித்தாள். தூர்த்தனும், வயோதி கனுமாகிய அந்த நாவிதன், "சந்தோஷம்; எனக்கு லாப முண்டா கும்படியான சமய மிது. இப்பொழுது அரசன் மணஞ் செய்து கொண்ட மனைவியை நாம் கஷ்டப்படுத்துவது கூடாது. அவளைக் காப்பாற்ற வேண்டும். திவ்ய ஞாந முடைய மங்கணக முனிவர் எல்லாவற்றையும் பிரசித்தம் செய்வார். இந்தக் கதளி கர்ப்பையை அரசனிட மிருந்து பிரித்து விடுவோம். குற்சிதமான இரகசி யத்தைத் தனக்குச் சகாய மாகக் கொண்ட வேலைக்காரனிடம் யஜமானன் வேலைக்கார னாகின்றான். பின்னர், சமயம் வாய்த்த போது அரசனிடம் அவர் மனைவியைச் சேர்த்துவைப்போம்

இவ்வாறு செய்யின், மிகுந்த பாபம் ஏற்படாது. நமக்கு நீண்ட காலம் நல்ல பிழைப்பு ஏற்படும்'' என்று ஆலோசித்துக் கபட ஸந்நியாஸிநியிடம் கூறுகின்றான்.

“அம்மா! உபாயத்தை மேற்கொண்டு இக் காரியத்தை நாம் நிறைவேற்றப் புகின், புதிதாக வந்த ராஜ கந்நிகை மிகுதியும் துன்ப மடைவாள். அது உசித மல்ல. ஒரு சமயம் அரசன் இதை யறிவா னாயின், நா மெல்லோரும் தண்டனைக் குரியவ ராவோம். ஒரு ஸ்த்ரீயைக் கொன்ற தோஷமும் ஏற்படும். கதளீ கர்ப்பையின் பிதா வாகிய முநிவரும் சாப மிடுவர். ஆகையால், நம் முடைய அறிவின் வன்மையால் இவளைப் பிரிக்க வேண்டும். அப்பொழுது தான் பட்டமகிஷி சுகம் பெறுவாள். நாமும் வேண்டிய பொருளைப் பெறலாம். இந்தக் காரியம் எனக் கொரு பெரிதா? என்னால் எது தான் முடியாத தாகும். என்னுடைய அறிவைப் பற்றிக் கூறுகின்றேன். கேள்:

இந்தத் திருட வர்ம ராஜ னுடைய தந்தை கெட்ட குண முடையவனாக விருந்தான். நான் அவ் வரசனுக்கு எது செய்யக் கூடுமோ அதைச் செய்து கொண்டிருந்தேன். அவன் ஒரு சமயம் என் மனைவியை தற் செயலாகக் கண்டான். அவள் அழகிய உருவமும், யௌவநப் பருவமு முடையவளா யிருந்தமையின், அவள் மீது ஆசை கொண்டு அவளைப் பற்றி விசாரித்தான். நாவித னுடைய மனைவி யெனத் தெரிந்து கொண்டு, “நாவிதன் நம்மை யென் செய்ய வல்லான்'' எனத் துணிந்து, என் வீட்டிற் குட் பிரவேசித்துத் தன் னிச்சைப்படி என் மனைவியிட மிருந்து சுக மநுபவித்துவிட்டுச் சென்றனன். நானும் அன்று தெய்வச் செயலால் வீட்டி லில்லாமல் வெளியே சென்றிருந்தேன். மறு நாள் வந்ததும் என் மனைவியின் முகம் ஒரு மாதிரியா யிருக்கக் கண்டு, காரணம் வினவினேன். அவள் ஒன்றையும் ஒளியாமல் என்னிடம் அரசன் வந்ததைக் கூறி, “என்ன செய்வேன்! மகா ராஜாவே வந்ததினால் நான் இணங்க வேண்டிய தாயிற்று'' என்று தெரிவித்தாள், நான் “ஆ! தெய்வமே'' என்று மனத்தி லெண்ணி

வே ஒன்றும் செய்ய முடியாதவனாக விருந்தேன். அதனால், அவர்கள் காரியம் கிரமமாக நடந்து வந்தது. கெட்ட நடவடிக்கையில் என்னைக் கொண்டவர்கட்குச் செல்லத் தக்கதும், தகாததுமாகும் வழி எது? காற்றினால் விர்த்தியா யெறியும் காட்டுத் திக்குத் திருணம் என்பதும், வநம் என்பதும் எது?

இவ்வா றிருக்கையில், நானோர் உபாயஞ் செய்தேன். நாள் தோறும் அற்பமான ஆகாரம் புசித்து வந்தேன். என் தேகம் அதனா லிளைத்தது. அப் பொழுது நான் அரசனிடம் என் தொழில் நிமித்தம் போக வேண்டிய தாயிற்று. அரசன் என்னுடைய தேகம் இளைத்து வெளுத் திருப்பதைக் கண்டு, "நீ யேன் இவ் வா றிளைத் திருக்கின்றாய்?" என்று விசாரித்தான். நான் முதலில் என் கருத்தை வெளியிட வெட்கப்படுபவன் போல நடித்தேன். பின்னர் வற்புறுத்திக் கேட்டதன் மேல், நான் அரசனைப் பார்த்து, "என்னை மன்னிக்க வேண்டும்; எனக் கொரு மனைவி யிருக்கின்றாள். அவள் டாகினி. நான் நித்திரை செய்யும் போது அவள் என்னுடைய நரம்புகளை அபாநத் துவாரத்தின் வழியே யிழுத்து, உருஞ்சிப் பின் அவ்வாறே நரம்புகளை உள்ளே செலுத்தி விடுகின்றாள். அதனால் நான் இளைத்துப் போனேன். நான் முன் போல் நல்ல புஷ்டியுடையவனாக எனக் கேற்ற போஜநத்தை வைத்தியனை விசாரித்துத் தெரிவிக்க வேண்டும்" என்றேன். அரசன் இதைக் கேட்டதும் சந்தேகங் கொண்டு "அப்படியா! சை!" என்று கேட்டு வியப் புற்று எனக்குச் சமாதானஞ் சொல்லி யனுப்பி விட்டான். நாம் திநம் இந்த நாவிதனுடைய மனைவியோடு பழகுகின்றோமே, இவள் நம்மை அவ்வா றொன்றும் செய்யக் காணோம், இனி அவ் வாறு செய்யினும் செய்வாள்; இதைக் கவனிக்க வேண்டியது அவசியம் என்னும் யோசனையை அரசன் கொண்டிருக்கிறா னென்பதைத் தெரிந்து கொண்டே னாதலால், என் வீடு வந்ததும் மனைவியை யழைத்து, அவள் பார்க்கக் கண்ணீர் விட்டு விசநப்படுபவன் போல் பாசாங்கு செய்தேன். அவள் என்னை நோக்கி, "அன்ப! இவ்வாறு வியசநிக்கக்

காரண மென்ன?" என்று கேட்டாள். நான், "பெண்ணே! கேள்; நான் சொல்லப் போவது பரம இரகசியம்; நீ அதை யாருக்குமே சொல்லக்கூடாது. இவ் வரச னுடைய அபாநத் துவாரத்தில், வஜ்ரங்கள் வரிசையிற் பதிக்கப்பட்டதற் கொப்பப் பற்கள் உண்டா யிருக்கின்றன. என் கத்தி நன்ருய் வேலே செய்யக் கூடியதே யாயினும், அடிக் கடி முறிந்து விடுகின்றது. நாம் அடிக் கடி கத்தியை விலேக்கு வாங்குவ தென்ருல் முடி கின்றதா? அதற்காகத் தான் விசநப்பட்டுக் கொண் டிருந்தேன்" என்றேன். அவள் ஆகா அப்படியா! என்ன செய்யலா மிதற் கென்று தானும் விசநப்படுவது போல் முகத்தைக் காட்டிப் பேசி விட்டுப் போய்விட்டாள். அவள் எப்படியும் இந்த அதி சயத்தை அரசனிடம் பரிசோதிப்பா ளென்பது என் எண்ணம். அப்பால், அன் றிரவு அரசன் எனக்குத் தெரியாமல் என் வீட்டிற்கு வந்து என் மனேவி யிடம் படுத்துக் கொண்டிருந்து, பிறகு நித்திரை புரிபவன் போல மூச்சு விட்டுக் கொண்டு படுத்திருந்தான். அப் பொழுது என் மனேவி "அரசன் நித்திரை செய்கிருன்" என்று நிச்சயித்து, அவ னுடைய அபாநத் துவாரத் தில் மெதுவாகக் கையை வைத்தாள். கை பட்டவுடன் அரசன், "ஐயோ! டாகிநி! டாகிநி!!" என் றரத்துச் சொல்லிக் கொண் டெழுந்து, "தப்பினேன் தெய்வ கதியாய்" என்ற எண்ணத் துடன் மாய மாக மறைந்து விட்டான். அது முதல் அரசன் பயந்து என் மனேவி யிடம் வருவ தில்லே. அப்பால் என் மனேவி வழக்கம் போல் என் னிடம் அன்பு பாராட்டி வந்தாள். இந்த உபாயத்தால் நான் மனேவியை விடுவித்துக்கொண்டேன் என்று கூறி, மீண்டும் சொல்லுகின்ருன்.

பூஜிப்பதற்குரியவளே! நீ விரும்பியதை அறிவால் முடித்துக் கொள்ள வேண்டும்; அந்தப் புரத்தி லிருப்பவர்களுள் பெரியவன் ஒருவன் உம் முடைய மனேவி யாகிய கதளீ கர்ப்பை டாகிநி யென்று தெரிவிக்க வேண்டும். அரண்யத்தி லிருந்த அவளுக்கு அவளேச் சார்ந்தார் யாரு மில்லே யன்ருே? அரசன் பிறகு சந்தேகங் கொள்வான் மநதில். அப்பால் வெட் டுண்ட கை கால் முதலிய

அவயவங்களைக் கதளீ கர்ப்பையின் கிருகத்திற் கொண்டு போய் வைக்க வேண்டும். அதை அரசன் காலையில் கண்டதும் உண்மையில் அவள் டாகினியே யாவள் என்று தீர்மானித்து, அவளைத் தள்ளி விடுவான். பின்னர் தேவி சுக மடைவாள். அப்பால் அவள் உம்மையும் வெகுமானிப்பாள். நானும் தக்க பயனை யடைவேன் என்று கூறினான்.

அந்த ஸந்நியாஸினி சந்தோஷத்துடன் பட்ட மகிஷியிடம் சென்று இந்த உபாயத்தைக் கூறினான். அப்பால் பட்டமகிஷி அந்த உபாயத்தை அவ்வாறே செய்ய, அரசன் நம்பி கதளீ கர்ப்பையை வெறுத்து வீட்டி லிருக்கக் கூடாதென்று கோபித்துத் தள்ளிவிட்டான். பிறகு பட்ட மகிஷி, நாவிதனுக்கும், ஸந்நியாஸினிக்கும், நல்ல வெகுமதியைக் கொடுத் தனுப்பி, என்று மடையாத சந்தோஷ மடைந் திருந்தாள்.

இவ் வாறாகவே கதளீ கர்ப்பை, துக்கத்துடன் அவ் வரண் மனையை விட்டுப் புறப்பட்டு வெளியே வந்து முன் தான் சர்ஷபம் (கடுகு) இறைத்துக் கொண்டே வந்த வழியே சென்று, முனிவ ராசிரமத்தை யடைந்தாள். அவளைக் கண்டதும் முனிவர், "ஏன் இவள் அகாரண மாக இங்கே வந்தாள்; இவள் நடத்தையில் ஏதேனும் பிச கிருக்கலாம்" என்று முதலில் எண்ணின ராயினும், பின் தமது ஞான திருஷ்டியால் பார்த்து விஷயந் தெரிந்து கொண்டு கதளீ கர்ப்பையை அழைத்துக் கொண்டு அரசனிடம் வந்தார். அரசன் முனிவருக்கு வந்தன வழிபாடுகள் புரிந்து, கை கட்டிக் கொண்டு நின்றான். முனிவர் அவனைப் பார்த்து, "மன்னா! யோசனை யின்றிக் காரியஞ் செய்து விட்டாயே! உன் மூத்த மனைவி இவளை வீட்டை விட்டுத் துரத்தச் செய்த சூழ்ச்சி யிது. இதை நீ யறிந்து கொள்ள வில்லை" யென்று கூற, அரசன் "ஆ! அப்படியா நடந்தது விஷயம்" என்று வியப் புற்று நாவிதனை யழைத்துக் கேட்க, அவன் "பிரபுவே! நான் இவ் வாறு, வேடிக்கை யாக யுக்தி செய்து' கதளீ கர்ப்பையைப் பிரித்துத் தேவிக்குத் திருப்தி செய் வித்தேன்" என்று கூறினான். அரசன், அந்த நாவிதனிடம்

சந்தோஷங் கொண்டு அவனுக்கு வேண்டு மான பொருளைக் கொடுத்து, அவனைப் புகழ்ந் தனுப்பினான். கதளீ கர்ப்பையையும் ஆதரவோடு முநிவர் முன்பே ஏற்றுக் கொண்டு முநிவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். பிறகு பட்ட மகிஷியி னிடம் அதிகப் பற்றுத லில்லாதவ னாக விருந்து வந்தான்.

களிங்கஸேனே! சக்களத்திகள் இவ் வாறு கெடுதிகளைச் செய்து வருகின்றார்கள். நீயோ கந்நிகை; உனக்கு இன்னும் விவாகம் நிச்சயப்பட வில்லை. அது வெகு நாட்களுக் கப்பா லிருக்கும் போ லிருக்கிறது. உன்னையோ உயர்ந்த குண முடைய தேவர்களும் விரும்புகின்றார்கள். ஆகையால், உன்னை நீயே காப்பாற்றிக் கொள்ள வேண்டும். உன் னுடைய மேன்மையையே நீ வைராக்யமாகக் கொள்ள வேண்டும். தோழி! நீ கணவ னுடைய கிருகத்தி லிருப்ப தால் நான் உன்னிடம் அடிக் கடி வர முடியாது. உத்தம ஸ்த்ரீகள் தோழியின் கொழுந னுடைய வீட்டிற்கு அடிக் கடி வரமாட் டார்கள். என் கணவனும் என்னைப் போக வேண்டா மென்று தடுத்துக் கொண் டிருக்கின்றார். உன்னிடங் கொண்ட அன்பால் நான் இரகசிய மாக இங்கே வருவதும் சரி யல்ல; என் பதி திவ்ய ஞாந முடைய மகான். எதையும் அறிய வல்லவர்: அவரிடம் இன்று மிகுந்த பிரயத்நத்துடன் உத்தரவு கேட்டுக் கொண்டு புறப்பட்டு வந்தேன். இங்கு நான் இப் பொழுது, செய்ய வேண்டிய காரியத்தையுங் காணேம். ஆகையால், நான் செல்லு கின்றேன். ஒரு சமயம் என் நாதன் உத்தர வளித்தா ராயின், வெட்கத்தை விட்டு மறுபடியும் உன்னை வந்து பார்க்கின்றேன் என்று மயன் குமாரி யாகிய ஸோமப் பிரபை கண்களி லிருந்து நீர் பெருக நின்று கூறவே, களிங்க ஸேனையும் கண் கலங்கிக் கண்ணீ ருகுத்தாள். ஸோமப் பிரபை அவளைச் சமாதாநப் படுத்தித் தைரியஞ் சொல்லி விடை பெற்றுக் கொண்டு ஆகாய வழியே தன் னிருப்பிடம் சென்றாள்.

6-வது தரங்கம்

முற்றிற்று.

## 7-வது தரங்கம்.

இவ் வாறிருக்க, ஸோமப் பிரபை தெரிவித்துச் செல்லலும், தன் நாட்டையும் தன் உறவினரையும் விட்டு வந்த களிங்க ஸேனை, அந்த ஸோமப் பிரபையையும், தனக்கு விவாகம் தாமதித் திருப்பதையும் சிந்தித்து, வநத்தில் தன் இனத்தை விட்டுத் தவறிய ஒரு பெண் மானை யொத்துத் துக்கத்துடன் கௌசாம்பி நகரத்தி லிருந்தாள். உதயநனும் தன்னிடம் விவாகம் தாமதப்படும் என்று கூறிய சோதிடர்களிடத்தில் அசூயை கொண்டு மநத்தில் சிறிதும் உற்சாக மில்லாம லிருந்தான். அப்பால், அன் றிரவு சிறிது மநத் தேறுத லடைந்து வாஸவ தத்தையின் கிருகம் சென்றான். வாஸவ தத்தைக்கு ஏற்கனவே அமைச்சருள் சிறந்தவனான யௌகந்தார்யணன் தக்க வாறு கூறியிருக்கின்றானாதலால், விகற்ப மில்லாதவள் போல் என்றும் செய்வதை விடப் பன் மடங் கதிகமான உபசரணைகளைச் செய்து மகிழ்வித்தாள். அதனால், அரசன், இந்த வாஸவ தத்தையோ களிங்க ஸேனை வந்திருப்பதை யறிவாள். அப்படி யிருந்தும், இவ ளேன் மநத்தில் எதுவும் விகாரங் கொள்ளாம லிருக்கின்றாள்; காரண மென்ன? இவ்வா றிருப்ப தருமையா யிற்றே; இதன் விவரத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும்'' என் றாலோசித்து, வாஸவ தத்தையைப் பார்த்து, "என்னை மணந்து கொள்ள விரும்பிக் களிங்க ஸேனை வந் திருப்பதை நீ யறிவாயா'' என்று கேட்டான். வாஸவ தத்தை சிறிதும் முகத்தைச் சுளியாமல், "நாதா! நா னறிவேன்; எனக்குப் பரம சந்தோஷம். அவள் நம் வீட்டுக்கு வலுவில் வந்த லக்ஷ்மி தேவி யாகின்றாள். அந்தக் களிங்க ஸேனையைத் தாங்கள் அடைவதால் அவள் தந்தை யாகிய களிங்க தத்த ராஜனும் நமக்கு ஸ்வாதீன னாகின்றான். அப் பொழுது நம் ராஜ்யத்திற்கு வன்மை யேற்படுகிறது. அதனால் நானும் சுக மடைவேன். ஆரிய புத்ர! தாங்கள் இதனை முன்னரே யறிவீர்க ளல்லவா? இராஜ கந்நிகைக ளெல்லாம் தங்களை விரும்பி யடையத் தக்க பே ரழகு வாய்ந்த தாங்கள் எனக்கு நாயக னாக விருக்கும் போது நான் மகா பாக்கிய வதி யென்பதிலும்

தடை யுண்டோ?'' என்று தனக்கு முன் யௌகந்தார்யணன் கூறியபடி சாதுர்யமாய்ச் சமயத்திற் கேற்ற வாறு சம்பாஷித்தாள்.

உதயநன் அதைக் கேட்டதும் பரமாநந்த மடைந்தான். பின்னர், இருவரும் நித்திரை செய்தார்கள். நடு ராத்திரியில் உதயநன் விழித்துக் கொண்டான். அப் பொழுது "இது பரமாச்சரியமாக வல்லவா இருக்கிறது! வாஸவ தத்தை இவ் வாறு என்னை வெகுமானிப்பா ளென்று நான் நினைக்க வில்லை. தனக்குச் சக்களத்தி யாக வந்திருக்கும் களிங்க ஸேனையி னிடமும் வெறுப் புக் காட்டாம லிருக்கின்றாளே! பதிவிருதை யாகிய இவள் இப்படி இச் சமயம் மநம் பொறுத் திருப்பது ஆச்சரியமேயாம். பத்மா வதியை மணந்த சமயமும், மநம் பொறுத் திருந்தாள். இப்படிப்பட்ட இந்த உத்தமிக்கு ஏதேனுந் தீங்கு நேரிடு மாயின் எல்லோருக்கும் அழி வேற்படும். குமாரன், மாமன், மைத் துனன் இவர்கள் இவளை ஆசிரய மாகக் கொண்டவர்கள். பத்மா வதியும் இவ் வரசும் இவள் வச மானவை. இவள் வச மாகாதது வேறு எதுவுமே யில்லை. இவ் வாறிருக்க, நான் களிங்க ஸேனையை எவ் வாறு விவாகம் செய்து கொள்வது?'' என்று யோசித்துப் பின், விடியற் கால வேளையில் அங் கிருந்து வெளி வந்து, அன்று பகல் பத்மா வதியின் அரண் மனைக்குச் சென்றான். வாசவ தத்தையி னிடம் உபதேசம் பெற்றிருக்கும் பத்மா வதி அரசனைக் கண்டதும் வாசவ தத்தையைப் போலவே அன்பொடு உபசரித்து மகிழ்வித்தாள். அரசன் ஆச்சரியப் பட்டு, இவ ளிடமும் வாஸவ தத்தை யிடம் கேட்டது போலவே களிங்க ஸேனையின் வரவைத் தெரிவித்துத் தன்னை விவாகஞ் செய்து கொள்ள விரும்பி வந்திருக்கின்றாள் என்றுங் கூறினான். பத்மா வதி வாஸவ தத்தை கூறியது போலவே மறு மொழி பகர்ந்தாள்.

இவ் வாறாகவே, மறு நாள் அரசன் தன் னுடைய மனைவிமா ரிருவருடைய ஒரே தன்மையான குணத்தையும், வார்த்தையையும் பற்றிச் சிந்தித்து யோசித்துப் பார்த்து யௌகந்தார்யணனிடம் அவர்களைப் பற்றிப் புகழ்ந்து பேசினான். யௌகந்தார்யணன்,

மகா ராஜாவே! எனக்குச் சந்தேக முண்டாகின்றது. அவர்கள் மாறுன அபிப்பிராயங் கொண்டிருக் கின்றார்கள் என்பது நிச்சயம். இன்றேல்! இவ் வாறு கூறார். அவர்கள் தங்கள் உயிரை மாய்த்துக் கொள்ள நிச்சயித் திருக்கின்றார்கள் என்பது திண்ணம். அதனாலே தான் அவர்கள் பேச்சும் கம்பீரமாக விருந் திருக்கின்றது. பதி பரஸ்திரியி னிடம் மோகங் கொண் டாலும், அல்லது, பதி பரலோகஞ் சென்றாலும், மனைவி மரண மடைய நிச்சயிக்கின்றாள். அப் பொழுது அவர்கள் மனம் எதிலும் ஆவ லடைவ தில்லை. ஸ்த்ரீகள் விஷயமாக ஏற்பட்ட அன்பைக் கண்டிப்பது பொறுக்க முடியாத தாகும். அதற் கொரு கதை யுண்டு. கேட்பீராக,

தென்னாட்டில் கோகர்ணம் என்னும் நகரத்தில் சுருதஸேனன் என்னும் ஒரு அரச னிருந்தான். அவன் வம்சமும், பூஷணமும், சாஸ்திர சிரவணமு முடையவன். யாவும் பரிபூர்ணமா யிருந்தும் அவனுக்கு அவன் மனதிற் கிசைந்த மனைவி கிடைக்க வில்லை. அதனால், அவ்ன் மிகுதியும் வருத்தப்பட்டுக் கொண்டிருந்தான். அவ் வாறிருக்கும் அவ் வரசனிடம் ஒரு நாள் அக்நி சர்மா என்னு மொரு விப்ரன் வந்து ஆசிர்வதித்துக் கூறுகின்றான்.

நான் தீர்த்த யாத்திரை சென்றிருந்தேன். அப் பொழுது பஞ்ச தீர்த்தி யென்னும் ஸ்தலஞ் சென்றேன். அந்தத் தீர்த்தத்தில் சாபத்தினால் முதலை யுருக் கொண்டு கிடந்த ஐந்து அப்ஸர ஸ்த்ரீகளைத் தீர்த்த யாத்திரையாக வந்த அர்சுநன் அதில் ஸ்நாநம் செய்து, அவர்களைச் சாபத்தினின்றும் விடுவித்துக் கரை யேற்றி னான். அவ் வளவு மகிமை வாய்ந்ததும், ஸ்நாநம் செய்பவர்களுக்கும், ஐந் திரவு அங்கு உபவாசமாக விருப்பவர்களுக்கும் விஷ்ணு பாரி ஷதத் தன்மை யளிக்கத் தக்க அந்தத் தீர்த்தத்தில் ஸ்நாநஞ் செய்து வழியே சென்றேன். அப் பொழுது ஒரு வயலில் ஓர் உழவன் உழுது கொண்டே பாடிக் கொண் டிருந்தான். அவனைக் கண்டு நின்றேன். அப் பொழுது அவ் வழியே சென்ற ஒரு துறவி, அவனைப் பார்த்து தாம் செல்லும் ஊருக்கு வழி கேட்டார். உழவன் தன் பாட்டில் கவந முடையவ னாக யிருந்தமையால்

துறவியின் பேச்சு அவன் செவியிற் பட வில்லை. அதனுல், அவன் திரும்பியும் பார்க்காமல் உழுது கொண் டிருந்தான். அதனுல், துறவி அவனைக் கோபித்துக் கொண்டார். உழவன், பாடுவதை நிறுத்திவிட்டுத் துறவியைப் பார்த்து "ஆச்சரியம்! நீரோ துறவி யாக யிருக்கின்றீர்: ஆனுல், தர்ம மிது வென்று தெரிந்து கொள்ள வில்லை. நான் மூடனுக விருப்பினுந் தர்மத்தின் ஸார மறிந்தவ னுக விருக்கின்றேன்" என்ருன். இதைக் கேட்ட துறவி ஆச்சரிய மடைந்து அவ னருகே சென்று, "அப்பா! நீ யறிந்தவை எவை?" என்று கேட்க, அந்த உழவன், கூறுகின்ருன்.

பெரியவரே! இந்த நிழலில் சற் றுட்காரும் கூறுகின்றேன். இந்த ஊரில் பிர்ம தத்தன், ஸோம தத்தன், விசுவ தத்தன் என்னும் மூன்று அந்தணர்க ளிருக்கிருர்கள். மூத்தவர்க ளாகிய பிர்ம தத்தனும், ஸோம தத்தனும், விவாகம் செய்து கொண்டவர்கள். விசுவ தத்தனுக்கு விவாக மாக வில்லை. அந்த விசுவ தத்தன் தமைய னிட்ட கட்டளையைத் தவரு தியற்றிக் கொண்டு வந்தான். அவர்கள் வீட்டுக்கு நான் பயிரிடும் குடியானவ னுகையால் என் னிடம் அவர் எப் போதும் கோபம் கொள்ளாம லிருந்தார். தமையன்மா ராகிய அவ் விருவரும், ஸாதுவும், சன்மார்க்க சீலனும், பரிசுத்தனும், சிரம மற்றவனும், மிருதுவாகிய சுபாவ முள்ளவனும் ஆகிய இந்த விசுவ தத்தனைப் புத்தி யில்லாதவ னென்று கருதினர். அவன் புத்தியில் ஆதவ னென்பதை யுணர்ந்தார்க ளில்லை மூடர்கள்.

இப்படி யிருக்கும் போது, விசுவ தத்தனின் அண்ணிமா ரிருவரும், காம விகாரங் கொண்டு, அவனைத் தங்கள் வச மாக்க முயன்றனர். விசுவ தத்தன் அவ் விருவரையும் தன் அன்னை போலப் பாவித் திருப்பவ னுதலால், அவர்கள் எண்ணத்திற்கு இணங்க வில்லை. அதனுல், அவர்க ளிருவரும் இவன் மீது கோபங் கொண்டு, தத் தம் புருஷ னிடம் சென்று, "உமது தம்பி எங்கள் மீது காதல் கொண்டு கைப் பற்ற விரும்புகிருன்" என்றனர். அவர்கள் பேச்சை நம்பி அவ் விருவரும் தங்கள் தம்பி மீது கோபங் கொண்டனர். அந்தத் துஷ்ட ஸ்த்ரீகளின்

பேச்சில் மோக மடைந்த அவ் விருவரும், இது உசிதமா? அநுசிதமா? வென்று எண்ணிப் பார்க்க வில்லை. அந்தக்கோபத்தை மநத்திற் கொண்டு, ஒரு ஸமயம் அந்த விசுவ தத்தனை நோக்கி, நீ நமது வயல் மத்தியி லிருக்கும் புத்தை வெட்டி நிரவு" என்று கட்டளை யிட்டனர். அவன் தன் அண்ணன்மார் கட்டளையைச் சிரசில் வகித்து, அவ் வாறே வயலுக்குச் சென்று, புத்தை வெட்டினன். அதைக் கண்ட நான், "இதை வெட்ட வேண்டாம்; இப் புத்திற் கரு நாக மிருக்கின்றது" என்று கூறினேன். அவன், "வருவது வரட்டும்; நான் என் அண்ணன்மாரின் பேச்சைத் தட்டமாட்டேன்" என்று சொல்லி, என் பேச்சுக் கேளாமல் வெட்டிக் கொண்டிருந்தான். அப் பொழுது, அவனுக்கு அதி லிருந்து சுவர்ணம் நிறைந்த கலச மொன்று கிடைத்தது. ஆனல், கூறியபடி ஸர்ப்பம் வெளிப்பட வில்லை. ஸாதுக்களுக்குத் தர்மம் பிரத்தியட்ச மாகு மல்லவா? அவ் வாறு, கிடைத்த சுவர்ண கலசத்தை நான் பல சொல்லித் தடுத்தும், தன் அண்ணன் மாரிடத்திற் கொடுத்தான். அவர்க ளிருவரும் அவனிடமிருந்து அக் கலசத்தைப் பெற்றுக் கொண்டு, அதி லிருந்து சிறிது பொருளை எடுத்துக் கொலையாளிக ளிடம் கொடுத்து, தங்கள் கூடப்பிறந்தவன் என்பதை ஒரு சிறிதுங் கவனியாது, விசுவ தத்த னுடைய கால்களையும், கைகளையும், வெட்டுவிடும்படி செய்தனர். அவ்வாறே, செய்யப்படினும், அந்த விசுவ தத்தன் தன் னுடைய தமையன்மாரிடம் சிறிதுங் கோபங் கொள்ளாமல், "விதியின் பயனை யாரே தடுப்பவர்" என்று எண்ணி மௌனமா யிருந்தான். அப் பொழுது, அவனுக்கு, அவன் கைகளும், கால்களும் முன் போலவே வளர்ந்தன. இந்த அதிசயத்தைக் கண்ட நாள் முதல், நான் கோபத்தை விட்டேன். "நீர் துறவியா யிருந்தும் கோபத்தை விட்டபா டில்லை. சிநத்தை யொழித்ததனலே நான் ஸ்வர்க்கத்தை வென்றேன். இதோ அற்புதத்தைப் பாரும்" என்று கூறி, அந்தக் குடியானவன் சரீரத்தை விட்டுச் ஸ்வர்க்கத்திற்குச் சென்றுன். இந்த ஆச்சரியங் கண்டேன்.

இஃதிவ் வாறுக, இரண் டாவது ஆச்சரியத்தைக் கேளுங்கள். நான் அங் கிருந்து சென்று சமுத்திரக் கரையி லிருந்த ஒரு

ராஜ்யத்தைக் கண்டேன். அந்த ராஜ்யத்தை வஸந்த ஸேநன் என்னும் அரசன் அரசாண்டு வந்தான். அந்த ராஜ்யத்தில் அவ் வரசனால் ஏற்படுத்தப்பட்ட சத்திர மொன் றிருந்தது. அதில் போஜநம் செய்வதற்குச் சென்றேன். அங் குள்ள வேதியர், "ஓ பிராமண சிரேஷ்டரே! இம் மார்க்க மாகப் போக வேண்டாம். இங்கே ராஜ குமாரி யிருக்கின்றாள். இவள் வித்யுத் த்யோதை என்னும் பெய ருடையாள். அவளைக் கண்டால் நீ மன்மத பாணத்திற் கிரை யாகிப் பிராணனை யிழப்பாய்" என்று கூறினார்கள். நான் அவர்களை நோக்கி, "இஃதொரு ஆச்சரியமா? உலகத்துக்கு மற்றொரு மன்மதனைப் போல விளங்கும் சுருத ஸேந மஹா ராஜனை நான் எப் பொழுதும் பார்த்துக் கொண் டிருக்கின்றேன். அந்தச் சுருத ஸேந மஹா ராஜன் யாத்திரையாக வெளிப்படின், குல ஸ்த்ரீகளுக்குப் பாதிவிருத்ய பங்கம் வருமோ வென வெண்ணிக் காவலாளர் தக்க ஏற்பாடு செய்து வருகின் றனர். அவ் வளவு ஸௌந்தரிய முடையவன் அவ் வரசன். அவ ரோடு நான் அடிக் கடி பழகுகின்றவ னல்லவா?" என்று கூறினேன். அவர்கள் என்னைத் தங்களைச் சார்ந்தவ னென்று கருதி, அங் கிருந்த யஜமான னும், புரோகிதனும் போஜநத்திற்காக என்னை யழைத்துச் சென்றனர். அங்கே ராஜ குமாரி யாகிய வித்யுத் த்யோதையைக் கண்டேன். அவள் உலகத்தையே மோகிக் கச் செய்ய வல்ல மன்மத னுடைய மந்திர வித்தையே மானிட உரு வெடுத்ததோ வெனத் தக்க திவ்ய தேஜஸுடன் விளங்கினாள். அவளை நான் பார்த்ததால் எனக் குண்டான மனக் கலக்கத்தை யடக்கிக் கொண்டு, அங் கிருந்த வாறே யோசித்தேன். இவள் நம் முடைய அரசனுக்கு மனைவி யாவாளே யாயின், அரசன் ராஜ்யத்தையே மறந்து விடுவா னென்பதிற் சந்தேக மில்லை. ஆயினும், நம் முடைய அரசனுக்கு இவ் வரலாறு கூற வேண்டும். நான் இவ் விஷயத்தைக் கூறாமல் மறைப்பே னாயின், உன்மாதினி, தேவ ஸேநன் இவர்களுடைய கதை யாக முடியும்; அது ஒரு ஆச்சரியமான சரித்திரம்.

தேவ ஸேந னுடைய ராஜ்யத்தில் ஒரு வியாபாரிக்கு, உன் மாதினி யென் றொரு பெண் ணிருந்தாள். அவள் உலகத்தையே

மயக்கும் வல்லமை படைத்தவள். அவளுடைய தந்தையாகிய வியாபாரி, அரசனிடம் சென்று என்னுடைய பெண்ணைத் தாங்கள் மணம் புரிந்து கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொண்டான். அரசன் தனக்கு வேண்டிய சில வேதியர்களிடம் ஆலோசித்தான். அவர்கள் இந்த உன்மாதினி குற்சிதமான லக்ஷண முடையவள். அவளை மணம் புரிபவன் விபத்தை யடைவான். அவன் ராஜ்யத்தை நன்ருகக் கவனியான்" என்று கூறித் தடுத்தனர். பின்னர், அவ் வரசனுடைய அமைச்சன் அவளை மணம் புரிந்து கொண்டான்.

இவ்வாருக, ஒரு நாள் அந்த உன்மாதினி ஒரு பலகணியின் வழியே அரசனை நோக்கினுள். அரசனும் அவளைப் பார்த்தான். உடனே அவள் மீது காதல் கொண்டு புத்தி பேதமடைந்து உண வருந்தவும் விரும்பினு னில்லை. இதை யறிந்த உன்மாதினியின் கணவனுகிய மந்திரி, அரசனிடம் வந்து அந்த உன்மாதினியை யடையும்படி கூறினுன். தேவஸேந ராஜன் தார்மிகனுதலால், அந்த உன்மாதினியை ஏற்றுக் கொள்ள வில்லை. ஆயினும், அதே கவலையால் உயிரை யிழந்தான். ஆகையால் சுருதஸேந ராஜனே இம் மாதிரி தவறுதலுக்கு நாளுளாக வேண்டுமென்று கருதி அந்த ஆச்சரியத்தைத் தங்களிடம் தெரிவித்தேன்" என்றுன்.

உதயந மகா ராஜனே! அக்நி சர்மா கூறிய இவ் வார்த்தையை சுருதஸேந ராஜன் கேட்டு, வித்யுத்த்யோதை யிடம் மநத்தைச் செலுத்தி அக்கணமே அந்த அக்நி சர்மனை யனுப்பி அவ் வநிதையை வரவழைத்து விவாகம் செய்து கொண்டான். அந்த வித்யுத்த்யோதை அன்று முதல் சூரியனுடைய பிரகாசம் எப்படி அந்தச் சூரியனை விட்டுப் பிரியாமலிருக்கிறதோ, அவ்வாறே தன் கணவனை விட்டுப் பிரியாமலிருந்தாள்.

இவ்வாறிருக்கையில், ஒரு நாள் மஹாதநன் என்னும் வர்த்தகனுடைய பெண் மாத்ருதத்தை யென்பவள் தனக்கிணை ரூபத்தில் ஒருவருமில்லை யென்னுங் கருவங் கொண்டு, சுயம் வரத்தை யுத்தேசித்து, சுருதஸேந ராஜனிடம் வந்தாள். அவ் வாறு வநுவில்

வந்த அந்த நங்கையை மறுப்பது அதர்ம மென் றஞ்சி யவளையும் மணந்து கொண்டான். இம் மணம் நடந்ததும் வித்யுத்த்யோதை என்பவள் மநம் பொறுதவ ளாகித் தன் உயிரை மாய்த்துக் கொண்டாள். அவள் இறந்ததும் அவளைத் தன் மடிமீது வைத்துக் கொண்டு பிரலாபித்து அரசனும் உயிரை விட்டான். மாத்ரு தத்தையும் தன் கணவ னிறந்த பின் தா னிருந்து வாழ மந மில்லாமல் தீயில் பிரவேசித்து உயிரை விட்டாள். இவ் வாறே அவ் விராஜ்ய முழுதும் நாச மடைந்தது. ராஜனே! அதிகமான அன்பைப் பங்கப்படுத்துவது சகித்தற் கரியதாம். ஆகையால், நீர் களிங்க ஸேனையை மணம் புரிந்து கொண்டால், வாஸவ தத்தை மநம் பொறுமல் உயிரை விட்டுவிடுவாள். இதிற் சிறிதும் சந்தேக மில்லை. அவ் வாறே, பத்மா வதியும் செய்வாள். வாஸவ தத்தையும், பத்மா வதியும் உடல் வேறுயும், உயிர் ஒன்றுயு மிருப்பவர்கள். அவ் வாறு, நேர்ந்த பின் உம் முடைய புதல்வ ளுகிய நரவாஹந தத்தன் எப்படி உயிர் தரித் துலாவுவான்? இவைகளை யெல்லாம் பார்க்க மகா ராஜாவின் மநமும் சகிக்குமோ? சகிக்கா தென்பதை நா னறிவேன். இரண்டு தேவிமார்களும் மா றின்றிக் கம்பீர மாகப் பேசுவதைப் பற்றி யோசிக்கின், அவர்க ளிருவரும் தங்க ளுயிரை விடுவதில் நிச்சய புத்தி யுடையா ரென்பதை நன்கு வெளிப்படுத்துகின்றது. ஆகையால், தங்க ளுடைய பிரயோச நத்தைத் தாங்கள் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். திரியக் ஜந்துக் களும் தங்களைக் காத்துக் கொள்கின்றன. தங்களைப் போன்ற புத்திமான்களைப் பற்றி நான் வேறு பேச வேண்டுமோ?'' என்று கூறினன்.

உதயநன், யோசித்து, "மந்திரீ நீ கூறுவது போலத் தான் முடியும். இதிற் சந்தேக மில்லை யென்று தோன்றுகின்றது. யோசித்துப் பார்க்கின், களிங்க ஸேனையை விவாகம் புரிந்து கொள் வதாற் பய னென்ன வென்பதுந் தெரிய வில்லை. ஜோதிடர்கள் பல நாட்களுக் கப்பால் லக்நம் வைத்திருப்பதும் உசித மென்றே தோன்றுகின்றது. ஸ்வயம் வரத்தை யுத்தேசித்து வந்த மாதை த்யாகம் செய்வதால் எவ் வளவு அதர்மம் ஏற்படப் போகின்றது?''

என்று கூறினன். யௌகந்தராயணன் இதைக் கேட்டதும் மகிழ் வெய்தி நம் முடைய காரியம், நம் முடைய விருப்பம் போல் கை கூடிற்று. உபாய மாகிய நீர் பாய்ந்ததும், தேச காலங்களால் விர்த்தி யடைந்தது மாகிய நீதி யென்னும் உயர்ந்த கொடியானது, எந்தப் பலனைத் தான் கொடாது என் றெண்ணித்தேச காலங்களை யனுசரித்து அரசனை வணங்கித் தன் கிருகம் போய்ச் சேர்ந்தான்.

அப்பால் உதயந ராஜன் வாஸவ தத்தையிடஞ் சென்று அவளைச் சமாதானஞ் செய்து, நா னெதைச் சொல்லப் போகின் றேன்; எல்லாம் உனக்கே தெரியும். உன் விஷயமாய் எனக் கிருக்கும் அன்பு, தாமரைக்கு நீர் எப்படியோ, அப்படியே எனக் குயிராகின்றது. வே றொருத்தியி னுடைய பெயரையும் உன் னிடத்திற் சொல்ல நான் அசக்தனா யிருக்கின்றேன். களிங்க ஸேனையே வலுவில் என் வீடு தேடி வந்திருக்கின்றாள். முன் ஊர்வசி தவ மதிச் செல்வ னாகிய அருச்சுநனை வலுவில் அடைந்தாள். அவளை அர்ச்சுநன் திரஸ்கரித்தான். அதனால் அவள் கோபங் கொண்டு அர்ச்சுநனை நோக்கி "நீ நபும்ஸனாகக் கடவ" னெனச் சபித்தாள். அர்ச்சுநன் அந்தச் சாபத்தை விராட நகரில் ஆச்சரிய மான ஸ்திரீ ரூபத்தோடு ஒரு வருஷம் வரையி லிருந்து கழித்தான். இது உலகப் பிரஸித்தமானது. "ஆகையால், இந்தக் களிங்க ஸேனையை நான் தடை செய்ய வில்லை. ஆயினும் உன் விருப்ப மின்றி நான் எதையும் செய்யச் சக்தி யில்லாதவ னாக விருக்கின்றேன்" என்று கூறி, அன் றிரவை அவளு டனிருந்து கழித்தான். தன் மந்திரியின் அறிவின் திறமையை எண்ணி மகிழ்ச்சி யடைந்தான். முன்னரே களிங்க ஸேனையை இரவும், பகலும் கவனிப்பதற்காக யௌகந்தார்யணனா லனுப்பப் பட்ட யோகேசுவரன் என்னும் பிர்ம ராக்ஷஸன் இச் சமயம் மந்திரியிடம் வந்து, "நான் களிங்க ஸேனை யிருக்கு மிடத்திலும், வெளியிலும் கவனித்து வந்தேன்". தேவர்க ளாவது மானிடர்க ளாவது அங்கே வர வில்லை; ஆனால், இப்பொழுது ஒரு சத்தம் கேட்டது. உப்பரிக்கையில் மறைந்து கொண் டிருந்த நான் அதன் காரணத்தை யறியக் கருதி என் வித்தையையும், சக்தி

யையும் உபயோகித்துப் பார்த்தேன். நான் ஒன்றும் தெரிந்து கொள்ள முடிய வில்லே. சற்று நேரம் ஆலோசித்தேன். அப் பொழுது, ஆகாய சஞ்சாரி யாகிய தேவர்களுக்குள் மகிமை வாய்ந்த எவனே, ஒருவ னுடைய குர லிது வென்று எனக்குப் புலப்பட்டது. அப்பால் வித்தையானது என் பலிக்க வில்லே என்பதைப் பற்றிச் சிந்தித்தேன். சிறி தவகாசத்துட னிருந்து பார்த்தேன். சமர்த்தர்கள் கவனிப்பார்களே யாயின், பிற ருடைய இரகஸியத்தை யெளிதி லறிந்து கொள்ளக் கூடும். முன் தாங்கள் இந்தக் களிங்க ஸேனேயைத் தேவர்களும் விரும்பு கின்ருர்க ளென்று சொல்லி யிருக்கின்றீர்கள். இந்தக் களிங்க ஸேனேக்கு ஸோமப்ரபை யென் றொரு மாதிருக்கின்ரு ளென்று கேள்விப்பட் டிருக்கின்றேன். இதை நான் நிச்சயம் செய்து கொண்டு பிறகு உம்மிடம் சொல்ல வந்தேன். இந்தச் சமயத்தில் நா னொன்று தங்களேக் கேட்கின்றேன். தயை செய்து நீ ரதை எனக்குச் சொல்ல வேண்டும். "திரியக் ஜந்துக்களும் தன்னே ரக்ஷித்துக் கொள்கின்றன என்று நீர் உதயந ராஜனிடம் கூறினீ ரல்லவா? அதை! நான் யோக மகிமையால் மறைந் திருந்து கேட்டேன். அதற்குத் திருஷ்டாந்த மிருக்கு மாயின், எனக்குச் சொல்ல வேண்டும்" என்று கேட்டான். யௌகாந் தர்யணன், "நண்ப! கேள்; அதற் கொரு கதை யிருக் கின்றது"—என்று கூறுவா னயினன்.

விதிசை யென்னு மொரு நகர மிருக்கிறது. அந் நகரத் திற்கு வெளியே பெரிய ஆல மர மொன் றிருக்கின்றது. அம் மரத்தில் கீரி, கோட்டான், பூனே, எலி ஆகிய இந் நான்கு ஜந்துக் களும் வசித்துக் கொண் டிருந்தன. கீரியும், எலியும் மரத்தி னடியில் தனித் தனி யான இடத்தில் வசித்தன. பூனே மரத்தின் நடுவே ஒரு பெரிய பொந்தில் வசித்தது. கோட்டா னனது மற்ற மூன்றும் ஏற முடியாத உயரத்தில் மரத்தி லிருந்த லதா கிருகத்தில் வசித்து வந்தது. எலியை, மற்ற மூன்று பிராணி களும் கொன்று விடக் கூடியது. எலி, கோட்டான், கீரி இம் மூன்றையும் பூனே கொன்று விடக் கூடியது. ஆகவே, எலியும்,

கீரியும், பூனை யிடம் பயந்து சஞ்சரிக்கின்றன. கோட்டா னானது இரவில் பறந்து இங்கு மங்கும் செல்கின்றது. பூனையோ, நிர்ப்பய மாய் இரவு பகல் இரண்டு காலங்களிலும் சஞ்சரிக்கின்றது.

இவ் வாறிருக்கும் இவைகளில், பூனையானது அம் மரத் தருகி லுள்ள ஒரு வளைவான இடத்தில் எலியைப் பிடிப்பதில் விருப்பங் கொண்டு, இங்கு மங்கும் சதா காலமும் சஞ்சரிப்பது வழக்கம். மற்ற மூன்று பிராணிகளும் இரவில் அவ் விடத்திற்குத் தங்கள் இரையைத் தேடிக் கொண்டு வருவது வழக்கம்.

இப்படி யிருக்கையில் ஒரு நாள் சண்டாள னாகிய ஒரு வேடன் அங்கு வந்தான். அங்கே பூனையின் கா லடியின் அடையாள மிருக்கக் கண்டு, அவ் வேடன் தன் வலையை வீசிவிட்டு சென்றான். பூனை யானது எலிகளைக் கொன்று தின்னும் பொருட்டு அன் றிரவும் வழக்கம் போல் அங்கே வந்து அவ் வலையிற் சிக்கிக் கொண்டது. அப்பால், எலியும் அங்கே தன் இரைக்காக வரப் பூனை அகப்பட்டுக் கொண் டிருப்பதைப் பார்த்து மகிழ்ச்சி யடைந்து கூத் தாடிற்று. அப்பால், அவ் வழியே கீரியும், கோட் டானும் வந்தன. அவை பூனை யகப்பட்டுக் கொண்டிருப்பதைக் கண்டு எலியைப் பிடிக்க விரும்பின. இதை யறிந்த எலி, தூரத்தி லுட்கார்ந்து கொண்டு, "என்ன செய்வேன்; இந்தக் கீரிக்கும் கோட்டானுக்கும் பயந்து, பூனை யிடம் அடைக்கலம் புகுவே னாயின், அது வலையி லகப்பட்டுக் கொண்டிருப்பினும் அது என்னைக் கருணை யின்றிக் கொன்றுவிடும். பகைவ னிடம் போய் அடைக்கலம் புகுவதினும் சாவதே நல்லது. ஓடுவோ மாயின் கோட்டானும் கீரியும் என்னைக் கொன்றுவிடும். ஐயோ! பகைவர்களின் சங்கடத்தி லகப்பட்டுக் கொண்ட நான் எங்குப் போவேன்; எதைச் செய்வேன்; ஐயோ! கஷ்டம்! புக லிடம் காணேன். இந்தப் பூனையையே யடைகின்றேன். இந்த வலைக் கயிற்றைக் கத்தரிப்பதற்கு உதவி செய்யும் என்னை தான் அதினின்றும் விடுபட வெண்ணிக் காப்பாற்றக் கூடும்" என்று கருதி மெதுவாய் அதனிடம் சென்று அதை நோக்கி, "ஐயோ! நீ வலையில் அகப்பட்டுக் கொண்டிருப்பதைப் பார்க்க என்

மநம் சகிக்க வில்லை. மெதுவாக இவ் வலைக் கயிற்றைத் துண்டிக்கின்றேன். பரிசுத்த மான மந முடையவர்களுக்கு ஸக வாஸ பலத்தால் பகைவர்க ளிடமும் நட் புண்டாகிறது. ஆயினும், உன் மநத்தை யுணர்ந்த எனக்கு உன்னிடம் விசுவாச முண்டாக வில்லை'' என்று கூறிற்று. பூனை, “புண்ணியவானே! நீ நம்பு, இன்று முதல் நீ எனக்கு நண்ப னாகின்றாய். நீ எனக்குப் பிராணனைக் கொடுக்கின்றா யல்லவா?'' என்று கூறிற்று. உடனே எலி சந்தோஷித்துப் பூனையை நெருங்கிச் சென் றட்கார்ந்து கொண்டது. இதைப் பார்த்த கீரியும், கோட்டானும் தாம் கொண்ட ஆசையை மறந்து சென்றன. அப்பால் பூனையானது, எலியைப் பார்த்து, “எலியே! நான் இவ் வலையி லகப்பட்டு வெகு நேரமாகத் தவித்துக் கொண்டிருக்கின்றேன். விரைவாக இவ் வலையை யறுத்து என்னை விடுவிக்க வேண்டு கின்றேன்'' என்றது. எலி, “இப் பொழுது நா மிந்த வலையைச் சேதித்து இதை விடுவிக்கக் கூடாது. விடுவித்தோ மாயின், நம்மை இது இரையாக்கிக் கொள்ளு மென்பதி லைய மில்லை. ஆகையால், வேடன் வரும் வரையில் இதைச் சேதிப்பது போல் பாசாங்கு செய்து கொண் டிருக்க வேண்டும்'' என் றெண்ணி, பற்களைக் கட கட வென்று கடித்துச் சேதிப்பது போல் பாசாங்கு செய்து கொண்டிருந்தது. அப்பால் சிறிது நேரத்திற் கெல்லாம் பொழுதும் புலர்ந்தது. அப் பொழுது வேடனும் வலையை நோக்கி வரக் கண்ட அப் பூனை எலியைப் பார்த்து; “துரிதமாக இவ் வலையை நறுக்கு, சீக்கிரம்; சீக்கிரம்'' என்று கூறித் துரிதப்படுத்திற்று. எலியும் உண்மையாக அவ் வலைக் கயிற்றைப் பற்களால் சேதித் தது. வலை யறு பட்டது. உடனே, பூனை, வேடனிடம் பயந்து “தப்பினேன், பிழைத்தேன்'' என்று சொல்லிக் கொண்டு ஓடிப் போய்விட்டது. எலியும் சரே லென்று ஓடிப் போய் அங் கிருந்த ஒரு பிலத் துவாரத்தி னுள் புகுந்து கொண்டது. அப்பால் பூனை எலியை அழைத்தது. எலி அதை நம்ப வில்லை. பகைவ னானவன் காலத்திற் கேற்ற புத்தியைக் கொண்டு மித்ர னாகின்றான். அவன் எப் பொழுதும் மித்திரனாவ தில்லை. அந்த எலி ஒரு திரியக் ஜந்து வாயினும் அநேக பகைவர்க ளிடம் இவ் வாறு தன்னைக் காப்பாற்றிக்

கொண்டிருக்கிறது. அது திரியக் ஜந்து வாக விருந்தும் தன்னைக் காப்பாற்றிக் கொண்ட தன்றோ? மானிடர்களைப் பற்றிக் கேட்க வேண்டுமா? இதைப் பற்றித் தான் நான் உதயநனிடம் சொன் னேன். நீயும் இதைத் தான் கேட்டுக் கொண் டிருந்திருப்பாய். தேவியைக் காப்பாற்றுவதன் பொருட்டுத் தன் காரியத்தைப் புத்தியால் கவனிக்க வேண்டும். புத்தியே எல்லாவற்றிலும் நட்பாகிறது. வீர்யம் அவ்வா றுகாது. யோகேசுவர இதற்கும் ஒரு கதை யுண்டு; கூறுகின்றேன் கேள்.

ஸரஸ்வதி யென் றொரு நகர மிருக்கிறது. அதில் பிரஸேந ஜித் என்னும் ஒரு அரச னிருந்தான். அந்த நகரத்திற்கு புதி தாக ஓர் வேதியன் வந்தான். அவன் குணவன் என்னும் அழகிய பெய ருடையவன். ஶுத்திரான்னம் புசியாதவன். அவனை யொரு வர்த்தகன் கண்டு, அங்கு ஒரு அந்தண னுடைய வீட்டில் தங்கும் படி சொன்னன். இவ் வர்த்தகனும், இன்னும் மற்று முள்ள வர்த்தகர்களும் அவ் வேதியனை ஸாது வென்று அறிந்து பதார்த் தம், தக்ஷிணை மற்று முள்ள வஸ்து இவைகளை நா டோறும் கொடுத்து வந்தார்கள். இதனல், கிருபண னுகிய அவ் வேதியன் ஏராள மான பொருளைச் சேகரித்துக் கொண்டான். அவன் அப் பொருளில் ஆயிரம் ஸ்வர்ணத்தை யெடுத்துக் கொண்டு ஒரு வநத்திற்குச் சென்று அங்கே ஓரிடத்தில் பூமியைப் பறித்து, அதில் போட்டு மறைத்து வைத்துப் பத்திரப் படுத்திக் கொண்டான். அவன் அப்பால் நா டோறும் அவ் வநம் சென்று தான் புதைத்து வைத்த பணம் இருக்கின்றதா? வென்று பார்த்து வருவான். ஒரு நாள் அவன் தன் வழக்கம் போல் வநத்திற்கு வந்து பார்த்தான். திரவியம் புதைக்கப்பட்டிருந்த அந்த இடம் பறிக்கப்பட்டிருந்தது. அதில் அவன் வைத்த ஸ்வர்ணத்தையும் காண வில்லை. ஆகவே, அவன் மநம் உடனே மாறிற்று. இருதயத்தில் வே றெதுவும் அமைய வில்லை. பின்னர், அழுது கொண்டே தான் தங்கி யிருக்கும் வேதியன் வீட்டுக்கு வந்தான். இவ் வாறு, அழுது கொண்டே வரக் காரண மென்ன வென்று வீட்டுக்காரன் கேட்டான். அந்தக் குணவான் உண்மையைக் கூறவே, வீட்டுக்காரன் அவன் மீ திரக்கங் கொண்டு, "நமது

பிராரப்தம் அவ் வளவு தான்; கைவிட்டுப் போனதைப் பற்றி வருந்துவதால் யாது பயன்?" என்று சமாதாந வார்த்தைகள் சொன்னான். குணவான், அவன் என்ன சொல்லியும் கேளாமல், போஜநம் செய்யாமலே தண்ணீர்த் துறை சென்று தன் பிராணனை விட யத்தநித்தான். இவனுக்கு இது காறும் அன்ன மிட்டு வந்த வர்த்தகன் இதை யறிந்து, மற்றும் சில வர்த்தகர்க ளுடன் இவ னிடம் வந்து, "பிராமண! பொருள் நிமித்த மாக என் உயிரை இழக்க யத்தநிக்கின்றீர்? பொரு ளானது அகால மேகம் போல் அகாரண மாக வருகின்றது; பின் போகின்றது. அது பற்றித் துக்கிப்பது பேதமை யன்றோ?" என்று கூறினான். அவர்கள் என்ன சொல்லியும் அவன் தான் கொண்ட எண்ணத்தி லிருந்து திரும்பின னில்லை. கிருபணனுக்குப் பொரு ளாசை யானது பிராணனை விட மேலான தன்றோ? இச் செய்தி அந் நகர அரச னாகிய பிரஸேநஜித் என்பவ னுடைய செவிக் கெட்டியது. அரசன் உடனே அவ் வந்தணனிடம் வந்து, "நீர் பொருளைப் புதைத்து வைத்திருந்த இடத்தி லேதேனும் அடையாள முண்டோ?" வென்று கேட்டான். குணவ னென்னும் அவ் வந்தணன், "நான் பணம் புதைத்து வைத்திருந்த இடத்தில் ஒரு சிறிய விருக்ஷ முண்டு" என்றான். அரசன், அந்தணனை நோக்கி, "நீர் வருத்தப்பட வேண்டாம்; அந்தப் பொருளை நான் விசாரித்துக் கண்டு பிடித்தோ, அல்லது, என் கஜானாவி லிருந்தோ தருகின்றேன். நீர் இதற்காக உயிரை விடவேண்டாம்" என்று கூறி, அவனை அவன் முயற்சியினின்றும் தடுத்து, வர்த்தகனிடம் ஒப்புவித்து விட்டு அரண்மனை சென்றான். அப்பால், மறு நாள் அரசன் தனக்குத் தலை நோகக் கண்டிருக்கின்ற தென்று கூறிப் படுத்துக்கொண்டு, வைத்தியர்க ளெல்லாரையும் அழைத்து வரும் படி தன் வேலைக்காரனுக்கு உத்தரவிட்டான். வேலைக்காரன் எல்லா வைத்தியர்களையும் அழைத்துக் கொண்டு வந்தான். அரசன், அவர்க ளொவ்வொருவரையும் தனித் தனியே யழைத்து, "கடந்த இரண்டு நாளைக்குள் நீ யாருக்கு எந்த விதமான ஔஷதம் கொடுத்தாய்?" என்று கேட்டான். அவர்களுள் ஒருவன், "சென்ற இரண்டு நாட்களுக்கு முன் தான் மாத்ரு

தத்தன் என்னு மொரு வர்த்தகனுக்கு நாகபலே யென்னும் ஓஷதியை உபயோகிக்கும்படி தெரிவித்தேன்'' என்ருன். அரசன் கேட்டு உடனே மாத்ரு தத்த னென்னும் அவ் வர்த்தகனை வர வழைத்து, "உனக்கு நாகபலே யென்னும் ஓஷதியைக் கொண்டு வந்தது யார்?'' என்று வினவினன். மாத்ரு தத்தன், "பிரபுவே! என் வேலேக்காரன் கொண்டு வந்தான்'' என்ருன். அரசன் அவ் வேலேக்காரனை அக் கணமே யழைத்து வரச் சொல்லி, அவனைப் பார்த்து, "நீ நாகபலேக்காக மரத்தி னடியிற் பறிக்கும் போது உனக்குக் கிடைத்தனவே, அந்த ஸ்வர்ணங்கள் பிராமண னுடைய பொருள்கள்; அவைகளைக் கொடுத்து விடு'' என்று கட்டளை யிட்டார். வேலேக்காரன் அந்த நிமிஷமே அதை ஒப்புக் கொண்டு பயந்து தன் வீட்டிற்குச் சொல்லி யனுப்பிப் பொருளை வரவழைத்து அரசனிடம் கொடுத்தான். பிரஸேநஜித் தரசன் பிறகு அவ் வந்தணனை வர வழைத்து, அவனிடம் அவனுடைய பொருளேக் கொடுத் தனுப்பினன். தா னிழந்த பொருளை மீண்டு மடைந்த அவ் வந்தணன் வெளியே சஞ்சரித்த பிராணனை மீண்டு மடைந்தது போல் சந்தோஷித்தான்.

இவ் வாறு, ப்ரஸேநஜித்து ராஜன் தன் புத்தியால் பணத்தி நிமித்தம் உயிரை விட நிச்சயித்த ஒரு அந்தணனைச் காப்பாற்றி னன். ஆகையால், எப்போதும் புத்தியே சிறந்தது. அது பராக்ரமத்தையும் அதிகரிக்கும். இப்படிப்பட்ட காரியங்களில் பராக்ரமம் என்ன செய்யும்? யோகேசுவர! நீ உன் அறிவால் களிங்க ஸேனைக்கு ஏதேனும் தோஷ மிருப்பதாகத் தெரிந்து கொள்ளும்படி செய்யவேண்டும். இந்தக் களிங்க ஸேனையினிடம் தேவர்களும், அசுரர்களும் ஆசை கொள்கின்ருர்கள். அதற் கேற்றபடி நீயும் இரவில் ஏதோ ஒரு சப்த முண்டாவதாய்க் கேட்டிருக்கிருய். இந்தக் களிங்க ஸேனைக்குத் தோஷ மேதேனு மேற்பட்டு விடுமாயின், நமக்குக் கஷ்ட முண்டாகாது. வத்ஸ ராஜனும் களிங்க ஸேனையை மணந்து கொள்ள விரும்பான். அதர்மமும் நேரிடாது'' என்று கூறினன்.

இதைக் கேட்ட பிர்ம்ம ராக்ஷஸனுகிய அந்த யோகேசுவரன், கம்பீரமான புத்தியை யுடைய அந்த யௌகந்தராயனை நோக்கி, "நீதியில் உமக்குப் பிரஹஸ்பதியை யன்றி வேறு யாவர் நிகராவர்; உன் யோஜனையானது ராஜ்ய மாகிற விருக்ஷத்திற்கு, அமுத வருஷம் போ லாகின்றது. நான் புத்தியிலும், சித்தியிலும் களிங்க ஸேனையி னுடைய நிலைமையை யெப்பொழுதுங் கவனிக் கின்றேன்" என்று கூறி மறைந்தான்.

நா டோறும் களிங்க ஸேனை தன் மாளிகையின் உப்பிரி கைக்குச் செல்வ துண்டு, அப் பொழுது சில சமயம் உதயந ராஜனை அவ னுடைய மாளிகையின் மேன் மாடிமீ துலாத்தக் காண்பாள். அதனுல் மநம் வாடுவாள். எப் பொழுது இந்தச் சுந்தர ரூபனை மணக்கத் தருணம் வாய்க்கு மென்று எண்ணி வெம்புவாள். இவள் என்ன செய்யக் கிடக்கிறது. எதற்கும் வேளை வரவேண்டாமா?

இவ்வா றிருக்கையில், ஏற்கனவே இவள் மீது காதல் கொண்டு தன் எண்ணம் நிறைவேறுவதன் பொருட்டு, பரம சிவ னிடம் வரம் பெற்ற வித்யாதர அதிபனுகிய மதந வேகன் என்பவன் களிங்க ஸேனை உதயநனிடம் ஆவல் கொண்டு இங்கு வந்திருப்பது கண்டு, இராக் காலங்களில் இங்கு வந்து ஆகாய மார்க்கத்தில் சுற்றிக்கொண் டிருக்கிரு னுகையால், அவன் ஒரு நா ளிரவு உதயநன் போல வேடம் பூண்டு, இந்தக் களிங்க ஸேனையின் மாளிகைக்குள் பிரவேசித்தான். இவனைக் கண்டதும் வாயிற் காப்பவர்கள் வணங்கினுர்கள். "மந்திரிகள் ஏற்படுத்தி யிருக்கும் கால தாமதத்திற்கு இணங்காமல் இங்கு வருகின்ருன் அரச" னென்று கருதினர். அவனைக் கண்ட களிங்க ஸேனை அரச னெனவே யெண்ணி நடுக்கமும், பயமும் கொண்டு பர பரப்புடன் எழுந்தாள். அப் பொழுது ஆபரணங்கள் சப்த மிட்டன. அவைகள் அவ் வாறு சப்த மிடுவது உதயந னல்ல இவன் என்பதைத் தெரிவிப்பது போ லிருந்தது.

அவ் வாறு, மாறு வேடம் பூண்டு சென்ற அந்தக் கந்தர்வன் தன்னை உதயந னெனவே நம்பும்படி செய்து காந்தர்வ விவாகம்

செய்து கொண்டான். இச் சமயம், யோகேசுவரன் வழக்கம் போல் அங்கே வந்து பார்க்க, அவள் உதயநனோ டிருக்கக் கண்டு ஆச்சரிய மடைந்து, மந்திரியிடம் வந்து தெரிவித்தான். மந்திரி, "அப்படியா! நீ இப்பொழுது, உன் யோகவலுவால் வாஸவ தத்தை யிடம் உதயந ராஜ னிருக்கின்ருனு? இல்லையா? வென்று பார்த்து வா" வென்று ஆக்ஞாபிக்க, அவன் அவ் வாறே சென்று பார்த் தான். அங்கே உதயநன் வாஸவ தத்தையுட னிருக்கக் கண்டு மகிழ்ச்சி யடைந்து, உடனே வந்து மந்திரி யிடம் கூறினுன். மந்திரி "இஃதென்ன விந்தையா யிருக்கின்ற" தென் றெண்ணிச் சற்று யோசித்து, "களிங்க ஸேனையி னிடம் இரகஸ்யமாக யாரோ உரு மாறி வந்திருக்கின்ரு" னென்று நிச்சயித்து, அவ னுடைய ரூபத்தைத் தெரிந்து கொண்டு வரும்படி அந்த யோகேசுவர னுக்கு ஆக்ஞாபித்தான். யோகேசுவரன் களிங்க சேனையின் மாளிகைக்குட் பிரவேசித்து, படுக்கை அறையை கவனித்தான். அங்கே வித்யாதர உருவத்தோடு நித்திரை புரியும் மதந வேகனைப் பார்த்தான். உடனே அங்கிருந்து புறப்பட்டு மந்திரி யிடம் வந்து, முக மலர்ச்சியுடன் அவனைப் பார்த்து, "மந்திரி! நீதிக் கண்ணுல் தாங்கள் தெரிந்து கொள்வது போல எங்களால் தெரிந்து கொள்ள முடியாது. பிரபுவான அரச னுடைய இந்தக் காரியமானது ஸாதிக்க முடியாத தாயினும், உமது யோசனையால் நிறை வேறிற்று. ஆதித்த னில்லாத ஆகாயமும், நீ ரில்லாத தடாகமும், ஆலோசனை கூறுவா ரில்லாத ராஜ்யமும், ஸத்திய மில்லா வார்த்தையும் எதற்குப் பிரயோஜநம்." என்று கூறினுன்.

யௌகந்தராயணன் இவ் வாறு கூறிய யோகேசுவரனிடம் அன்போடு சற்று நேரம் சம்பாஷித்துக் கொண்டிருந் தனுப்பி விட்டு, மறுநாள் காலையில் வத்ஸ ராஜனைப் பார்க்கச் சென்று அவ னோடு வழக்கம் போல் சற்று நேரம் கதை சொல்லிக் கொண்டி ருந்து விட்டு அப்பால், "மகா ராஜாவே! இந்த களிங்க ஸேனை தன் னிச்சைப்படி நடப்பவள். தாங்கள் மணஞ் செய்து கொள்ளத் தகாதவள். இவள் தன் விருப்பப்படி பிரஸேநஜித்து ராஜனைப் பார்க்க வந்தாள். அவன் வயோதிகனுக விருப்பதனுல் அவனை

விரும்பாமல் தங்க ளுடைய ரூபத்தில் ஆசை கொண்டு இங்கு வந்திருக்கின்றாள். அல்லாமலும், இவள் வேறு புருஷ னிடம் பற்றுத லுடையவ ளென்று தெரிகின்றது'' என்றான். அரசன், ''இந்தக் களிங்க ஸேனையோ நல்ல வம்சத்தில் பிறந்தவள். அவள் இவ் வாறு செய்யக் காரண மென்ன? நம் முடைய அந்தப் புரத் தின் மத்தியில் பிரவேசிப்பவன் யாவன்?'' என்று கூறி வியப் புற்றான். யௌகந்தராயணன், ''தேவ! இப் பொழுதே பிரத்யக்ஷ மாக உமக்கு இத னுண்மையைக் காட்டுகின்றேன். இந்தக் களிங்க ஸேனையைத் தேவர்களும், சித்தர்களும் விரும்புகின்றனர். அப்படியிருக்கும் அவளை இங் குள்ள மானிடருள் யாரே விரும்பு கிறவர்? அரசனே! தேவர்களின் கதியைத் தடை செய்ய யாருக்கு வல்லமை யுண்டு. தாங்கள் இப்போது என் னுடன் வரின் நேரில் பார்க்கலாம்'' என்று கூறினன்.

உதயநன், ''நல்லது; இன் றிரவு போய்ப் பார்ப்போம்'' என, யௌகந்தராயணன் விடை பெற்றுச் சென்று வாஸவ தத்தையைக் கண்டான். வாஸவ தத்தை மந்திரியை அன்போடு வரவேற் றுப சரித்தாள். மந்திரி யௌகந்தராயணன், ''தேவி! பட்டமகிஷியாகிய பத்மா வதியைத் தவிர மற்றொரு ஸ்திரீயை அரசனுக்கு விவாகம் செய்விப்ப தில்லை யெனப் பிரதிக்ஞை செய்திருந்தே னல்லவா? அது இப் பொழுது நிறை வேறிற்று'' என்று கூறிக் களிங்க ஸேனை யைப் பற்றிய வரலா றனைத்தும் தெரிவித்தான். வாஸவ தத்தை, ''மந்தரி! உமது சிக்ஷையின் அநுஷ்டாந பலன் இது!'' என்று கூறிப் புகழ்ந்தாள். யௌகந்தராயணன் பிறகு அங் கிருந்து தன் மளிகை சென்றான்.

அன்று அர்த்த ராத்திரி வேளை யாயிற்று. ஜநங்க ளெல் லோரும் நன்றாய் நித்திரை செய்யும் அச் சமயம் யௌகந்தராயண னும், உதயநனும், களிங்க ஸேனையின் மாளிகை சென்றனர். யௌகந்தராயணன், அரசனைப் படுக்கை யறையிற் சென்று பார்க்கும்படி கூற, அரசன் அவ்வாறே, சந்தடி செய்யாமல் அவ் வறைக்குள் சென்று பார்த்தான். அங்கே களிங்க ஸேனையி னருகே அந்த மதந வேகன் நித்திரை புரிவதைக் கண்டான்.

உடனே ஸாகஸம் செய்த அந்த மதந வேகனைக் கொல்லச் சிநந்து கத்தியை உருவினன். மதந வேகன் அதற்குள் விழித்துக் கொண்டு தன் வித்தையால் வித்யாதரனாக உருக்கொண்டு விரைவில் ஆகாயத்தில் கிளம்பினன். உடனே அரசனும் அங்கோரிடத்தில் மறைந்தான். களிங்க ஸேனையும் அதே க்ஷணத்தில் விழித்துக் கொண்டு தன்னிடம் சயநித்துக் கொண்டிருந்த புருஷனைக் காணமல், "என் உதயந மகாராஜன் என்னை எழுப்பி விட்டன்றோ செல்வது வழக்கம். இன்று நான் நித்திரை செய்யும் பொழுதே போய் விட்டாரே" என்று கூறி, நாலா பக்கமும் பார்த்தாள். இப்பொழுது, யௌகந்தராயணன் அரசனிடம் "மெதுவாய்க் கவனித்தீர்களா? தங்களுருவங் கொண்டு வந்து எவனோ ஒருவன் இவளைக் கெடுத்து விட்டான். அவனை நான் யோக வன்மையாலறிந்து, இப்பொழுது, நேரே தங்களுக்குக் காட்டினேன். அவன் தேவாம்ச முடையவனாகையால், அவனைக் கொல்ல முடியவில்லை" என்று கூறினன். அரசன் பிறகு, அந்த யௌகந்தராயணனை யழைத்துக் கொண்டு களிங்க ஸேனையிடம் சென்றான். களிங்க ஸேனை இவர்களைக் கண்டதும் பரபரப்புடனெழுந்து, "பிரபுவே! இப்பொழுது, தானே வெளியே சென்றீர்கள். அதற்குள் மந்திரியை எப்படி யழைத்துக் கொண்டு வந்தீர்கள்?" என்று கேட்டாள். யௌகந்தராயணன், "களிங்க ஸேனே கேள்; எவனோ ஒருவன் உன்னை வஞ்சித்து அரசனுருவங் கொண்டு வந்து மணம் புரிந்து கொண்டான். எங்கள் பிரபுவாகிய அரசன் உன்னை மணஞ் செய்து கொள்ளவில்லை" என்றான். இதைக் கேட்டவுடன் களிங்க ஸேனை மநங் கலங்கிப் பிரமித்து அரசனை நோக்கி, "என்னை நீர் காந்தர்வ விதிப்படி விவாகஞ் செய்து கொள்ளவில்லையா? முன் துஷ்யந்தன் சகுந்தலையை மறந்தது போல் மறந்து போனீர் போலும்" என்று கேட்டாள்.

இவ்வாறு களிங்கஸேனை கேட்க அரசன் தலை குனிந்தவாறு, "நான் உன்னை ஸத்தியமாக மணஞ் செய்து கொள்ளவில்லை. சற்று முன் தான் நானிங்கே வந்தேன். நான் ஒன்றும் அறியேன்" என்றான். களிங்க ஸேனை "என்ன ஆச்சரிய மிது"

என்று பிரமித்த வாறு நின்ருள். யௌகந்தராயணன், அரசனை நோக்கி, "உண்மை வெளி யாயிற்று. வாருங்கள், நாம் போவோம்,!" என்று கூறி, அரசனை யழைத்துக்கொண்டு அரண் மனை போய்ச் சேர்ந்தான்.

அப்பால், அந்தக் களிங்க ஸேனை தன் இனத்தை விட்டுப் பிரிந்த பெண் மானை யொத்து மநங் கலங்கினள். புருஷனுடன் ஸம்போகம் செய்தமையால் மகரிகாதி பத்ரிகைக ணீங்கிய முக கமல முடையவளும், சிதறுண்ட வண்டுக் கூட்டம் போன்ற கூந்தலை யுடையவளு மாகிய களிங்க ஸேனை, யானையால் கலக்கப் பட்ட தாமரை யோடை போ லாயினள். கந்நிகைப் பருவத்தை யிழந்தவளும், உபாயக் கிரம மறியாதவளு மாகிய களிங்க ஸேனை ஆகாயத்தை நோக்கிக் கை குவித்து நின்று, "எவ னொருவன் உதயநன் போல வேடம் பூண்டு என்னை மணந்து கொண்டானே குமாரப் பருவத்தின னாகிய அந்த ஆடவன் எனக்கு இப் பொழுது இங்குப் பிரஸந்நமாகக் கடவன். அவனே எனக்கு ஏற்ற நாயகன்" என்ருள்.

இவ் வாறு களிங்க ஸேனை கூறியதும், வித்யாதராதிபனுகிய மதந வேகன், தேவர்களுக் குரிய ரூபத்துடனும், ஹாரம், கேயூரம் இவைகள் பூண்ட திருமேனி யுடனும் ஆகாயத்தி லிருந்து இறங்கினுன். களிங்க ஸேனை, "நீ யார்" என்று கேட்க, அவன், "சுந்தரி! நான் மதந வேக னென்னும் பெய ருடையவன்; வித் யாதரர்களுக்குப் பிரபு. நீ முன் உன் தந்தையின் கிருகத்தி லிருக்கும் போது உன்னை நான் பிரதமத்தில் தரிசித்ததும், உன்னை யடைய விரும்பித் தவம் புரிந்து பரமேசுவரனிடம் வரத்தைப் பெற்றேன். நீ உதயந ராஜனிடம் மோகம் கொண்டு இங்கு வந்திருப்பது தெரிந்து அவ் வரச னுடைய உருவங் கொண்டு உன்னை உபாயத்தால் மணந்து கொண்டேன்" என்று கூறினுன்.

மதந வேக னுடைய சொற்க ளாகிய அம்ருதம் செவியில் வழியவே, களிங்க ஸேனையின் இருதய கமலம் மலர்ந்தது. அவள் என்று மடையாத மகிழ்ச்சி யடைந்தாள். பின்னர், மதந

வேகன் அவளுடன் அன்போடு சம்பாஷித்துக் கொண்டிருந்து தக்க சமாதாநங்கள் கூறி "நான் திரும்ப இங்கே வருகின்றேன். நீ இங்கேயே யிரு" என்று கூறி விட்டு மறைந்தான். தன் கணவன் கிருகம் தேவர்க ளிருக்கக் கூடிய தாயும், மானிடர் செல்லக் கூடாததாயும் இருப்பதையும், தன் தந்தையின் கிருகம் தன்னால் நிக்ரகிக்கப்பட்டதையும் சிந்தித்துப் பார்த்து, மதந வேக னுடைய உத்தரவுப்படி அங்கே யிருந்து வந்தாள்.

7-வது தரங்கம்
முற்றிற்று.

---

## 8-வது தரங்கம்.

---

இவ் வாறிருக்கையில், உதயந ராஜன் ஒரு நாள் இரவில் களிங்க ஸேனையை நினைத்துக் கொண்டு மன்மத தாபமுற்றுத் திடீரென்று அப் பொழுதே படுக்கையி லிருந் தெழுந்து தனியே களிங்க ஸேனை யிருக்கும் அரண்மனை சென்றான். களிங்க ஸேனை அரசனைக் கண்டதும் வணங்கி யுபசரித்தாள். அரசன் அவளிடம் மகிழ் வுற்றுத் தன்னை விவாகம் புரிந்து கொள்ளும்படி பிரார்த்தித்தான். களிங்க ஸேனை, நான் வே றொருவர்க் குரியவளென்பதை நீ ரறியீரோ? அப்படி யிருக்க என்னை விரும்புவது நியாயமோ?" என்று கூறினாள். அரசன், "பெண்ணே! நீ மூன்றாவது புருஷனை யடைந்தவ ளல்லவா? ஆகையால் நீ வேசி யாகின்றாய். உன்னை யடைவதில், பிறர் மனைவியைப் புணரும் தோஷம் எனக்கு ஏற்படாது," என்று கூறினான். களிங்க ஸேனை, 'பிரபுவே! நான் உம்மை உத்தேசித்து வந்தேன். மதந வேகன் என்னும் வித்யாதரன் உம்மைப் போல் வேஷம் பூண்டு வஞ்சனையினால் என்னை விவாகம் செய்து கொண்டான். ஆகையால் நான் அவனையே புருஷனாகக் கொண்டேன். நான் எப்படி வேசி யாவேன்? உறவினர்களுக் கடங்காமல் தன் இச்சைபடி நடக்கும் ஸ்திரீகளுக்கு இவ் வாறான

விபத்துக்க ளுண்டாவது சகஜமே யாம். அதிலும் என் போன்ற பாலிகைகளைப் பற்றிக் கேட்க வேண்டுமா? நான் இங்கே வரப் புறப்படும் போது நேர்ந்த சில அபசகுநங்களைக் கண்ட என் தோழி என்னைத் தடுத்தாள். அதைக் கேளாமல் நான் புறப்பட்டு வந்து தங்களுக்குத் தூ தனுப்பினேன். அதன் பயன் போலு மிது. தாங்கள் என்னை பலாத்காரமாகக் கைப்பற்றுவீர் களாயின், நான் என் உயிரை மாய்த்துக் கொள்வேன். நல்ல வம்சத்திற் பிறந்தவர்களுக்குள் எந்த மாது தான் கொண்ட புருஷனுக்குத் துரோகம் செய்வாள்? இதற் கொரு கதை யுண்டு; கூறுகிறேன்; தயை செய்து கேட்கவேண்டும்'' என்று கூறுகின்றாள்.

முன் னொரு காலத்தில் சேதி தேசத் தரசன் இந்திர தத்தன் என்பவ னொருவ னிருந்தான். அவன் தன் சரீரம் அழியுந் தன்மைய தென்ப துணர்ந்து புகழு டம்பை விருப்பிப் பாபங்களைப் போக்கும் புண்ய நதிக் கரையில் ஒரு பெரிய தேவாலயத்தை நிர்மாணித்து, அந்த ஆலயத்திற்குப் பக்தியுடன் நா டோறுஞ் சென்று கடவுளைத் தொழுது வருவான். ஜநங்களும் அங்குச் சென்று நதியில் நீராடிக் கடவுளைத் தொழுது திரும்புவார்கள்.

இவ் வா றிருக்கையில், ஒரு நாள் இந்திர தத்தன் அந் நதிக்கு வழக்கம் போல் சென்று நீ ராடினன். அங்கு அப் பொழுது ஒரு ஸ்த்ரியும் வந்து ஸ்நாநம் செய்து கரை யேறினாள். அவள் அவ் வூர் வியாபாரி ஒருவ னுடைய மனைவி. அவ் வியாபாரி யாத்திரை போயிருந்தான். அவள் தேகம் மநத்தைக் கவரத் தக்க பே ரெழிலோடுங் கூடியதா யிருந்தது. அதற் கேற்பத் திவ்யாபரணங்கள் பூண்டு உயர்ந்த வஸ்திரந் தரித்துக் கொண் டிருந்தாள். அவள் மன்மத ராஜ தானியே நடந்து வருவது போல் விளங்கினள். இப்படிப்பட்ட அந்த ஸ்த்ரீயை இந்திர தத்த ராஜன் விரும்பினன். அதை யறிந்த அந்த ஸ்த்ரீ, ''பிரபுவே! நீர் எல்லோரையும் ரக்ஷிப்பவர். தாங்கள் பிறர் மனைவியை ஸ்பரிசிப்பது தகுமா? என்னைத் தாங்கள் பலாத் காரமாகத் தொடுவீ ராயின், அது அதர்ம மாகு மல்லவா? அல்லாமலும், நான் உயிரை அக் கணமே விடுவேன். அந்தப்

பாபமும் தங்களைப் பாதிக்கும். பிறர் எனக்குக் கெடுதி செய்யின் அதை நான் பொறுக்க மாட்டேன்'' என்று கூறினுள். இவ்வாறு நியாயங் கூறியும், இந்திர தத்த ராஜன் கேளாமல் பலாத்காரம் செய்ய ஆரம்பித்தான். அந்த ஸ்திரீ, "தன் கற்புக்குப் பங்கம் நேர்ந்து விடுமோ வென்று பயந்தாள். உடனே அந்தப் பயத்தினுல் அவள் மார்பு வெடித்தது. பிராணனும் அக் கணமே அவளை விட்டுப் பிரிந்தது. அரசன் வெட்க மடைந்து அங்கிருந்து வருத்தத்துடன் அரண்மனை வந்து சின் னுட்களில் அதே வருத்தத்தினுல் மரணமானுன்'' என்று இக் கதையைக் கூறிவிட்டு, அரசனை நோக்கிப் பய பக்தியுடன், "அரசனே! அதர்ம சிந்தனை வேண்டாம்; நமக்கும் பிராண ஹாநி நேரிட வேண்டாம். இந்தத் துர் எண்ணத்தை மறந்து விடுங்கள். நான் இங் கிருந்து நிர்ப்பய மாக வசித்து வர உத்தரவு கொடுங்கள். இன்றேல் நான் வே றெங்கேனும் செல்கின்றேன்.'' என்ருள்.

இதைக் கேட்டதும், அரசன் யோசித்த வாறே சற்று நேர மிருந்தான். பின்னர் அந்த மன்னன், தர்மாதர்மங்களை யுணர்ந்தவனுகையால் நல்ல புத்தியை யடைந்து, "இராஜ புத்திரி! நீ உன் பர்த்தாவுடன் இந்த இடத்தில் சுக மாக வாசஞ் செய்யலாம். நான் உன்னை ஒன்று மினிச் செய்வ தில்லை; அஞ்ச வேண்டாம்'' என்று கூறிவிட்டுத் தன் அரண்மனை சென்ருன். இவற்றை யெல்லாம் ஆகாயத்தி லிருந்து கேட்டுக் கொண் டிருந்த மதந வேகன் என்னும் கந்தர்வன் அக் கணமே களிங்க ஸேனை யிடம் வந்து, "பிரியே! மங்கள குண முடையவளே! இவ் வாறு நீ செய்யா விடின் நன்மை யுண்டாகாது; மகிழ்ச்சி யடைந்தேன்'' என்று கூறி அவளைப் புகழ்ந்து, அன் றிரவு அவளோ டிருந்து சென்ருன். அப்பால், அந்தக் கந்தர்வன் அங்கு வந்து களிங்க ஸேனையுடன் இரவில் தங்கி யிருப்பதும், பிறகு செல்வது மாக விருந்து வந்தான். களிங்க ஸேனை ஒரு மானிட ஸ்திரீயா யிருந்தும் தேவர்களுக் குரிய சுகங்களை யநுபவித்துக் கொண்டி ருந்தாள். வத்ஸ ராஜனும், களிங்க ஸேனையி னிடம் கொண் டிருந்த அன்பை மறந்து, மந்திரி யின் மொழிகளை யெண்ணி, வாஸவ தத்தை, பத்மா வதி, ராஜ்யம்

மைந்தன் இவர்களை மீண்டும் புதி தாக அடைந்ததாகச் சந்தோஷித் தான். வாஸவ தத்தையும், பத்மா வதியும் நீதி யாகிய கற்பகக் கொடி பலன்களை யடைந்தது போல், தாங்கள் ஸித்தி பெற்றதைக் கருதி யாநந்த மடைந்திருந்தனர்.

சின் னுட்களுக் கப்பால் களிங்க ஸேனை கர்ப்பந் தரித்தாள். முக கமல மானது வெளுத்தது. நா வானது பற் பல ருசியான பதார்த்தங்களையும், கனிகளையும் விரும்பிற்று. ஸ்தநத்தின் நுனி கறுத்து மன்மத னுடைய மத மென்னும் முத்திரை கொண்டு அடை யாள மிட்டதற் கொப்பாகத் தோன்றிற்று. இத் தருணத்தில் ஒரு நாள் மதந வேகன் அவ ளிடம் வந்து, "களிங்க ஸேனே! எப் பொழுது மானிட கர்ப்ப முண்டாகிறதோ, அப் பொழுது அதை விட்டு விலகி வெகு தூரம் செல்ல வேண்டு மென்பது தேவர்க ளாகிய எங்களுக்குள் ஏற்பட்ட தோர் சங்கேதம். முன் கண்வ மகரிஷியி னுடைய ஆசிரமத்தில், மேநகை யாகிய தேவ ஸ்த்ரீ சகுந்தலையை விட்டுச் சென்று ளல்லவா? நீ முன் அப்ஸர ஸ்த்ரீயா யிருந்தாய்; இப் போது இந்திர னுடைய சாபத்தால் மானிடத் தன்மையை யடைந்திருக்கின்ருய். அதனுலே தான் வேசி யென்னும் பழிப் பான வார்த்தை உனக் குண்டாயிற்று. உனக்குப் பிறக்கும் பிள்ளையை நீ காப்பாற்று. நான் என் னிருப்பிடம் செல்கின்றேன். நீ யெப் போது என்னை நினைக்கின் ருயோ, அப்போது வருகின்றேன்" என்று கூறினுன். களிங்க ஸேனை இம் மொழி கேட்டதும், ஹா! என்று சோர்ந்து கண்களில் நீர் பெருக்கினுள். தன்னையே மறந்து அவச மானுள். அது கண்ட மதந வேகன் மந மிரங்கி, "பயப்படாதே; நீ எப்போது என்னை நினைக்கின்ருயோ, அப் பொழுது நான் தவருமல் வருகின்றேன்" என்று கூறி, அவளைச் சமாதாநப் படுத்தி விட்டுத் தன் இருப்பிடம் சென்றுன். களிங்க ஸேனை, தோழி போன்ற வத்ஸ ராஜ னுடைய கை நிழலை ஆசிரய மாகக் கொண்டு தனக் குண்டாகும், ஸந்ததி யிடம் அன் புடைய மநத்துடன் அந்த உய்யாந வநத்திலேயே யிருந்து வந்தாள்.

இச் சமயத்தில் ரதிதேவி யானவள் தன் கணவனைச் சரீரத் தோடு மீண்டு மடைய வெண்ணங் கொண்டு பக்த பாராதீனனாகிய முக் கண்ணனைக் குறித்துத் தவம் புரிந்து வந்தாள். அவளுக்கு மங்கை பங்காள னாகிய மகா தேவன் இரங்கி, அவள் முன் தோன்றி, "ரதி! முன் என் னுடைய நெற்றிக் கண்ணுக் கிரையா யழிந்த உன் கணவன் என்னை மீறிய தோஷத்தால் மானிட யோநியிற் பிறந்து நரவாஹந தத்த னென்னும் பெய ருடன் வத்ஸ ராஜ னுடைய கிருகத்தில் வளர்ந்து வருகின்றான். நீ என்னைப் பூஜித்தமையால் யோநி சம்பந்த மில்லாமலே உண் டாகப் போகின்றாய். பிறகு உன் பர்த்தாவை நீ யடையப் போகின்றாய்" என்று கூறி விட்டு, பிர்ம தேவனை வர வழைத்து, "களிங்க ஸேனை தேவ குமாரனைப் பெறப் போகின்றாள். அந்த குமாரனை மாயையினா லபகரித்து அப்புறப் படுத்தி விட்டு, அந்த இடத்தில் தேவ சரீரத்தை விடும் இரதியை மானிடக் கந்நிகை யாகப் படைத்து அங்கு வைத்து விடு" என்று ஆக்ஞாபித்தார். பிர்ம தேவன், பரம சிவ னுடைய கட்டளையைச் சிரமேற் கொண்டு "அவ் வாறே செய்கின்றேன்" என்று கூறி விடை பெற்றுச் சென்றான்.

அப்பால் களிங்க ஸேனை பத்தாவது மாதம் நிறைந்ததும் புத்திரனை யீன்றாள். அந்தப் பிள்ளை பிறந்த அக் கணமே பிர்ம தேவர் மாயையால் அவ்விடத்திற் பிரவேசித்து அதை யபகரித்து அப்புறப்படுத்தி விட்டு, ரதியைச் சிறு குழந்தை யாக்கி அங்குக் கிடத்தி விட்டு மறைந்தார். அங் கிருந்தா ரனைவரும் களிங்க ஸேனைக்குப் பிறந்தது பெண் மக வென்றே தீர்மானித்தார்கள். அந்தப் பெண் மகவு பகலில்: அதினும் பிரதமை யன்று உதய மான சந்திர ரேகை போல் விளங்கிற்று. இந்தக் குழந்தையின் தேஜ ஸால் அங் கிருந்த ரத்திந தீப ஜுவாலையின் வரிசைகள் ஒளி மழுங்கியது போ லாயின. களிங்க ஸேனை அந்தப் பெண் குழந்தை யிடம் புத்திரப் பேற்றை யடைந்ததற் கொப் பான ஸந்தோஷம் பாராட்டினாள்.

இவ்வளவு அழகு வாய்ந்த வொரு பெண் குழந்தை களிங்க ஸேனைக் குண்டா யிருப்பது உதயந ராஜன், பத்மா வதி, வாஸவ தத்தை, யௌகந்தராயணன் இவர்களுக் கெட்டியது. உதயநன் திடீ ரென்று யௌகந்தராயண னிருக்கும் பொழுதே வாஸவ தத்தையை நோக்கி, "தேவி! இந்தக் களிங்க ஸேனை தேவ ஸ்த்ரீ யாகின்றாள். சாப வசத்தால் மாநிட ஸ்த்ரீ யாயினள். இவ ளிடம் இப்போ துண்டா யிருக்கும் பெண் குழந்தை தேவாம்ச முடையது. ஆச்சரிய மான ரூப முடைய இந்தப் பெண் நமது குமாரன் நரவாஹந தத்தனுக்கு நேரான அழகு வாய்ந்தவள். அவனுக்குப் பட்ட மகிஷி யாகக் கூடிய பாக்கியம் அப் பெண் ணிடத் துண் டென்று ஊகிக்கின்றேன்" என்றான். இதைக் கேட்டதும் வாஸவ தத்தை உதயநனை நோக்கி, "மகா ராஜனே! ஏன் இவ் வாறு, அகாரண மாகப் பேசுகின்றீர்? பரிசுத்த மான தாயின் வம்சமும், தந்தையின் வம்சமும், வாய்க்கப் பெற்ற நமது புத்திரன் எங்கே? வேசியின் கர்ப்பத்தி லுண்டான கந்நிகை எங்கே?" என்றாள். அரசன் சற்று ஆலோசனை செய்து, "தேவி! நான் என் சுபாவத்தில் பேசிய பேச் சல்ல; என் இருதயத்தில் யாரோ ஒருவ ரிருந்து இவ் வாறு பிரேரேபிக் கின்றார். மாதே! ஆகாயத்தி லிருந்தும் நரவாஹந தத்தனுக்கு முன் னேற்பட்டிருந்த மனைவி இந்தக் கந்நிகை தான் என்று யாரோ கூறக் கேட்கின்றேன். இந்தக் களிங்க ஸேனை வேசி யல்ல. ஒருவனுக்கே மனைவி யாக விருப்பவள். நல்ல வம்சத்தி லுதித்தவள். முன்னூற் செய்த கர்ம வசத்தால் இவளுக்கு வேசி யென்னும் வசைச் சொல் உண்டாயிற்று; மற்றப்படி வேறு வித்தியாச மில்லை" என்று கூறினான்.

உடனே யௌகந்தராயணன், உதயநனை நோக்கி, "தேவ! கேட்க வேண்டும்; மன்மதன் இறந்த பிறகு சிவனைக் குறித்து ரதி தேவி தவம் புரிந்தாள். சிவன் அவள் தவத்திற் குகந்து பிரத்தி யக்ஷமாக வந்து, "மண் ணுலகத்தில், சரீரத்தோடு பிறந்திருக்கும் உன் கணவனுடன், மானிடத் தன்மையை யடையும் உனக்கு ஸம்பந்தம் உண்டாகும்" என்று வர மளித்து மறைந்தனர். தங்

களுடைய குமாரன் நரவாஹந தத்தன் மன்மத னுடைய அவ தார மென்று முன்னரே தேவ வாக் குண்டாயிருக்கிற தன்றோ? அந்தப் பரம சிவ னுடைய ஆஞ்ஞைப்படி ரதி தேவி மானிட ஸ்திரீயாகப் பிறக்க வேண்டும். இஃதிவ் வாறிருக்க, களிங்க ஸேனையைப் பாது காத்து வந்த சேடிமார்களும் சென்ற சில நாட் களுக்கு முன் களிங்க ஸேனையின் கர்ப்பம் இந் நாள் இருந்ததை விட வேறு வித மாக மாறியிருக்கின்ற தென்று என்னிடம் இரக சியமாகக் கூறிப்போயினர். அல்லாமலும், தங்களுக்கும் மநத்தில் இதற் கொத்த தோற்ற முண்டாயிருக்கின்றது. தேவர்களுடைய மாயையால் ரதி தேவி யோநி சம்பந்த மின்றி உண்டாயிருக்க வேண்டு மென்று கருதுகின்றேன். அந்தப் பெண் மன்மத அவ தார மாகிய தங்களுடைய புத்திரனுக்கு மனைவி யாகலாம். இதற்கு அநுகுண மான யக்ஷ னுடைய கதை யொன் றிருக்கின்றது. கூறுகின்றேன் கேளுங்கள்.

விருபாக்ஷன் என்னு மொரு யக்ஷ னிருந்தான். அவன் குபேர னுடைய சேவக னாகி யிருந்தான். ஆனால் அவன் நிதிகளைக் காக்கும் யக்ஷர்களுக்கு அதிபதியாக இருந்தான். இவன் ஒரு சமயம் மதுரைமா நகரத்திற்கு வெளிப் பக்கத்தி லிருக்கும் நிதி யைக் கற்றூண் போல் அசையாம லிருந்து காவல் புரியும்படி ஒரு யக்ஷனுக்கு ஆக்ஞை செய்திருந்தான். இப்படி யிருக்கையில், அந்த மதுரையி லிருக்கும் அந்தண னொருவன் அந்த நிதியைத் தேடிக் கொண்டு கையில் ஒரு விளக்கோடு அங்கே வந்தான். இவன் சிவ பக்தன். இவனுக்கு நிதிக ளிருக்கு மிட மெல்லாந் தெரியும். அவன் இவ் விடம் வரவே அவ னுடைய கைத் தீபம் தவறி விழுந்தது. அதனால் அவன் இங்கே நிதி யிருப்பது நிச்சய மெனத் தீர்மானித்துத் தன் னுடைய நண்பர்க ளாகிய சில வேதியர் களை யழைத்துக் கொண்டு அந்த இடத்தை வெட்டி நிதியை யெடுக்க முயற்சித்தான். அங்குக் காவல் புரிந்த யக்ஷன் அதைக் கண்டதும் விரைந் தோடி விருபாக்ஷ னிடம் தெரிவித்தான். விருபாக்ஷன் "யக்ஷ! விரைந்து செல்; சிறிதும் தாமதியாதே நிதியை யெடுக்க வந்திருக்கும் அவர்களைக் கொல்" என்று கோபத்

துடன் உத்தரவிட்டான். யக்ஷன் அவ்வாறே விரைந்து சென்று அந்த வேதியர்களை யெதிர்த்து எல்லோரையுங் கொன்ருன். இந்தச் செய்தி குபேரனுக்கு எட்டியது. குபேரன், கோபங் கொண்டு விரூபாக்ஷனை யழைத்து, "நீ யேன் விசாரியாமல் பிர்ம ஹத்தி செய்தாய்? பாவி! வறியோர் பேராசையால் எதைத் தான் செய்யார்கள்? அவர்களை யேதேனு முபாயத்தால் தடுக்க வேண்டு மல்லது வதை செய்வது கூடாது" என்று கூறி, "நீ பாபம் செய்த படியால், மானிட யோநியில் பிறக்கக் கடவாய்" எனச் சபித்தான்.

இவ் வாறு சாப மடைந்த விரூபாக்ஷன், புவியில் ஒரு பிராமணனுக்குப் புத்திரனுகப் பிறந்தான். அப்பால், அந்த விரூபாக்ஷனுடைய மனைவி குபேரனை நோக்கி, "தேவ! என் கணவனை எங்கே அனுப்பினீர்களோ, அங்கேயே என்னையு மனுப்பக் கோருகின்றேன். அநுக்ரகம் செய்ய வேண்டும். என் நாயகனை விட்டுப் பிரிந்து என் உயிர் நில்லாது" என்று வேண்டிக் கொண்டாள். கற் புடையவ ளாகிய அந்த யக்ஷ ஸ்த்ரீ இவ் வாறு கூறவே, குபேரன், குற்ற மற்ற மாதே! உன் கணவன் ஒரு வேதியன் வீட்டிற் பிறந்திருக்கின்ருன். அவ் வேதிய னுடைய வேலைக்காரி வீட்டில் யோநி சம்பந்த மில்லாமலே நீ பிறந்து, பின்னர் உன் கணவனை நீ யடையக் கடவாய்" என்று அநுக்ரகஞ் செய்து, "பெண்ணே! உன் கணவன் உன்னுல் சாப விமோசந மடைந்து என்னை யடைவான்" என்று மொழிந் தனுப்பினுன்.

இவ் வாறு, குபேரன் கட்டளை யிடவே, அந்தப் பதிவிரதை, அந்த வேதிய னுடைய வீட்டு வேலைக்காரியின் வீட்டு வாயிற்படியில் மாநிட கந்நிகை யாகப் போய் நின்ருள். இவ்வாறு அற்புத மாக வந்து நிற்கும் அந்தக் கந்நிகையைக் கண்ட அந்த வேலைக்காரி வியப் படைந்து, அவளை உடனே அழைத்துக் கொண்டு போய்த் தன் யஜமான னுகிய அந்தண னிடம் நிறுத்தினுள். அந்தணன் அவளைப் பார்த்ததும், "இவள் தேவ கந்நிகை யென்பதி லைய மில்லை. ஏதோ காரணங் கருதிப் பூமியில், யோநி ஸம்பந்த மில்லா மலே தோன்றி யிருக்கின்ருள். இவளைப் பார்த்ததும் என் மநத்

தில் இவ் வாறு தான் தீர்மான முண்டாகிறது; இவள் என் குமாரனுக் கேற்ற கந்நிகையே யாவள். தெய்வ சித்த மிவ்வா றிருக்கின்றது போலும், என்று கூறி முக மலர்ச்சியுடன் அக் கந்நிகையை நீ சுக மாக நம் வீட்டி லிருந்து வா!'' என்று கூறினர். வேலைக் காரியும் மகிழ்ச்சி யடைந்து அந்தக் கந்நிகையை அந்த அந்தணன் வீட்டில் விட்டுச் சென்றாள்.

அப்பால், அக் கந்நிகையும், அந்தணன் குமாரனும் மிகச் செல்வ மாக வளர்ந்து வந்தார்கள். விவாகத்திற் கேற்ற வயதினை யடைந்ததும் வேதியன் இருவருக்கும் மணஞ் செய்வித்து, இப் பொழுது அவ் விருவருக்கும் அவர்க ளுடைய ஜாதியைப் பற்றிய சிந்தனை யில்லாவிடினும், விரகம் நீங்கியவர்கள் போ லிருந்தனர். பின்னர், வெகு காலம் சென்றதன் மேல், அந்த யக்ஷனுக்கு அவன் மனைவியின் தபோ மகிமையால், பாப மொழிந்தது. அப்பால், இருவரும் தங்கள் ஸ்தானம் சென்றனர். இவ் வாறு, குற்ற மற்றவர் களாக விருக்கும் போதே தேவ ஸ்த்ரீகள் தெய்வ ஸங்கற்பத்தின் காரண மாக இந்த மண் ணுலகில் யோநி சம்பந்த மில்லாதவ ளாக அவதரிக்கின்றனள். ராஜனே! உம் முடைய வம்ச மென்ன? இவ ளுடைய வம்ச மென்ன? ஆகையால் உமது குமார னுக்கு இந்தக் களிங்க ஸேனையின் குமாரத்தி நீர் கூறிய படியே ஈசுவரனால் அநுக்ரகிக்கப்பட்ட மனைவி யாகின்றாள்'' என்று கூறினன்.

யௌகந்தராயணன் இவ் வாறு கூறவே, உதயநனும், அவன் மனைவி வாஸவ தத்தையும், அவ் விதமே செய்து விடுவ தெனத் தீர்மானித்தனர். அப்பால், யௌகந்தராயணன் தன் வீடு சென்றனன். வாஸவ தத்தையும், உதயநனும் அன்றைப் பொழுதைப் பலப் பல விளையாட்டுகளிற் கழிக்க லாயினர்.

மோகத்தினால் தன் நினைவை யிழந்த களிங்க ஸேனையின் குமாரத்தி, அப்பால் சில நாளைக் கெல்லாம் ரூப மென்னும் ஸம்பத்தோடு விர்த்தி யடைந்தாள். ஒப்புயர் வற்ற பெண்மணி யென விளங்கினள். அந்தப் பெண் மதந வேகனுக்குப் பிறந்ததன்

காரண மாகக் களிங்கஸேனையும் மற்றும் அங்குள்ளாரும் அப் பெண்ணுக்கு மதந மஞ்சுகை என்னும் திருநாமம் புனைந் தழைத் தனர். இந்த மதந மஞ்சுகை என்னும் பெண் அதிரூபவதியா யிருப்பதை யறிந்த வாஸவ தத்தை, ஒருநாள் தன் தாதியை யனுப்பி அவளைத் தன் மாளிகைக்கு அழைத்து வரும்படி செய் தாள். அப்பொழுது, அங்கிருந்த உதயநனும் அவன் மந்திரி யௌகந்தராயணனும் ரதிதேவியே இவ்வாறு மாநிட வடிவத் துடன் பிறந் திருக்கின்றனள் என்று கூறி வியந்தார்கள். அப்பால் வாஸவ தத்தை அந்த இடத்திற்குத் தன் புதல்வன் நரவாஹந தத்தனை வர வழைத்து நிறுத்தினாள். அவன், தாமரை ஓடை யானது ஆதித்த னுடைய வரவு கண்டு மலர்ந்து பிரகாசிப்பது போல் பிரகாசியாநின்ற அந்த மதந மஞ்சுகையின் முக கமலத்தை நோக்கினான். மதந மஞ்சுகையும் பெண் சகோர மானது சந்திரனைக் கண்டு மகிழ்வது போல் நேத்திராநந்த மாக விளங்கும் நரவாஹந தத்தனைக் கண்டு கண்ட கண்களை வாங்காமல் நின்றாள். பின் சிறிது நேரத்திற் கெல்லாம் யாவரும் அவ்விடம் விட்டுப் பிரிந்தனர். இவ்வாறு சந்திப்பு நேர்ந்த அன்றையத்திந முதல், இருவரும் நேத்ர பாசங்களாற் கட் டுண்டவர்க ளாகி, கணப் பொழுதும் ஒருவரை யொருவர் விட்டுப் பிரிந் திருக்க மநமில்லாத வர்க ளாயினர்.

அப்பால் சின்னாட் கழிந்ததும், உதயநன் தேவர்களால் ஏற்பட்ட இந்த ஸம்பந்தத்தை முடிப்பதில் தீர்மானங் கொண்டான். இதை யறிந்த களிங்க ஸேனை பரம சந்தோஷ மடைந்து, நரவாஹந தத்தனிடம் மாப்பிள்ளை யென்னும் வாஞ்சை வைத்து, அவனிடம் அன்பு பாராட்ட லானாள். இந்த இரகசியம் நகர மெங்கும் பரவி இவ் விவாகம் சாலப் பொருத்த மான தென் றுவந்தனர். பிறகு உதயநன் தன் மந்திரி யௌகந்தராயண னோடு ஆலோஜித்து, நரவாஹந தத்தனுக்கு ஒரு தனி வீடு அமைக்கும்படி ஆக்ஞாபித்தான். அவ்வாறே ஒரு திவ்ய கிருகம் அமைக்கப்பட்டது. அரசன், சிறந்த குணங்களை யுடைய தன் குமாரனுக்கு நல்ல நாளில், நல்ல வேளையில், தேச தேச மன்னர்

களை யெல்லாம் வர வழைத்து யௌவ ராஜ்ய பட்டாபிஷேகம் செய்வித்தான். அப்பொழுது நரவாஹந தத்த னுடைய சிரஸில் பெற்ருேரின் ஆநந்தக் கண்ணீர் மாரி யாகப் பொழிந்தது. பின்னர், வேதாகம மந்திர முழக்கத்துடன் புண்ய தீர்த்தங்களி லிருந்து கொண்டு வந்த தீர்த்தம் அபிஷேகஞ் செய்விக்கப்பட்டது. அபிஷேக தீர்த்தத்தினுல் நரவாஹந தத்த னுடைய முக கமலம் நிர்மலமானதும் திசைகளும் நிர்மல மாயின. ஆச்சரியம்!

அன்னை முதலியோர் மங்கள கீதங்களோடு குமாரன் மீது மலர் மாரி பொழிந்தனர். இதே சமயத்தில் தேவர்களும் ஆகா யத்தி லிருந்து அலர் மாரி பொழிந்தனர். தேவ துந்துபி வாத்தியங்களில் அருமை கொண்டதற் கொப்ப, ஆகாயத்தில் ஆநந்த வாத்ய சப்த மானது எதிரொலி யிடும்படி முழங்கிற்று. மன்னர் மன்னரும், மண்டலீகரும் இவ் வாறு திவ்ய அபிஷேகம் செய்து கொண்ட அவ் வரசிளங் குமரனுக்கு வந்தநம் செய்து வாழ்த்துக் கூறி விடை பெற்றுச் சென்றனர்.

அப்பால் உதயநன் தன் புத்திரனுக்கு அவ னுடைய பால ஸ்நேகிதர்க ளாகிய யௌகந்தராயண னுடைய புத்திரன் மருபூதிகனை மந்திரியாகவும், ருமன்வா னுடைய புதல்வனுகிய ஹரிசிகனை ஸேநாபதியாகவும், வஸந்தன் மைந்த னுகிய தபந்தகனை விளையாட்டுத் தோழனுகவும், இத்யக னுடைய குமார னுகிய கோமுகனைத் துவார பாலக னுகவும், தன் புரோகித னுடைய பிராதாவின் குமாரர்களும், பிங்கலையின் பிள்ளைகளும் முன்னுல் கூறப்பட்டவர்களுமாகிய வைச்வாநரன் சாந்தி ஸோமன் என்னும் இருவரையும் புரோஹிதர்க ளாகவும் ஏற்படுத்தினுன்.

இவ்வாறு, அரசன் கட்டளை யிட்ட சமயம் ஆகாயத்தினின்று மலர் மாரி பொழிந்தது. அக்கணமே, "இந்த நரவாஹந தத்தனுக்கு இவன் மந்திரிகள் காரியங்க ளெல்லாவற்றையும் கூட்டி வைப்பார்கள். கோமுகன் என்பவன் இவ னுடைய உடலை விட வேறுபடாத உயிர் போன்றவ னுகவே யிருப்பான்" என்னும் தேவ வாக் குண்டாயிற்று. இதைக் கேட்ட உதயநன் மகிழ்ச்சி

யடைந்து, ஏழைகளுக்கும் பிராமணர்களுக்கும், வஸ்திரங்களும் ஆபரணங்களும் ஸம்மாநம் செய்தான். இதனால் அந் நகரத்தில் தரித்திரம் என்னும் சப்தமே நின்று விட்டது. வாயுவினால் பிரகாசிப்பனவும், அசைவனவு மாகிய கொடிகள் சாரணர் களையும் நர்த்தந ஸ்த்ரீகளையும் வா வென்று கூறி வர வேற்பன போல் விளங்க எங்கும் நாற்றப்பட்டன. மதந மஞ்சுகைக்கு மணவாளனாகப் போகும் அரசிளம் புதல்வ னுடைய விவாக மகோற்சவத்திற்கு வந்து கூடும் வித்தியாதார்களைச் சேர்ந்த லக்ஷ்மியே பிரத்தியட்சமானது போல் விளங்கிற்று அந் நகரம்.

இவ் வாறாக, நகர முழுதும் உற்சவம் கொண்டாடப் படும் பொழுது நரவாஹந தத்தன் வெற்றியைக் குறிக்கும் யானையின் மீது ஏறிக் கொண்டு புறப்பட்டான். அப் பொழுது, அந் நகரத்து ஸ்த்ரீகள் எல்லோரும் அவ ரவர் வீட்டு உப்பரிகை களிலும், சாலர வாயில்களிலும், நின்று கொண்டு பத்மம் போன்ற கரங் களைக் குவித்து அஞ்சலி செய்து கொண்டு கருத்ததும், வெளுத்த தும், சிவந்ததுமான கண்களை இராஜ குமாரன் மீது செலுத்தினர். வந்தி மாகதர்க ளெல்லோரும் மங்கள கீதம் பாடி மலர் மாரி தூவினர். வாத்தியங்கள் முழங்கின. இவ் வாறான, வைபவத்து டன் அரச குமாரன் தன் மந்திரிகளுட னும், மற்றும் தன் னுடைய நண்பர்களுட னும் மாளிகைக் கேகினன்.

அப்பால் அன் றிரவு களிங்க ஸேனை தன் பெண்ணின் விவா கத்தைப் பற்றி வெகு நேரம் ஆலோசித்துக் கொண் டிருந்து பிறகு ஸோமப் பிரபை யாகிய தன் தோழியை நினைத்தாள். நினைத்ததை யறிந்து கொண்ட ஞாநி யாகிய நளகூபரன் தன் மனைவி ஸோம ப்ரபையை நோக்கி, "பிரியே! களிங்க ஸேனை இப்போ துன்னை நினைக்கின்றாள். அவள் தன் பெண் ணுக்கு ஒரு உய்யாந வநத்தை உண்டாக்க வேண்டு மென்ற எண்ணத்தோடு உன்னை நினைக் கின்றாள்" என்று கூறி, நடந்தது நடக்கப் போவது எல்லா வற்றையும் தெரிவித்துத் தன் மனைவியை யனுப்பினான். ஸோமப் பிரபை சந்தோஷ மாகக் கணவ னிட மிருந்து விடை பெற்றுக் கொண்டு களிங்க ஸேனையி னிடம் வந்தாள். களிங்க ஸேனை

அவளைக் கண்டதும், பே ருவகையோடு இரு கரங்களாலும் ஆலிங்கநம் செய்து கொண்டு ஷேமம் விசாரித்தாள். ஸோமப் பிரபை, "அன் புள்ளவளே! நீ சௌக்கியமா? உன்னை மிகுந்த ஐசுவரிய முடைய வித்தியாதரன் விவாகம் செய்து கொண்ட உடனே பரம சிவ னுடைய அநுக்ரகத்தால் ரதி தேவி யுனக்கும் புதல்வி யாயினள். இந்தப் புத்திரி முன்னரே, நரவாஹந தத்தனுக்கு மனைவி யாக நிச்சயிக்கப் பட்டவள். அந்த நரவாஹந தத்தன் தேக பலம் உள்ள வரையில் வித்யாதர ராஜ்யத்தை யாளப் போகின்றான். உன் னுடைய புதல்வியே நரவாஹந தத்தனுக்கு மனைவி யாகப் போகும் வேறு அப்ஸர ஸ்த்ரீகளிலும் மேலானவ ளாக இருக்கப் போகின்றாள்; நீயும் ஒரு அப்ஸர ஸ்த்ரீ தான். இந்திர னுடைய சாபத்தால் இம் மண் ணுலகுக்கு ஒரு மானிட ஸ்த்ரீயாக வந்தாய். முடிய வேண்டிய காரியங்க ளெல்லாம் முடிந்த பிறகு, உனக்குச் சாப விமோசந முண்டாகும். தோழி! நடந்தது, நடக்கப் போவது, நடப்பது மூன்றையும் எங் கிருந்தாலும் தெரிந் துரைக்க வல்ல என் கொழுநன் இவற்றை யெல்லாம் நான் புறப்படும் சமயத்தில் எனக்குக் கூறினார். ஆகையால் நீ சிறிதும் அஞ்ச வேண்டாம்; உனக்கு இனி நன்மையே யுண்டாகும். நீ நினைத்தபடி உன் பெண்ணுக்கு ஒரு உய்யாந வநத்தை யுண்டாக்கவே நா னிங் கேகினேன். அந்த உய்யாந வநம் தேவர்களுக்கும் கிடைத்தற் கரிய தாகும். அம் மாதிரியான உய்யாந வநம் ஸொர்க்க லோகத்திலும் காண்ப தரிது. பாதாள லோகத்திலும் காண்ப தரிது. அங்ஙன மாயின் பூ லோ கத்தைக் குறித்து நான் சொல்ல வேண்டுமோ?" என்று கூறி, அக் கணமே தன் மாயா சக்தியால் ஓர் உய்யாந வநத்தை உண்டாக்கி விட்டு விடை பெற்றுச் சென்றாள்.

மறு நாட் பொழுது விடிந்தது. அந்த உய்யாந வநத்தைக் கண்டார் எவரும் இந்த வநம் ஸொர்க்கத்தி னின்று இங்கு வந்ததோ வென்று எண்ணி வியந்தனர். உதயநன், அவன் மனைவிமா ரிருவர், மந்திரிகள் யாவரும் அந்த உய்யாந வநத் திற்கு வந்து சேர்ந்தனர். நரவாஹந தத்தனும் தன் பரிவாரங்க

ளோடு அங்கு வந்தான். சதா காலமும் பலன்களையும் மலர்களை யும் கொடுக்கத் தக்க மரங்கள் அந்த உய்யாந வந மெங்கும் நிறைந் திருந்தன. பல வகை யான ரத்தந ஸ்தம்பங்க ளுடன் கூடிய மண்டபங்களும் ஆங் காங்கு காணப்பட்டன. தாமரை, அல்லி முதலியன வடர்ந்த தடாகங்களும் பல விருந்தன. ஸ்வர்ண நிற மான பறவைகளும் மரங்களில் கல கல வென்று சத்த மிட்டுக் கொண்டு விளையாடிக் கொண் டிருந்தன. தேவர்களுக் குரிய வாசனை பொருந்திய காற்று வீசிக் கொண் டிருந்தது. பல சொல்வானேன்! தேவர்க ளுடைய கட்டளையால் இந்தப் புவிக் கண் தோன்றிய மற் றொரு ஸொர்க்கம் போல் விளங்கிற்று. இந்தத் திவ்ய வநத்தைக் கண் ணுற்ற உதயநன் வியந்து களிங்க ஸேனையை நோக்கி, "இவ் வநம் எப்படி வந்தது? என்று கேட்டான். களிங்க ஸேனை எல்லோருக்குங் கேட்க, "அரசனே விசுவ கர்மாவின் அவதார மாகிய மயன் என்னும் ஓர் அசுர னிருக்கின்றான். அவன் தர்ம புத்திரருக்கும், இந்திரனுக்கும், அழகிய நகரத்தை யுண்டாக்கித் தந்தவன். அவ் வஸுர னுடைய பெண் ஸோமப்ரபை என்பவள். அவள் எனக்குத் தோழி. அவள் இரவில் இங்கு என் சமீபம் வந்து அன்பினால் என் குமாரிக்காகத் தன் மாயையால் இந்த உத்யாநத்தை சிருஷ்டித் தனள்." என் றுரைத்து, அந்த ஸகி கூறிய, நடந்தது நடக்கப் போகிறது முதலான வரலாற்றையும், அவள் தெரிவித்ததாக எல்லாவற்றையும் கூறினாள்.

பிறகு களிங்க ஸேனையின் சொல்லைக் கவனித்து ஸந்தேஹம் நீங்கியவர்க ளாகி யாவரும் நிக ரற்ற ஸந்தோஷத்தை யடைந்தார் கள். அரசன் அதே உத்யாநத்தில், மனைவி, மைந்தன் முதலியவர்களுடன் களிங்க ஸேனை செய்த விருந்தினால் அந்த நாளைக் கழித்தான்.

மறு நாள் அவ் வரசன் தேவாலயத்தில் ஈசனைத் தெரிசிக்கச் சென்றான். அங்குச் சிறந்த ஆடை யாபரணங்களை அணிந்த வெகு ஸ்த்ரீகளைக் கண்டான். "நீங்கள் யார்?" என்று வினவினான். அதற்கு, அந்த ஸ்த்ரீகள், "நாங்கள் வித்தை

களும், கலைகளு மாகியவர்கள். உம்முடைய புத்ரனை உத்தேசித்து வந்திருக்கின்றோம். உம்முடைய புத்ரனுடைய மநதில் பிரவேசிக்கின்றோம்'' என் றுரைத்து மறைந்தார்கள். வத்ஸ ராஜனும் ஆச்சரிய மடைந்து கிருஹம் சென்றான். வாஸவ தத்தை யிடத்திலும், மந்த்ரிக ளிடத்திலும் இந்த வரலாற்றைத் தெரிவித்தான். அவர்களும் இவ் வாறு ஏற்பட்ட தேவாநுக்ரஹத்தைப் பற்றிச் சந்தோஷித்தார்கள்.

பின் ராஜாவின் உத்திரவினால் வாஸவ தத்தை நரவாஹந தத்தன் கிருஹம் வந்தவுடன் வீணையை எடுத்துக் காநம் செய்தாள். ராஜ குமாரன் வணக்கத்துடன், "ஓ அம்மா! இந்த வீணை ஸ்தாநத்தை விட்டு நழுவி விட்டது'' என்றான். உடனே தகப்பன், "குமார! நீ இந்த வீணையைக் கிரஹித்துக் காநம் செய்'' என்றான். ராஜ குமாரன் கந்தர்வர்களும் ஆச்சரியப் படும்படி வீணா காநம் செய்தான். இவ் வாறு, தகப்பனால் வித்தைகளிலும், கலைகளிலும் பரீக்ஷிக்கப்பட்டான். அந்த வித்தைகளாலும், கலைகளாலும், சூழ்ந்த ராஜ குமாரன் எல்லா வற்றையு மறிந்தான். குணங்க ளுடைய அந்தக் குமாரனைப் பார்த்த வத்ஸ ராஜன் களிங்க ஸேனையின் குமாரி யாகிய மதந மஞ்சுகைக்கு நர்த்தந வித்தையைக் கற்பித்தான். மதந மஞ்சுகை கலைகள் நிறைந்த சந்த்ர ரேகை போல் கலைகள் நிறைந்தவளாயினள். அப் பொழுது, நரவாஹந தத்தனாகிய ஸமுத்ரம் கலங்கிற்று. காநம் செய்பவளும், நர்த்தநம் செய்பவளும் அங்கம் முதலிய அபிநயங்களோடு கூடியவளும், பேசும் காமனுடைய ஆக்ஞையைப் போன்றவளு மாகிய மதந மஞ்சுகையைப் பார்த்த ராஜ குமாரன் ஸந்தோஷித்தான். மதந மஞ்சுகையும் அமுத மயனும் மநோஞ்ஞனு மாகிய ராஜ குமாரனை க்ஷணப் பொழுது பாராவிடில், காலையில் ஜலத்தால் நனைந்ததும் அமுத மயமு மாகிய சந்தரனைக் காணாதது மான ஆம்பலோடை போல் கண்ணீர் பெருக்கித் துக்க மடைவாள். இந்த ராஜ குமாரனும், மதந மஞ்சுகையின் முகத்தைப் பாராம லிருக்க முடியாமல், எப் பொழுதும் அந்த உத்யாநத் தோட்டம் செல்வான். களிங்க

ஸேனை மதந மஞ்சுகையை அன்புடன் ராஜ குமாரன் பக்கம்
வர வழைத்து ஸந்தோஷப்படுத்துவாள். ரஞ்ஜித்து இவ் விதம்
அங்கு இருப்பான். கோமுகனும் பிரபு வாகிய நரவாஹந தத்த
னுடைய மநதை அறிந்து, இவர் இங்கு கால தாமத மாக இருப்
பதை விரும்பிக் களிங்க ஸேனைக்கு ஏதேனும் ஒரு கதையைச்
சொல்வான். ராஜ குமாரன் தன் னுடைய மநதை கோமுகன்
அறிந்ததால் சந்தோஷித்தான். மநதில் பிரவேசிக்கும்படி செய்
வது பிரபுவுக்கு முக்ய மாக வசப்படுத்தும் உபாய மாகும்.
உத்யாநத் தோட்டத்தி லிருக்கும் ஸங்கித சாலையில் மதந
மஞ்சுகையை இந்த ராஜ குமாரனும் நர்த்தநம் முதலானவை
களுக்குத் தகுதி யுள்ளவ ளாகச் செய்தான். பிரியை யாகிய இவள்
நர்த்தநம் செய்யும் பொழுது, சாரணர்களை வெட்கப்படும்படி
செய்து ராஜ குமாரன் யாவற்றையும் வாசித்தான். யானை,
குதிரை, தேர், ஆயுதம், பாணம், சித்ரம், இவை முதலியவை
களில் ஸமர்த்த னாகிய ராஜ குமாரன் திசைகளி ளின்று வந்த பல
வித பண்டிதர்களை ஜயித்தான். இவ் விதம் வித்தைகளால்
ஸ்வயம்வரத்தில் மாலையிடப்பட்டு விளையாடி வரும் நரவாஹந
தத்தனுக்குச், சிறு வயதில் சில நாட் சென்றன. ஒரு சமயம்
ராஜ குமாரன் மந்த்ரிகளுடன் யாத்ரை செல்லும் பொழுது
பிரியையுடன் நாக வநம் என்னும் உத்யாநம் சென்றான். அவ்
விடத்தில் ஓர் வர்த்தக னுடைய மனைவி விருப்பங் கொள்ளக்,
கோமுகன் நிராகரித்தான். அதற்கு அவள் விஷங் கலந்த
பாநகத்தைக் கிரஹித்துக் கொண்டு கோமுகனைக் கொல்ல வந்தாள்.
இதைக் கோமுகன் அவ ளுடைய ஸகியின் மூல மாக அறிந்தான்.
அதனால் அந்தப் பாநகத்தைக் கிரஹிக்க வில்லை.

பின் வரு மாறு ஸ்த்ரீகளை நிந்திக்க லானான் :—
"ஆச்சரியம்! பிரம தேவர் முதலாவது ஸாஹஸத்தை ஸ்ருஷ்டித்
தார். பிறகு அதை யநுசரித்து ஸ்த்ரீகளை ஸ்ருஷ்டித்தார்.
ஸ்த்ரீகளுக்கு ஸ்வபாவ மாகச் செய்யக் கூடாதது எதுவு மில்லை.
ஸ்த்ரீ யென்பவள் அமுதத்தாலும், விஷத்தாலும், ஸ்ருஷ்டிக்கப்
பட்டவள் என்பது நிச்சயம். ஆவல் கொண்டா ளானால்

அமுதத்தை அநுஸரிப்பாள். ஆவ லற்றவளானால் விஷத்தையே அநுஸரிப்பாள். மறைந்திருக்கும் பாதகங்களை யுடையவளும் மநோஞ்ஞ மான முக முடையவளு மாகிய கெட்ட ஸ்த்ரீயை மலர்ந்த தாமரை மலர்க ளுடையதும் மறைந்த முதலைக ளுடையது மாகிய தாமரை ஓடையைப் போல் எவன் அறிவான்? ஒரு ஸ்த்ரீ குணங்களால் ஏவப்பட்டு ஸூர்ய னுடைய நிர்மலமான காந்தி போல் கணவ னுடைய புகழ்ச்சியைப் பொறுத்து ஸ்வர்க்கத்தினின்று வருகிறாள். பாவி யாகிய மற்றொரு ஸ்த்ரீ பிறர்களிடம் ஆவல் கொண்டு கணவ னிடம் ஆவ லில்லாதவ ளாகி, மற்றவர்களைக் கிரஹித்துக் கணவ னிடம் அன்பில்லாமை யாகிய விஷத்தைத் தரித்த பெண் பாம்பு போல் பதியை விரைவில் கொல்கிறாள்.

"அவ் விதமே ஓர் கிராமத்தில் சத்ருக்நன் என்று ஓர் புருஷ னிருந்தான். அவனுக்கு மனைவி ஒருத்தி இருந்தாள். அவள் வியபிசாரிணி. சத்ருக்நன் ஒரு ஸமயம் மாலையில் தன் மனைவி ஒரு ஜார புருஷ னுடன் சேர்ந்திருக்கக் கண்டனன். கிருஹத்திற்குள் ளிருக்கும் அந்த ஜாரனை கத்தியால் வெட்டினான். இரவை அபேக்ஷித்து அந்த மனைவியை வெளி வராமல் தடை செய்து வாசற்படியிலேயே நின்றான். அந்த ஸமயம் ஓர் வழிப் போக்கன் தங்குவதற்கு அங்கு வந்தான். சத்ருக்நன் இவனுக்கு இடம் கொடுத்து யுக்தி யாக அந்த வழிப் போக்க னுடன் உயிர் துறந்த ஜாரனை எடுத்துக் கொண்டு இரவில் வநம் சென்றான். அங்கு அந்தப் பிரேதத்தைப் பாழுங் கிணற்றில் தள்ளினான். அவ னுடைய மனைவியும் பின் தொடர்ந்தே வந்து அதே கிணற்றில் தன் புருஷனையும் தள்ளினாள்."

"இவ்வாறு கெட்ட ஸ்திரீ எந்த எந்த ஸாஹஸத்தைத் தான் செய்யமாட்டாள்" என்று கோமுகன் சிறுவ னாயினும் ஸ்திரீகளின் நடத்தையைப் பற்றி நிந்தனை செய்தான்.

பிறகு நரவாஹந தத்தன் நாக வநத்தில் நாகங்களைப் பூஜித்துப் பரிவாரங்களுடன் தன் னிருப்பிடம் சென்றான்.

மறு நாள் குமாரன் தெரிந்தவ னாயினும், தெரிந்து கொள்ள விருகாண்டு, கோமுகன் முதலான மந்திரிகளைப் பார்த்து, ராஜன் கருத்தைக் கேட்டான். மந்திரிகள், "ஓ ராஜகுமாரா! நீ எவற்றையும் அறிந்தவர் ஆயினும், எங்களைக் கேட்ட படியால் சொல்லுகிறோம்" என்றுரைத்து, ஒருவருக் கொருவர் ஆலோசித்து ஸாரத்தை நிச்சயித்துச் சொல்லுகிறார்கள்.

"அரசன் ாவது, ஸ்வாதீநப் படுத்திய குதிரைகளின் மீது ஏறிக் கொ மநதுக்குள் ளிருக்கும் காமம் கோபம் முத லிய சத்ருக்களை ஜயித்து, மநதையே முதலாவது ஜயிக்க வேண்டும். மற் உள்ள சத்துருக்களை ஜயிப்பதற்கு இதுவே முக்ய மானது. த ஜயிக்காத பரவச னாகியவன் பிறனை எவ்விதம் வசப்படுவான்? பிறகு தேசத்தில் பிறந்த தன்மை முதலிய குணங்களு கூடிய மந்திரிகளையும், தவமுடையவனும், அதர்வண மறிந்தவும், ஸமர்த்தனு மாகிய புரோகிதனையும், ஏற் படுத்திக் கொள்ள வேண்டும். பயத்திலும், லோபத்திலும், தர்மத்திலும், காமிலும், கபடங்களால் யோக்கியங்க ளான காரியங்களில் பரீக்ஷிப்பட்ட மந்திரிகளை, அவர்களின் அந்த ரங்க மறிந்து ஏற்படுத்தி காள்ள வேண்டும். அவர்கள் காரியங்களில் பேசும் பொழுது ர்களின் வார்த்தை ஸத்யமா? த்வேஷத் தைப் பற்றியதா? ஸ்நேகத்தால் கூறியதா? தன் பிரயோ ஜநத்தை யுத்தேசித்துப் பேசியதா? — என்று ரகசிய மாகப் பரீக்ஷை செய்ய ண்டும். ஸத்யமா யிருந்தால், சந்தோ ஷிக்க வேண்டும். அஸத்யமா யிருந்தால், தகுதி யான சிக்ஷையைச் செய்ய வேண்டும். மந்திரிகளின் நடத்தையைச் சாரர்களைக் கொண்டு ப்பொழுதும் தெரிந்து கொள்ள வேண்டும். மறைபடாத அறிவுடன் கார்யங்களைக் கவனித்துச், சத்துருக்களை வே ரறுத்துப், பொருளைத் தேடி, ஸேனை முதலியவற்றையும் சேகரித்து, ராஜ்யம் லை கொள்ளும் தன்மையை ஸாதிக்க வேண்டும். உற்சாகம், பிரபுத் தன்மை, மந்த்ரம் இந்த மூன்று சக்திகளுடன் கூடிய வருகித், தனக்கும், சத்ருவுக்கும், உள்ள தார தம்மியத்தை விசாரித்துச், சத்ரு தேசத்தை ஜயிக்க விருப்ப

முள்ளவ னாக வேண்டும். ஆப்தர்களும் சாஸ்த்ர மறிந்தவர்களும், பிராக்ஞர்களு மாகிய மந்திரிகளுடன் சுருக்க மாக மந்த்ராலோசனை செய்ய வேண்டும். அவர்கள் நிச்சயித்த விஷயத்தைத் தன் புத்தியால் நன்று சோதிக்க வேண்டும். ஸாமம், தானம் முதலிய உபாயங்களை அறிந்து யோக க்ஷேமத்தைத் தேட வேண்டும். சேர்க்கை, சண்டை முதலிய (ஆறு) குணங்களை உபயோகிக்க வேண்டும். இவ் விதம் ... ம்ப லின்றித் தன் தேசத்திற்கும், பிறர் தேசத்திற்கும், ... ரிப்பானே யானால் அந்த அரசன் ஜயத்தையே யடைவான். மற்றவர்களால் எப்பொழுதும் அவமதிப்பை யடையான். ... மத்தாலும், லோபத்தாலும், குருட னாகிய அறி வில்லாதன், வீண் வழியைக் காட்டும் கெட்ட ஸேவகர்களால், படு ழியில் தள்ளப்பட்டு மோசம் போகிறான். பயிர்ச் செலவு செய் வர்களால் ஸேவிக்கப்படும் சம்பா வய லுடையது போல், கெட்ட ஸேவகர்களால் ஸேவிக்கப்படும் அரச னுடைய அருகில் மற்றவன் செல்ல அவகாச மடையான். கெட்ட ஸேவகர்கள் ரகஸ்ய மான விஷயங்களில், அந்தரங்க மாக இருந்து, அரசனை வசப்படுத்துகிறார்கள். ஆகையால், லக்ஷ்மியானவள் விசேஷம் அறியாத அரசனிடம் வருத்த மடைந்து, இவனை விட்டு விலகி விடுகிறாள். ஆகையால், அரசன் மனதை ஜயித்து, விசேஷங்களை அறிந்து, உசித மான சிக்ஷையைச் செய்து பரிபாலிக்க வேண்டும். பிரஜைக ளிடம் அன்பு பாராட்டுவதால் தான் அரசன் பொருளுக்கு பாத்ர மாகின்றான்.

"முன் சூரஸேநன் என்றொரு அரசன் இருந்தான். அவன் ஸேவகர்க ளிடம் முக்ய மான நம்பிக்கை யுடையவன். மந்திரிகள், கூட்டம் போட்டுக் கொண்டு அரசனை வசப்படுத்தி ஸுகங்களை அடைந்தார்கள். அந்த மந்திரிகள் அரச னுடைய ஸேவகனுக்கு, அரசன் ஏதேனும் கொடுக்க விரும்பினாலும், ஓர் திருணத்தை யேனும், கொடுக்கச் சம்மதிப்ப தில்லை. இந்த மந்திரிகளின் ஸேவகன், அயோக்ய னாயினும், அவனுக்குத் தாங்களே அரசனிடம் தெரிவித்து, ஏராள மாகக் கொடுக்கும்படி செய்வார்கள். அந்தச் சூரஸேந ராஜன் இதைப் பார்த்து, மெது வாக "அயோக்யர்

களின் கூட்டம்'' என்றறிந்து, தன் அறிவாலும், யுக்தியாலும், மந்திரிகளை ஒருவருக் கொருவர் பேதப்படுத்தினன். பேத மடைந்தவர்களும், கோட் சொல்லுகிறவர்களு மாகிய மந்திரிகள், ஒருவருக் கொருவர் அழிந்தார்கள். பிறகு அந்தச் சூரஸேந ராஜன் பிறரால் மோசம் போகாமல், ராஜ்யத்தை நன்று பரிபாலித்தான்.''

"ஹரிஸிம்ஹன் என்னோர் (சாமாநய) அரச னிருந்தான். அவன் நீதி மார்க்கத்தின் உண்மை யறிந்தவன். பக்தர்களும், வித்வான்களு மாகிய மந்திரிகளை யடைந்தவன். கோட்டைக ளுடையவன். நிதிக ளுடையவன். இவ் வரசன் பிரஜைகளை அன்புடன் பரிபாலித்து வந்தான். சக்ரவர்த்திகள் எதிர்த்தாலும் அவமதிப்பை யடைவ தில்லை. இவ் விதம் விசாரிப்பதும், கவலை யடைவதும், ராஜ்யத்தில் ஸார மானது. வேறு மிகுதி யாக ஸாரமாக உள்ளது எது?'' என்று, இவை முதலியவற்றைக் கோமுகன் முதலியவர்கள் உள்ளபடி தெரிவித்து மௌந மடைந்தார்கள். நரவாஹந தத்தன் இவர்களின் சொற்களை நம்பி, "புருஷன் செய்யக் கூடிய கார்யம் யோசிக்கத் தகுந்த தாயினும், தெய்வம் யோசனைக் கடங்காதது'' என்று கூறினன்.

பிறகு, அந்த மந்திரிக ளுடன் எழுந்து தாமத மானதால் ஆவலை யடைந்த பிரியையான, மதந மஞ்சுகையைப் பார்ப்பதற்குச் சென்றான். அவ ளுடைய கிருஹம் சென்று ஆசநத்தில் வீற்றிருக்கும் பொழுது, களிங்க ஸேனை அன்பு பாராட்டி, ஓர் க்ஷணப் பொழு தாச்சரிய மடைந்து, கோமுகனைப் பார்த்து சொல்லுகிறாள்:-

"ஓ மந்த்ரி! ராஜ குமார னாகிய நரவாஹந தத்தன் இங்கு வராம லிருக்கும் பொழுது, இவன் வழியைப் பார்ப்பதற்கு ஆவலுடன் மதந மஞ்சுகை உப்பரிகையின் மீது என்னுடன் ஏறினாள். ஏ கோமுக! அந்த ஸமயம் ஆகாயத்தினின்று ஓர் புருஷன் இறங்கினன். அவன் கிரீட மணிந்தவன். கத்தி யுடையவன். தேவ ரூப முடையவன். அவன் என்னைப் பார்த்து, "நான் மாநஸ வேகன் என்ற பெய ருடைய வித்யாதர ராஜன். நீ ஸுரபி தத்தை என்ற பெய ருடைய

அப்ஸர ஸ்த்ரீ. சாபத்தால் பூமியில் வந்தவள். உன் குமாரியும் தேவ ஸ்த்ரீ தான். இதை நான் நன்று அறிந்தவன். ஆகையால், உன் பெண்ணை எனக்குக் கொடு, இது உசித மான சம்பந்தம்” என்று கூறினான். இதைக் கேட்ட நான், நகைத்து, விரைவில், “என் குமாரிக்கு நரவாஹந தத்தன் கணவ னென்று தேவர்கள் நிச்சயித் திருக்கின்றார்கள். உங்க ளெல்லோருக்கும் இந்த ராஜ குமாரன் சக்ரவர்த்தி யாகப் போகிறான்” என்று பதில் கூறினேன். உடனே அந்த வித்யாதரன் கிளம்பி ஆகாயத்தில் சென்றான். அவன் என் பெண் ணுடைய கண்களுக்கு, “நடுக் கத்தைக் கொடுக்கும் அகாரண மாக உண்டான மின்னல் கொடி போல் தோன்றினான்” என்றாள்.

கோமுகன் கேட்டு, “ஓ கலிங்க ஸேனே! எங்கள் ராஜா வாகிய நரவாஹந தத்தன் பிறந்த வுடன் ‘வித்யாதரர்களுக்கு சக்ரவர்த்தி யாகப் போகிறான்’ என்று ஆகாய வாணி உரைத் ததை அறிந்து, வித்யாதரர்கள் உடனே இந்த ராஜ குமார னுக்குக் கெடுதி செய்ய நினைத்தார்கள். மரியாதை கெட்டவன், வலிமை யுள்ள பிரபு சிக்ஷிப்பவ னாக வருவா னாகில் விரும்புவானா? உடனே பரமசிவன் தன் னுடைய பிரமத கணங்களை அனுப்பி, இந்த ராஜ குமாரனைக் காப்பாற்றினார். இவ் விதம், இந்த வர லாற்றை நாரத முனிவர் என் தகப்ப னிடம் தெரிவிக்க, நான் என் தந்தையிடம் கேட்டேன். ஆகையால், வித்யாதரர்கள் இப் பொழுது நமக்கு விரோதிகள்” என்று கூறினான்.

கலிங்க ஸேனை கேட்டுத் தன் வரலாற்றை நினைத்துப் பயத்தால், “கோமுக! என்னைப் போல், கபட மாக ராஜ குமாரன் மதந மஞ்சுகையை மோசம் செய்து விடுவானா? என் இன்னும் விவாகம் செய்து கொள்ள வில்லை” என் றுரைத்தாள்.

கோமுகன் முதலியவர்கள் கேட்டு, “கலிங்க ஸேனே! இந்தக் காரியத்தில் நீயே உதயந ராஜனுக்குப் பிரேரணை

செய்ய வேண்டும்'' என்றார்கள். பிறகு நரவாஹந தத்தன் அன்றையத் திநம் அந்த உத்யாநத்தில், மதந மஞ்சுகை யிடம் செலுத்திய புத்தி யுடன், அவளைப் பார்த்துக் கொண்டே விலாஸ மாக யிருந்தான். மலர்ந்த பத்மம் போன்ற முகம் உடையவளும், விரிந்த கரு நெய்தல் போன்ற கண்க ளுடையவளும். செம்பரத்தைப் பூப் போன்ற மநோஜ்ஞ மான உதடுக ளுடையவளும், மந்தாரப் பூக் கொத்துகள் போன்ற ஸ்தநங்க ளுடையவளும், நிலவாஹப் புஷ்பம் போன்ற ஸுகுமார மான சரீர முடையவளும், மன்மதனால் ஐந்து புஷ்ப மய மானதும், உலகங்களை ஜயிக்கும் ஸ்வபாவ முடையது மாக ஏற்படுத்திய, ஒரே பாணம் போன்றவளு மாகிய, மதந மஞ்ஜுகையைப் பார்த்துக் கொண்டே ஸஞ்சரித்தான். களிங்க ஸேனையும், மறு நாள் வத்ஸ ராஜ னிடம் சென்று, பெண் கலியாணத்தின் நிமித்த மாகத் தனது கோரிக்கையைத் தெரியப் படுத்திக் கொண்டாள். வத்ஸ ராஜனும், இவளை அனுப்பி விட்டுத், தன் மந்திரிகளை யழைத்து, வாஸவ தத்தை இருக்கும் பொழுது, "மந்திரிகளே! களிங்க ஸேனை பெண் கலியாணத்தை உத்தேசித்து அவஸரப்படுகிறாள். ஜநங்களோ, சிறந்தவ ளாகிய கலிங்க ஸேனையை வேசி யென்று சொல்லுகிறார்கள். நாம் என்ன செய்யலாம். ஜநங்களை எப் பொழுதும் எதிர் பார்க்க வேண்டும். முந்தி, ஜநங்களின் சொல்லால் தான் ஸ்ரீ ராமர் பரிசுத்தை யான ஸீதையையும் விட்டார். பீஷ்மாச்சாரியர் தன் ஸஹோதர னுக்காக முயற்சியுடன் அம்பையை அபஹரித்தும், அந்த அம்பை முந்தி வேறு கணவனை வரித் திருந்தமையால், தள்ளப்பட வில்லையா? இவ் விதமே, இந்தக் களிங்க ஸேனையை, நான் ஸ்யம்வரத்தில் வரித் திருக்கும் பொழுது, இவள் மதந வேகனை விவாகம் செய்து கொண்டாள். அதனால், ஜநங்கள் இவளை நிந்திக்கின்றனர். ஆகையால், இவ ளுடைய பெண் மதந மஞ்சுகையை நரவாஹந தத்தன் காந்தர்வ விதிப்படி, தானே, விவாஹம் செய்து கொள்ளட்டும்?' என்றான்.

உடனே யௌகந்தராயணன், "ஓ ப்ரபுவே! உசித மாக
லாத இந்தக் கார்யத்தைக் கலிங்க ஸேனை எவ் விதம் விரும்புவ
இவள் தேவ ஸ்த்ரீ. பெண்ணும் தேவ ஸ்த்ரீ. ஸாமாந்ய ப

இதை நான் நன்று அறிந்தேன். எனக்கு நண்பனாகிய அறிவுடைய பிரஹ்ம ராக்ஷஸனொருவன், இது விஷயங் கூறினான்'' என்று, இவை முதலியவற்றை அங்குள்ளவர்கள் ஒருவருக்கொருவர் யோசனை செய்து கொண்டிருந்தார்கள். இந்த ஸமயம் ஆகாயத்தினின்று சிவன் வாக்கொன்று உண்டாயிற்று. அதாவது—"என்னுடைய நேத்ராக்நியால் தகிக்கப்பட்ட மன்மதன், நரவாஹந தத்தனாகப் பிறந்திருக்கிறான். ரதி தேவி தவம் செய்ய, நான் ஸந்தோஷமடைந்து, இவனுக்கு மனைவியாகும்படி, மதந மஞ்சுகையாக, ரதியைப் பிறப்பித்திருக்கின்றேன். அந்தப்புர ஸ்த்ரீகளுக்குள் சிறந்தவளாகிய இவளுடன் கூடிய இந்த ராஜகுமாரன், தேவ கல்பம் வரையிலும் வித்யாதரச் சக்ரவர்த்தியாக இருக்கப் போகிறான். என்னநுக்கிரஹத்தால் சத்ருக்களை வெல்லப் போகிறான்'' என்றுரைத்து நின்றது.

வத்ஸ ராஜன் பரிவாரங்களுடன் ஈசனுடைய சொல்லைக் கேட்டுப் பரமசிவனை வணங்கி, ஆநந்தத்துடன் குமாரனுக்கு விவாஹம் செய்வதென்று நிச்சயித்தான். முந்தியே இந்த உண்மையை அறிந்த மந்திரி சிரேஷ்டனாகிய யௌகந்தராயணனைக் கொண்டாடி, ஜோஸ்யர்களை வரவழைத்துச் சுபமான பலனைக் கொடுக்கும் லக்நத்தைக் கேட்டான். அவர்கள் அரசனிடம் பெருமை பெற்றுச் சில நாட்களுக்குள் லக்நத்தைக் கூறினார்கள். இன்னமும், "ஓ ராஜனே! உம்முடைய குமாரன் இந்த மனைவியுடன் சிறிது காலம் வியோகத்தையடையப் போகிறான். இதை நாங்கள் எங்களுடைய சாஸ்த்ரத்தால் அறிந்தோம்'' என்றும் கூறினார்கள். பிறகு, அரசன் தன்னுடைய ஆளுகைக்குத் தகுதியாகக் குமாரனுக்கு விவாஹத்தைக் குறித்து வஸ்துக்களைச் சேகரித்தான். அந்த ஸாமக்ரிகளால், இவ்வரசனுடைய நகரம் மட்டிலும் கலக்கமடையவில்லை; பூமியே கலங்கிற்று. விவாஹ நாள் வந்தவுடன் தந்தையால் கொடுக்கப் பட்ட தேவர்களுக்குரிய ஆபரணங்களை அடைந்த மதந மஞ்சுகைக்குக், கலிங்க ஸேனையும், கணவனுடைய உத்திரவினால் வந்த ஸோமப்ரபையும், அலங்காரம் செய்தார்கள். தேவர்களுக்குரிய அலங்காரங்களை அடைந்த மதந மஞ்சுகை கிருத்திகா நக்ஷத்திரத்துடன்

